# குந்தளப்பிரேமா



எழுதியவர் :
ஸ்ரீ கே. வீ. எஸ். வாஸ், எம். ஏ.,
(செய்திப் பகுதி ஆசிரியர், வீரகேசரி)



வீரகேச
பிரசுர





[ விலை ரூ. 2.50.

# முன்னுரை.

"குந்தளப்பிரேமா" என்னும் இந் நவீனத்தை ஆக்கியவர் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ். அவர் ஒரு சர்வகலாசாலைப் பட்டதாரி. **M. A; Hons.** பட்டம் பெற்றவர். ஆங்கில ஞானமும், தமிழ் ஞானமும், உலக ஞானமும் ஒருங்கே அமையப்பெற்றவர். சிறந்த எழுத்து வன்மையும் நிறைந்த கற்பனு சக்தியும் உள்ளவர். சீர்திருத்த மனேபாவமும், எளியவர்களிடத்து அன்பும், கூட்டுறவு முயற்சியில் ஆர்வமும் உடையவர். ஒழுக்கமும், கடமையை திறமையாகவும் செம்மையாகவும் ஆற்றும் மனேபாவமும் உள்ளவர். நல்ல சுறு சுறுப்பும் எல்லோருடனும் நெருங்கிப் பழகும் மனப் பண்பும் கொண்டவர். இத்தகைய சிறப்புக்கள் நிறைந்த ஸ்ரீ வாஸ் பல்லாண்டுகட்கு முன்னர் எங்கள் வீரகேசரியில் மொழிபெயர்ப்பாளராக வந்து சேர்ந்தார். காலக்கிரமத்தில் நிருபராகவும் செய்திப் பகுதியின் ஆசிரியராகவும் பற்பல சந்தர்ப்பங்களில் மாதக்கணக்கில் பத்திரிகையின் ஆசிரியராகவும் கடமை ஆற்றியும், ஆற்றிக்கொண்டும் வருகிருர். வீரகேசரியின் முன்னேற்றத்திலும் வளர்ச்சியிலும் முக்கிய பங்கெடுத்துக்கொள்ளும் சிலருள் அவரும் ஒருவர்.

இரண்டு வருடங்களுக்கு முன்னர் வீரகேசரியின் வாரப் பதிப்பில் தொடர்ந்து ஒரு நவீனம் பிரசுரிக்கவேண்டுமென்றும் அதற்கு வேண்டுவன செய்யுமாறும் நான் ஸ்ரீ வாஸிடம் கூறினேன். அவர், தான் ஒரு நாவல் எழுதிவைத்திருப்பதாயும் தங்களுக்கு பிடித்தமாகவிருந்தால் அதை பிரசுரிப்போம் என்றும் கூறி குந்தளப்பிரேமாவின் கையெழுத்துப் பிரதியை என்னிடம் காண்பித்தார். படிக்க மிக அழகாக இருந்தது. அதோடு மனித சக்திக்கு உட்பட்டதாயும் அசாத்தியமற்றதாயும் காலப்போக்கிற்கு ஏற்றதாயும் மக்களுக்குச் சில நல் வழிகளை எடுத்துக்காட்டி ஊக்குவிப்பதாயும் காணப்பட்டது. உடன் அதை எங்கள் வாரப் பத்திரிகையில் தொடர்ந்து பிரசுரிக்க ஏற்பாடு செய்தோம். குந்தளப்பிரேமாவை படித்த வாசகர்கள் பெருமிதமான ஆதரவு கொடுத்ததோடு அதைப் புத்தகமாக அச்சிட்டு உதவவேண்டுமென்று எங்களை மிக மிக

வற்புறுத்தினர். அவர்கள் விருப்பப்படியே குந்தளப்பிரேமா புத்தகமாக வெளிவருகிருள்.

விதவா விவாகம் வேண்டும்; அதிலும் உலகமறியாத பால்ய விதவைகளுக்கு மறுமணம் நிச்சயமாக வேண்டும் என்று உலகம் கோஷிக்கின்றது; அறிஞர்கள் ஆதரிக்கின்றனர். சநாதனதர்மிகள் மனதும் மாறுதலடைந்துவருகிறது. ஆகவே சீர்திருத்த முறையில் எழுதிய இக்கற்பனைக் கதையை மக்கள் குதூகலத்தோடு வரவேற்பது இயற்கையே.

கதை ஆரம்ப முதல் முடிவு வரையில் விறுவிறுப்பாகப் போய்க்கொண்டிருக்கிறது. நடை அழகும், சொற் சித்திரங்களும், கற்பனை நயங்களும் மிகமிக உயர்ந்தவை. எத்தகைய வலிய மனம் படைத்தவர்களாயினும், கடைசி இரண்டு அத்தியாகங்களைபடிக்கும்பொழுது தங்களையும் மறந்து, உணர்ச்சி வாய்ப்பட்டு, கண்ணீர் சிந்துவர். எழுத்தும், கதையும், கதை முடிவும் அவ்வளவு சுவாரஸ்யமாக அமைந்திருக்கிறது.

எங்கள் **வீரகேசரி** பத்திரிகையில் வெளிவந்த இக்கதையைப்பற்றியும் நாங்கள் பிரசுரம் செய்த இப்புத்தகத்தைப் பற்றியும் நாங்களே புகழ்ந்து கொள்ளுவது தற்பெருமை என்று கூறி சிலர் எள்ளிநகையாடுவர். அது எப்படி இருப்பினும் எழுத்தின் ஓவியத்தையும் அதன் சிறப்பையும், ஓவியத்தை ஆக்கியவரின் திறமையையும் போற்றிப் புகழவேண்டுவது எங்களது தவிர்க்கமுடியாத கடமை. அந்தக் கடமையே இந்த முன்னுரை.

**குந்தளப்பிரேமா**வை வாசித்து மகிழ்ந்து எங்களை உற்சாகப்படுத்திய வாசக நேயர்கள் அனைவருக்கும் எங்களின் வணக்கம். குந்தளப்பிரேமாவிற்குப் பிறகு எங்களின் அடுத்த வெளியீடாக உங்கள் அனைவரையும் மகிழ்வித்த **"நந்தினி"** புத்தக ரூபமாக வெளிவரவிருக்கிருள் என்னும்சந்தோஷ செய்தியையும் உங்களுக்கு இங்கு ஞாபகப்படுத்த விரும்புகிறோம்.

பெ. பெரி. சுப்பிரமணியச் செட்டியார்,
தலைவர்,
வீரகேசரி லிமிடெட்.

கொழும்பு,
**24-9-51.**

# அறிமுகம்



**யாம்** அறிந்த மனிதர்களுக்குள்ளே ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் ஓர் அபூர்வமான மனிதர். எழுத்தாளர்களுக்குள்ளே அவர் ஓர் அதிசயமான எழுத்தாளர். பத்திரிகையாளரிலே அவரைப்போல் சுருசுருப்பும் திறமையும் உள்ளவர்களைக் காண்பது அரிது. அவருடைய வேலை செய்யும் சக்தியைப் பார்த்துவிட்டு ஒரு சமயம் நான் அவரை **அறுபது டன் ருஷியடாங்கி** என்று குறிப்பிட்டேன். ஸ்ரீ கே. வி. எஸ. வாஸ் அவர்களை அறிந்த நண்பர்கள் பலரும் அதை மனப்பூர்வமாக ஆதரித்தார்கள். சிலர் மட்டும் நிறையைப்பற்றிச் சிறிது ஆட்சேபித்தார்கள். எண்பது டன் அமெரிக்க டாங்கி என்று சொல்லவேண்டும் என்றார்கள்.

இலங்கையில் தமிழர் சமூகத்துக்கே பெருமையளிக்கும் முறையில் நடந்துவரும் "வீரகேசரி" பத்திரிகையில் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் பணி ஆற்றுகிறார். பொறுப்பு வாய்ந்த நியூஸ் எடிட்டர் உத்தியோகம். அத்துடன் சில சமயம் ரிப்போர்ட்டர் வேலையும் பார்க்கிறார். தமிழ்ச்சங்க மகாநாட்டில் ஒரு நாள் ஏழு எட்டுப் பிரசங்கிகள் சரமாரியாகச் செய்த சொற்பொழிவுகளை அவர் ஒருவராகவே குறித்துக்கொண்டு போய்ப் பத்திரிகையில் பன்னிரண்டு பத்தி

கள் வரும்படியாக இரவுக்கிரவே எழுதிக் கொடுத்துவிட்டார். அவ்வளவும், வரிக்குவரி சரியாக இருந்தது!

இலங்கை மந்திரிகள், அரசியல் தலைவர்கள், சமூகத் தலைவர்கள் முதல், இந்தியாவிலிருந்துவரும் விருந்தாளிகள் வரையில் எல்லோருடனும் நேராகவோ, டெலிபோன் மூலமாகவோ தொடர்புவைத்துக்கொள்கிறார். உசிதமான அளவு அவர்களுடைய அபிப்பிராயங்களைப்பேட்டி நிருபமாக எழுதி விடுகிறார்.

இந்தியாவிலும் மலாய் நாட்டிலும் நடைபெறும் பல ஆங்கில, தமிழ்ப் பத்திரிகைகளுக்கு விசேஷ நிருபராயிருந்து செய்திகள் அனுப்பிவருகிறார்.

இலங்கையில் பலவித இன்னல்களுக்கு உள்ளாகிவரும் இந்திய மக்களின் குறைகளை அவ்வப்போது சக்திவாய்ந்த நடையில் வெளியிட்டுத் தொண்டுபுரிகிறார்.

இவ்வளவுக்கும் மேலாக, தாம் பணிபுரியும் தினப் பத்திரிகையில் தொடர்கதைகளும் எழுதி வெளியிட்டு வருகிறார் என்றால், அவருடைய வேலைத்திறனை எப்படித்தான் பாராட்டுவது என்று தெரியவில்லை!

இப்படிப் பல ஆச்சரியக் குறிகள் போட்டு, விட்டுவிட வேண்டியதுதான்.

குந்தளப்பிரேமா என்னும் இந்தத் தொடர்கதையை முழுமையாக ஒரேமூச்சில் நான் படித்து முடித்தேன். கதையின் சுவையும், தமிழ் நடையும், சரளமும், சம்பாஷணைத் திறனும் அப்படியாக என் கவனத்தைக் கவர்ந்து இழுத்துச் சென்று முற்றிற்று என்ற இடத்திலே கொண்டுவந்துதான் நிறுத்தின.

இந்த நாவல் முக்கியமாக எழுத்தாளர்களையும், எழுத்தாளிகளையும் பற்றியது. எழுத்தாளி என்பது பெண்பால் ஆகாதென்றால், எழுத்தாளினி என்று வைத்துக்கொள்ளுங்கள். சிறு பெண்களை வைதவ்யம் என்னும் கொடுமைக்கு

ஆளாக்கி வைக்கும் சமூக வழக்கத்தை வன்மையாகக் கண்டிக்கும் சீர்திருத்த நோக்கம் கொண்டது. கதாநாயகி கதை ஆசிரியை; கதாநாயகனும் கதை ஆசிரியன். இவர்களுடைய வாழ்க்கையைச் சிக்கலாக்குவதற்கும் பிறகு சிக்கலை எடுப்பதற்கும் இவர்கள் எழுதும் கதைகளே உதவுகின்றன. இவ்வாறு கதைக்குள் கதைகள் பின்னிக்கொண்டு கிடக்கின்றன. இவர்களுக்கு மேலும் உதவிசெய்யச் சில பதிப்பாளர்களும் எழுத்தாளர்களும் வந்து சேருகிறார்கள். மொத்தத்தில் எழுத்தாளர் வர்க்கத்துக்கு அமோகமான உற்சாகத்தை ஊட்டக்கூடிய கதை.

இதைக் கேளுங்கள்:- "சாந்தாவின் மூன்றாவது புத்தகமாகிய ஆற்றங்கரை அம்மன் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களையெல்லாம் பித்துப்பிடிக்க அடித்துவிட்டது. கமலாலயத்திற்கு நூற்றுக்கணக்கான பாராட்டுக் கடிதங்கள் வந்து குவிந்தன. இரண்டே வாரங்களில் எழுபதினாயிரம் பிரதிகள் விற்ற புத்தகமும் இல்லை; அதை வெளியிட்டுத் தமிழ்ப்பணியாற்றிய கமலாலயத்திற்கு ஈடுமில்லை என்று பெருமையடைந்தாள் வஸு."

அம்மம்மா! இரண்டே வாரங்களில் எழுபதினாயிரம் பிரதிகள் விற்பனையாமே, கேட்டீர்களா கதையை?

அத்தகைய அதிசயமான புத்தகத்தைப் பிரசுரித்த கமலாலயம் சொந்தக்காரரான கேசவன் கூறுவதையும் கேட்டு வையுங்கள்:- "எழுத்தாளர்களுக்குப் பணக்கஷ்டம் ஒரு பெரிய சத்ரு. பணக்கவலையிருந்தால் கற்பனைகள் சிதைந்துவிடும், என் தகப்பனார் அடிக்கடி சொல்லுவார், சிறந்த எழுத்தாளர் என்று நிச்சயமாகத் தெரிந்தால் அவருக்குக் கை நிறையப் பணம் கொடு. கொடுப்பதைப்போல் பத்துமடங்கு சம்பாதித்துக்கொள்ளலாம் என்று."

அடடா! படிக்கும்போதே கை ஊறுகிறது! கை நிறையப் பணம் பெற்றுக்கொள்ளத்தான்! எத்தனையோ தமிழ்

எழுத்தாளரின் கனவையெல்லாம் நனவாக்கிவிட்டார் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் இந்தக் கதையில். அவருடைய பேனாவின் மகிமையே மகிமை. இலங்கையில் நான் சிலநாள் தங்கியிருந்தபோது அவருடைய பேனாவை அடித்துக்கொண்டுவரப் பல சந்தர்ப்பங்கள் ஏற்பட்டன! அப்படிச் செய்யாமல் வந்துவிட்டோமே என்று இப்போது கவலையாயிருக்கிறது. இந்தியாவிலிருந்து இலங்கைவர விரும்புவோர் அர்த்தமற்ற சட்டதிட்டங்களினால் எவ்வளவு அவதிகளுக்கு உள்ளாகவேண்டி வருகிறது என்பதை நாஸூக்காக இப் புத்தகத்தில் புகுத்தியிருக்கிறார் ஆசிரியர்.

கமலாலயம் சொந்தக்காரரைப்போன்ற ஒரு பிரசுரகர்த்தரை ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ் இந்தப் புத்தகத்தை வெளியிடுவதற்குக் கண்டுபிடிப்பார் என்று எதிர்பார்க்கிறேன்.

அந்தப் பிரசுரகர்த்தருக்கே என்னுடைய அடுத்த புத்தகத்தை அனுப்பிவைக்கலாமென்ற ஆசைதான் காரணம்.

வாழ்க எழுத்தாளர் ஸ்ரீ கே. வி. எஸ். வாஸ்.
வாழ்க அவருடைய பேனாமுனை!

சென்னை,
29-12-1950.

ரா. கிருஷ்ணமூர்த்தி
"கல்கி" ஆசிரியர்.

# குந்தளப்பிரேமா

## 1. கல்யாணப்பித்து

"அப்பா! அப்பா!" என்று அழைத்துக் கொண்டே ஓடிவந்தாள் குந்தளம். அவள் உடலெல்லாம் ஒரே புழுதி. தெருவில் குதித்து விளையாடி புழுதியை வாரிப்பூசிக் கொண்டு வந்திருக்கிறாள்.

'ஏனம்மா இறைக்க இறைக்க ஓடிவருகிறாய்? இப்பொழுதுதானே குளித்துப் புதுப் பாவாடை கட்டிக் கொண்டு போனாய்? இப்படியா தெருப் புழுதியையெல்லாம் உடம்பில் வாரிப் பூசிக்கொண்டு வருவது?'

'அதெல்லாம் கிடக்கட்டுமப்பா! நான் அத்தான் சுந்தரத்தைக் கல்யாணம் பண்ணிக் கட்டுமாப்பா? சரின்னு சொன்னாத்தான்!' என்று சிறுமி குந்தளம் தனது தகப்பனார் பாஸ்கரய்யரின் தோட்களைப் பற்றிக்கொண்டே கொஞ்சிக்கொஞ்சி வினவினாள்.

கல்யாணம் என்ற வார்த்தை அய்யருக்கு தூக்கி வாரிப் போட்ட மாதிரி யிருந்தது. சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த அவர் ஆணி வைத்து அறைந்தது போல அப்படியே ஸ்தம்பித்துப்போனார். விபரம் அறியாக் குழந்தையான குந்தளத்தினிட மிருந்து இத்தகைய வார்த்தையை அவர் எதிர்பார்க்கவேயில்லை.

'ஏனப்பா பதில் சொல்லமாட்டேங்கரே! அடுத்தாத்து மாலதிக்கு மட்டும் இன்னிக்கு கல்யாணமாமே! அதோ பார்,

மேளம் 'பீப்பீ' எல்லாம் வாசிக்கிறது! எனக்கும் அது மாதிரி மேளமெல்லாம் கொட்டி கல்யாணம் பண்ணி வைக்கமாட்டியா!'

குந்தளத்துக்கு என்ன பதில் சொல்லுவதென்று அய்யருக்குத் தோன்றவில்லை. குழந்தை பார்த்துவிடப் போகிருளே என்று பயந்து முகத்தை ஒரு பக்கமாகத் திருப்பி கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

ஆனல் குந்தளமா அவரை இலேசில் விடுகிறவள்?

'ஏனப்பா ஒண்ணுமே சொல்லமாட்டேங்கரே? மாலதி மட்டும் ஓசத்தியாக்கும்! அவளைப்போலே நானும் நன்ன பாடமாட்டேனே? கணக்கிலேகூட அவளை விட நான் தானப்பா ஜாஸ்தி மார்க்கு வாங்கினேன் பள்ளிக்கூடத்தில்! மாலதியை விட நான் இன்னும் நன்ன நலங்கிடுவேனே! எனக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு நினைச்சுண்டிருக்கா இந்த அசட்டு அப்பா! இதோ இப்ப உனக்கு நலங்கிட்டு காட்டறேன் பார்க்கரையா? நன்ன இடத் தெரிஞ்சால் கல்யாணம் பண்ணி வை! இல்லாட்டால் வேண்டாம், சரியாப்பா?'

குந்தளத்தின் ஒவ்வொரு வார்த்தையும் கூர்மையான வாள்கொண்டு அறுப்பதுபோல் அய்யரின் நெஞ்சத்தை அறுத்தன. கொலையை விட இன்னும் பெரிய குற்றம் செய்தவரைப்போல சப்த நாடிகளும் ஒடுங்கிப் போனர். குந்தளத்தின் முதுகில் தட்டி கன்னத்தில் ஒரு முத்தமிட்டு ஏதோ சொல்லுவதற்கு வாயெடுத்தார். அதற்குள் குந்தளம் மடமடவென்று பேசிக்கொண்டே போனள்.

'போப்பா! உனக்கு முத்தமிடவே தெரியலை! அத்தான் சுந்தரம் கொஞ்சம்கூட குத்தாமே வலிக்காமே எவ்வளவு நன்ன முத்தம் குடுப்பான் தெரியுமா? நான் அவனையே கல்யாணம் பண்ணிக்கட்டுமாப்பா? சரின்னு சொல்றையா, மாட்டியா?' என்று தொனி மாறிப் பிடிவாதத்தில் ஆரம்பித்தாள் குந்தளம்.

அதற்குமேல் மௌனம் சாதித்தால் என்ன நடக்குமென்பது அய்யருக்குத் தெரியும். கிராமபோன் பிளேட்டு வைத்தமாதிரி குந்தளம் அழ ஆரம்பித்துவிட்டால் இலேசில் அவளைச் சமாதானப் படுத்த முடியாது. ஷேட்டுக்கடைப் பக்ஷணம் ஒரு செட்டு வரவேண்டும். அதையும் சுந்தரம் கொடுத்து விளையாட்டுக்காட்டி குந்தளத்தின் அழுகையை நிறுத்துவதற்குள் வீட்டில் எல்லோருக்கும் வியர்த்து விறுவிறுத்துவிடும்.

'இருந்தாலும் பெண்ணாய்ப் பிறந்தவளுக்கு இத்தனை பிடிவாதமும் மூர்க்கத்தனமும் கூடவே கூடாது! தங்கப் பவுனைப் பார்த்து அய்யாவுக்கு மோதிரமாகு, சங்கிலியாகு, என்றால் தானே ஆகிவிடுமா? அதை உருக்கி, அடித்து நீட்டி, வளைத்துத்தானே மோதிரமாயும் சங்கிலியாயும் செய்யணும்? பெண்களும் அப்படித்தான்! சிறு வயதிலேயே அடித்து பயமுறுத்தி வளர்க்காமல் தான்றோன்றியாக வளர விட்டால் அடக்கமும் நல்ல குணமும் வயசு காலத்தில் எப்படி திடீரென்று வரும்?'

பாஸ்கரய்யர் தங்கை அம்புஜம் பொழுதுபொழுதாக இப்படி சொல்லுவாள். ஆனால், அவள் வார்த்தையை அய்யர் காதில் போட்டுக்கொள்வதேயில்லை. குந்தளத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் ஏன், அவளைப்பற்றி நினைக்கும் பொழுதெல்லாங்கூட பயங்கரமான, மன்னிப்பே இல்லாத பெருங் குற்றம் செய்து விட்டவரைப்போல அவர் குன்றிப் போவார். அந்தக் குழந்தையை 'சீ' யென்று ஒரு வார்த்தை அதட்டிப் பேசவும் அவருக்கு தைரியமில்லை; தைரியமிருந்தாலும் உரிமையிருப்பதாக அவர் நினைக்கவில்லை.

'சுந்தரம் அத்தான் இருக்கான் பாரு அப்பா, அவன் எங்கிட்ட எத்தனை பிரியமாயிருக்கான் தெரியுமா? நேத்திக்கு நீ அவனுக்கு நாலு பிஸ்கோத்து கொடுத்தியே, அதில் மூணு பிஸ்கோத்தை எனக்குக் கொடுத்துட்டானப்பா! நான் அவனையே கல்யாணம் பண்ணிக்கப்படாதா? ஊம்னு சொன்னாத்தான்!'

குந்தளம் இப்படிப் பிடிவாதமாக மறுபடி தொந்தரவு செய்யவும் அய்யர் தன்னை சமாதானம் செய்து கொண்டு 'உனக்கு இனிமே கல்யாணம், கார்த்திகை ஒண்ணுமே கிடையாதம்மா! ஏற்கனவே கல்யாணம் நடந்து உன் புருஷன் சுவர்க்கலோகத்துக்குப் போய்விட்டான்!' என்று தழுதழுத்த தொனியில் சொன்னார்.

'சொர்க்கலோகத்துக்குப் போய்ட்டானா? அங்கே என்னப்பா செய்ருன்? நான் அவனைப் பார்த்ததேயில்லையே! நாம்ப எல்லோருமா சொர்க்கத்துக்குப்போய் அவனை கூட்டிண்டு வந்திடுவமா? கொஞ்சம் இரு அப்பா, சுந்தரம் அத்தானையும் அழைச்சுண்டு வரேன். எல்லோருமா சேர்ந்துபோகலாம்!'



இப்படி சொல்லிவிட்டு குந்தளம் அத்தானை தேடிக்கொண்டு ஒரே ஓட்டமாக மேல்மாடிக்கு ஓடினாள். அப்பொழுது சுந்தரம் பள்ளிக்கூடப் பாடங்களைப் படித்துக்கொண்டிருந்தான். குந்தளம் அவன் கையிலிருந்த புத்தகத்தைப் பிடுங்கி வைத்துக்கொண்டு 'நாங்களெல்லாம் இப்ப சொர்க்கத்துக்குப் போகப்போறோம்! நீயும் வரையா இல்லையா?' என்றாள்.

சுந்தரத்துக்கு தலை கால் புரியவில்லை.

'அட அசடே! சொர்க்கத்துக்காவது நாமெல்லாம் போவதாவது! அங்கே ஒருவரும் போகமுடியாது குந்தளம்!'

'பேர் அத்தான் பொய்யும் புளுகும் சொல்றே! ஒத்தருமே போகமுடியாதுன்னு என் புருஷன் மட்டும் எப்படிப் போறனும்! அவனை அழைச்சுண்டுவர அப்பா, அத்தை, நான் எல்லாரும் போகப்போறேம்! நிஜமாய்த்தான் அத்தான்! அப்பாவை வேணும்னு கேட்டுப்பாரு!'

'சரி நீ போ, நான் பின்னால் வரேன்!' என்று சொல்லி சுந்தரம் தட்டிக்கழித்துவிட்டான்.

குந்தளம் மறுபடியும் தகப்பனாரிடம் வந்து உடனே சொர்க்கத்துக்குப் புறப்பட்டால்தான் ஆச்சு என்று அரித்துப் பிடுங்க ஆரம்பித்தாள். இந்த அரிப்பு வழக்கம்போல அழுகையில் வந்து முடிந்து, வீடு அல்லோலகல்லோலப் பட்டது. அத்தை தன்னுடைய பழைய புராணத்தைப் படிக்க ஆரம்பித்தாள். சுந்தரம் நயமாகப்பேசி அழுகையை நிறுத்த முயற்சித்தான்.

'அட அசடே! உனக்கு கல்யாணமும் ஆகலே, உன் அத்துக்காரர் சொர்க்கத்துக்குப் போகவும் இல்லே! அப்பா சும்மா விளையாட்டுக்குன்னு சொன்னார்! அசடுமாதிரி அழறது பார்த்தையா? எங்கே சிரி கொஞ்சம். சிரியேன் பார்க்கலாம்!'

'அப்படின்னு அப்பா சொன்னதெல்லாம் பொய்யா?'

'ஆமாம்! நிஜம்னு நினைச்சுட்டியா என்ன? சொர்க்கம், நரகம் என்று சொல்லுவதெல்லாமே சுத்தப் பொய்தான் குந்தளம்? அப்பா உனக்கு வேடிக்கையாகத்தான் சொன்னார்! அசடுமாதிரி அங்கே போகணும்னு அழக் கிளம்பிட்டையே! எங்கே கொஞ்சம் சிரியேன் பார்க்கலாம்!'

விம்மல் நிற்காமலே கன்னங்களின் வழியாகக் கண்ணீர் வழிய மெதுவாகச் சிரித்தாள் குந்தளம்.

'அழுத பிள்ளை சிரிக்குமாம், கழுதைப்பாலைக் குடிக்குமாம்!' என்று கேலியாக ராகம் வைத்தவண்ணம் குந்தளத்தைத் தரதரவென்று இழுத்துக்கொண்டு விளையாடப் போய்விட்டான் சுந்தரம்.

இந்தக் காட்சி முழுவதையும் பாஸ்கரய்யர் மௌன மாக, ஆடாமல் அசையாமல் பார்த்துக்கொண்டிருந்தார். அம்புஜமும் பார்த்துக்கொண்டுதானிருந்தாள். ஆனால், இரு வர் மனமும் வெவ்வேறு விதமாக வேலை செய்தன.

இந்தச் சம்பவம் நடந்தபொழுது குந்தளத்துக்கு சுமார் ஏழு வயதிருக்கும். சாதாரண மனித பாஷையிலே அவள் ஒரு விதவை. பட்டர் ஜாதியிலே ஆறேழு வயதுச் சிறுமி விதவையாவதென்பது ஒரு ஆச்சர்ய சம்பவமில்லை. சைவ பட்டர்களிலும் வைஷ்ணவ பட்டாச்சாரியார்களிலும் தொட்டிலில் கிடக்கும் குழந்தைகளுக்குக்கூட கல்யாணம் செய்துவைத்துவிடுவார்கள். கும்பகோணத்தில் ஹரிஹர பட்டரென்று சொன்னால் சப் கலெக்டர் முதல் மளிகைக் கடைக்காரன்வரையில் அத்தனை பேர்களும் 'தங்கமான மனுஷன்' என்று ஒரு முகமாகச் சொல்லுவார்கள். ஸ்வாமி தரிசனத்துக்கு வரும் கிழவிகளை ஒருவிதமாகவும் குமரிகளை இன்னொருவிதமாகவும் நடத்தாமல் எல்லோரையும் ஒரே விதமாக நடத்துவதென்றால் பட்டர், பட்டாச்சாரிகளின் கூட்டத்திற்கே இது ஒரு பெரிய விதிவிலக்கல்லவா?

ஏழை, பணக்காரன், ஆண், பெண், வயோதிகர், இளை ஞர், பிராமணர், வேறு குலத்தவர். முதலிய எவராயிருந் தாலும் ஆலயத்தில் ஸ்வாமி தரிசனத்துக்கு வருபவர்கள் வரிசைக்கிரமமாகவே கர்ப்பக்கிரகத்துக்கு வந்தாகவேண்டும். ஹரிஹரபட்டர் பிரதம பட்டராயிருக்கும் கோவிலில் சலுகை என்ற வார்த்தைக்கு இடம் கிடையாது. இதனால்தான் பொதுஜனங்களிடையே அவருக்கு அவ்வளவு மதிப்பும் செல்வாக்குமிருந்தது.

ஹரிஹர பட்டருக்கு 20 வேலிக்குடித்தனம். பரம்பரை யாகவே அவர் பெரிய பணக்காரர்; அறிவாளி; சாஸ்திர விற்பன்னர்; அதோடு உலகப்போக்கை ஓரளவு அனுச ரித்து நடப்பவருங்கூட. குடும்பத்தில் வம்ச பரம்பரையாக வந்த தொழிலை விட்டுவிடக்கூடாதென்பதற்காகவே அவர் கோவில் பூஜையை வைத்துக்கொண்டிருந்தாரேதவிர வரு மானத்தை எண்ணியல்ல.

'நான் ஒருவன் மட்டும் இல்லாவிட்டால் இந்தக் கோயில் குட்டிச்சுவராய்ப் போயிருக்கும்!' என்று அவர் அடிக்கடி பெருமையாகச் சொல்லிக்கொள்ளுவதுண்டு. அது வீண் பெருமையுமில்லே. கோவிலில் உள்ள கடவுளின் நன்மையை யும் அவரை நாடிவரும் பக்தர்களேயும் உத்தேசித்தாவது ஹரிஹர பட்டர், நீடூழி வாழவேண்டுமென்று பெரும் பாலோர் பிரார்த்தித்தனர்.

மூப்பும், மரணமும், பிரார்த்தனைகளில் ஏமாந்து விடுவ தில்லே.

ஹரிஹர பட்டருக்கு பக்தகோடிகளின் பிரார்த்தனை பலமும், ஆசிர்வாத பலமும் ஒருபுறமிருக்க, கோவிலில் உள்ள சிலேயைக் கண்கண்ட தெய்வமென்று ஜனங்கள் கொண் டாடியதற்கே அவருடைய பரிசுத்த பூஜா நியதிகள்தான் மூலகாரணமாயிருந்தன. அந்த கண்கண்ட தெய்வத்திற் காவது நன்றி இருந்ததா? எல்லா மனிதர்களுக்கும் வரும் சாவு ஹரிஹர பட்டருக்கும் வந்துவிட்டது!

ஹரிஹரருக்கு ரகுபதி என்று ஒரே பிள்ளே. அப் பொழுது அவனுக்கு ஒன்பது வயதிருக்கும். பட்டர் இறந் ததும் அவருடைய தம்பி சந்தானசர்மா ரகுபதியின் சொத் துக்களே நிர்வகித்துக்கொடுக்க வீட்டோடு வீடாக வந்து சேர்ந்தார். ரகுபதி சிறுவனென்றாலும் தகப்பனாரின் சிட் சையில் பூஜாமந்திரங்களே யெல்லாம் உருப்போட்டுவைத் திருந்தான். ஆயினும் கல்யாணமாகாத பிரம்மச்சாரி கோவில் பூஜைகள் செய்யக்கூடாதென்பது ஒரு கண்டிப்பானவிதி. இதை உத்தேசித்து ரகுபதிக்கு எப்படியாவது ஒரு பெண்ணே முடிச்சுப்போட்டுவிட சந்தான சர்மா முயற்சித் தார். பக்கத்து வீட்டுபாஸ்கரய்யர் பெண் குந்தளத்தின் மீது அவர் திருஷ்டி விழுந்தது.

'குழந்தைக்கு நான்கு வயதுகூட சரியாக முடிய வில்லேயே அதற்குள்ளாகவா கல்யாணம்! பத்து வயதாவது ஆகட்டும். பிழைத்துக்கிடந்தால் பிறகு பார்த்துக்கொள்ள லாம்' என்று சொல்லிப்பார்த்தார் பாஸ்கரய்யர்.

'என்ன ஸ்வாமி விஷயம் தெரியாமல் பேசுகிறீர்! இன்று கோவிலில் வேறொருவனைக் கொண்டுவந்து வைத்து விட்டு ஐந்தாறு வருஷம் கழித்து போ என்றால் போவானா? கோவிலில் தனக்கும் பாத்யதை உண்டென்று வியாஜ்ஜியம் போடுவான். கோர்ட்டில் போய் இழுத்துக்கொண்டு நிற்கவேணும் பிறகு! கோவில் நிலம் ஐந்தாறுவேலியைத் தான் விடுவானேன்? ஒன்றுக்கும் யோசிக்காதேயும்! இப்பவே ஒரு கல்யாணத்தைப்பண்ணி ரகுபதியை கோவிலுக்கும் வாரிசாக்கிவிட்டால் அந்த சொத்தும் பிறகு நம் குழந்தைகளுக்குத்தானே?' என்று வாதம் செய்தார் சர்மா.

அது ஒரு விதத்தில் நியாயமாகவே தோன்றியது பாஸ்கரய்யருக்கும். காலதாமதமில்லாமல் அடுத்த முகூர்த்தத்திலேயே ரகுபதிக்கும் குந்தளத்துக்கும் கல்யாணம் நடந்துவிட்டது.

ரகுபதி சம்பந்தப்பட்டவரையில் அந்தக் கல்யாணம் அவனுக்கு காலனை அழைக்கும் சடங்காகவே முடிந்தது. இரண்டு மாதங்களுக்குப்பின் ஆடிமாதம் காவேரிநதி கரை புரண்டோடும்பொழுது பதினெட்டாம் பெருக்குக்கு புளியஞ்சாதம், தயிர்சாதம், பொங்கல் முதலிய பலவகை உண்டிகளுடன் உற்றார் உறவினர்களோடு அவன் நதிக்கரைக்குப் போனான். போனவன் போனவன்தான்; திரும்பவேயில்லை. தகப்பன் பக்திபரவசத்துடன் பல வருடகாலம் செய்த பூஜைகளுக்கு பிரதியுபகாரமாக அந்தக் கோவில் தெய்வம் காவேரியம்மனுடன் ரகுபதியையும் ஐக்கியப்படுத்திவிட்டது!

ரகுபதியின் அகால மரணத்தைக் கேட்டு ஊரே கண்ணீர் வடித்தது. பாஸ்கரய்யர் புழுவாய்த் துடித்துப்போனார். 'கோவிலில் இருப்பது கடவுளில்லையடா, கல்லு, வெறும் பாராங்கல்லு' என்று சபித்தனர் பலர் அனுதாப மேலீட்டினால்! ஆனால் அந்தக் கோவிலில் ஜனங்கள் விளக்கேற்றாமலிருந்துவிட்டார்களா? அல்லது பாஸ்கரய்யர்தான் துக்கத்தில் உயிரை விட்டுவிட்டாரா? இரண்டுமில்லை!

ரகுபதி அத்தான் விளையாடுவதற்கு வரவில்லையே என்று குந்தளம் ஏங்கிப்போனாள். எப்பொழுதாவது அவளை வெளியில் கண்டால் 'இதோ இந்த மூதேவியின் கிரஹதோஷம் தான் ஹரிஹர பட்டரின் குடும்பத்தையே நிர்மூலமாக்கி விட்டது!' என்று தெருவிலுள்ளவர்கள் ஏச ஆரம்பித்தனர். 'சின்னஞ்சிறு குழந்தை விதவையாகிவிட்டதே' என்று அனுதாபப்படுவார் ஒருவருமில்லை. குந்தளத்தின் வாழ்க்கையில் இப்படிப் பெரிய இடி விழுமென்று தெரிந்துதானோ என்னவோ அவள் பிறந்த எட்டாவது மாதத்திலேயே தாயார் பரலோகப்பிராப்தியடைந்து விட்டாள். ஊராரின் ஏச்சையும் பேச்சையும் பொறுக்கமுடியாமலும் குந்தளத்தின் வாழ்க்கையையே அடியோடு வேறுதிசையில் திருப்ப வேண்டுமென்பதற்காகவும் பாஸ்கரய்யர் கும்பகோணத்துக்கு ஒரு முழுக்குப்போட்டுவிட்டு திருச்சினாப்பள்ளியில் குடியேறினார். அவருடைய தங்கை அம்புஜம் ஒரு பால்ய விதவை. தன் ஒரே குழந்தை சுந்தரத்துடன் விளநகர் கிராமத்தில் அவள் வசித்துவந்தாள். அவளையும் பாஸ்கரய்யர் திருச்சிக்கு அழைத்து வைத்துக்கொண்டார்.

ரகுபதி அத்தானை இழந்தது குந்தளத்துக்கு முதலில் ஒரு மாதிரியாயிருந்த தென்றாலும் சுந்தரம் வந்தது முதல் ரகுபதியை அடியோடு அவள் மறந்துவிட்டாள். அவர்களிருவரும் சேர்ந்து ஓடியாடி விளையாடுவதைப் பார்க்கும் பொழுதெல்லாம் பாஸ்கரய்யர் மனம் வெதும்பும். சிற்சில சமயங்களில் குந்தளம் விஷயமறியாமல் கேட்கும் கேள்விகள் 'அடபாவி! என்வாழ்வைப் பாழ்படுத்திவிட்டாயே!' என்று சபிப்பதுபோலவுமிருக்கும்.

இப்படியே மேலும் இரண்டு வருடங்கள் கழிந்தன. இதற்கிடையில் அம்புஜத்தின் தூண்டுதலின் பேரில் சந்தான சர்மாமீது வியாஜ்ஜியம் போட்டு ரகுபதியின் சகல சொத்துக்களையும் குந்தளத்துக்காக ஐயர் ஸ்வீகரித்துக்கொண்டார். ரொக்கமாக பத்து லட்ச ரூபாயும் 20 வேலி நிலமும் மூன்று தலைமுறைகளுக்குப் போதும்படியான வெள்ளி, பித்தளைப் பாத்திரங்களும் கிடைத்தன.

ஐயர் தம்முடைய சொந்த சொத்துக்களையெல்லாம் சுந்தரத்துக்கு எழுதி வைத்தார். இதில் அம்புஜத்திற்கு பரம திருப்தி. இப்படி ஏராளப் பணமிருந்தும் சீரழிந்து லக்ஷ்மி கடாக்ஷமின்றி நடந்தது அந்தக்குடும்பம்.

நிற்க, அடுத்தவீட்டுப்பெண் மாலதிக்குக் கல்யாணம் வந்தாலும் வந்தது குந்தளத்துக்கு கல்யாணப்பித்து தலைக் கேறிவிட்டது. கல்யாணமென்றால் என்ன? எதற்காக கல்யாணம் செய்துகொள்ளவேண்டும்? என்பதைப்பற்றியெல்லாம் அவளுக்குக் கவலையில்லை. மாலதி மாலையிட்ட மாதிரி தானும் மாலையிடவேண்டும்; அவளைப்போலவே தானும் நலங்கிடவேண்டும்; அவள் ஒருவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு அக்னிகுண்டத்தைச் சுற்றிவந்தது போலவே தானும் சுந்தரத்தின் கையைப்பிடித்துக்கொண்டு சுற்றிவரவேண்டும். அவளுடைய கற்பனையில் கல்யாணம் இந்த இரண்டு மூன்று விஷயங்களில் அடங்கிவிட்டது!

அன்றிரவு சாப்பாடு முடிந்து படுக்கப்போவதன் முன்னால் குந்தளம் கேட்டாள்: 'ஏன் அப்பா எனக்கும் சுந்தரத்துக்கும் மாலதியாத்திலே நடந்த மாதிரி கல்யாணம் பண்ணிவைக்க மாட்டேங்கறே! அத்தான் ரொம்ப நல்லவன்! என்னை அடிக்கவே அடிக்கமாட்டான்!'

குந்தளம் மறுபடியும் பிடிவாதத்தில் இறங்கிவிடுவாளோ என்று பயந்த பாஸ்கரய்யர் 'ஆகட்டும் அம்மா; பொழுது விடியட்டும், கல்யாணம் பண்ணிவைச்சுட்றேன். இப்ப தூங்கு!' என்று ஒருவிதமாக சமாதானப்படுத்தி உறங்க வைத்தார்.

விடியற்காலை நான்கு மணியிருக்கும். குந்தளம் குய்யோ முறையோ என்று அலறிக்கொண்டு எழுந்தாள். பூச்சி ஏதாவது கடித்திருக்குமோ என்று பயந்து ஐயரும் அம்புஜமும் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடிவந்தார்கள். குந்தளம் போட்ட சப்தத்தில் அயர்ந்து உறங்கிய சுந்தரம்கூட விழித்துக்கொண்டுவிட்டான்.

ஐயர் குந்தளத்தைத் 'தூக்கி மடியில் வைத்துக்கொண்டு அழாதேயம்மா! ஏதாவது கெட்ட சொப்பனம் கண்டாயா? ஐயோ பாவமே! இப்படி கேவிக்கேவி அழறதே, குழந்தை! பிஸ்கோத்து கொண்டுவரச் சொல்லட்டுமா? அம்புஜம், நீ தான் போய் அலமாரியைத் திறந்து இரண்டு பிஸ்கோத்து கோண்டுவாயேன்!' என்று என்னென்னவோ சொல்லி சமாதானப்படுத்த முயற்சித்தார்.

'பிஸ்கோத்தும் வேணும்; ஒண்ணும் வேணும் போ! ஊம்........ ஹூம்........!

'பின்னே என்ன வேணும்? சொல்லாமல் அழுதால் எனக்கு எப்படியம்மா தெரியும்?'

'அப்படின்னு நீ ஏன் மாட்டவே மாட்டேன்னியாம்!'

'நீ என்ன கேட்டாய், நான் என்ன தரமாட்டேன்னு சொன்னேன்?'

'நான் சுந்தரம் அத்தானை ஏன் கல்யாணம் பண்ணிக் கக்கூடாதுன்னே?

'அட கடவுளே! சொப்பனத்திலும் இந்த ஞாபகம் தானா? என்ன சோதனை இது! குந்தளம், நீ சமத்தோனே, அழாமே படுத்துக்கோ பொழுது விடிஞ்ச உடனே கல்யாணம் பண்ணி வைச்சுட்டு மறுவேலை பார்க்கிறேன்!.'

'ஊஹூம், முடியாது. இப்பவே பண்ணல்தான்!'

'ரொம்ப அழகாயிருக்கு நீயும் உன் குழந்தையும்! யாரு காதிலே யாவது விழுந்தால் சிரிக்கப்போறா! பொண்ணும் பொண்ணு, நல்ல பொண்ணு! முதுகிலே நாலு வைச்சு படுக்கச் சொல்றதைவிட்டு கொஞ்சு கொஞ்சுன்னு கொஞ்சுறான் பாரு! பாஸ்கரா! மூளையிலே அடக்கி வளர்க்காவிட்டால் பிறகு என்ன ஆகிவிடும் தெரியுமோன்னு? அதைத்தான் நான் சொல்லுவானேன்; அருமைப் பெண்ணைக் கண்டால் கரிக்கிறாளென்று நீ நினைத்துக் கொள்ளுவானேன்?' என்று முணுமுணுத்தாள் அம்புஜம்.

அத்தையின் கண்டிப்பு குந்தளத்தின் அழுகையை மேலும் அதிகரித்தது. இந்த அமர்க்களத்தில் சுந்தரமும் அங்கு வந்து குந்தளத்தை சமாதானப்படுத்த முயற்சித்தான். ஊஹூம்! குந்தளத்தின் அழுகை ஸ்தாயி உயர்ந்து கொண்டே போயிற்றே தவிர குறைவதாகக் காணேம்.

'உடம்பெல்லாம் வியர்த்துத் தண்ணியாய் ஓட்ரதே யம்மா! இப்ப என்னதான் செய்யணும்னு சொல்லேன்!' என்று அழாக் குறையாகக் கேட்டார் ஐயர்.

'இப்பவே இங்கேயே கல்யாணம் பண்ணிவை!'

'சரி ஆகட்டும்! அழுகையை நிறுத்து! டேய் சுந்தரம், அந்தப் படத்திலே போட்டிருக்கு பார் கடுதாசி ரோஜாப் பூமாலே, அதையும் பக்கத்து படத்திலிருப்பதையும் கழட்டிக்கொண்டுவா! நீ எழுந்து இப்படி கீழே உட்கார் குந்தளம்!'

'மேளமும் பீப்பீயும் எங்கேயாம்! அது இல்லாமலே எப்படி கல்யாணம் ஆகும்?'

'அட பாழாய்ப்போற தெய்வமே ஏண்டாப்டா இப்படிப் போட்டு வதைக்கிருய்? இந்த நேரத்தில் மேளத்துக்கு எங்கேயம்மா போவது?'

'நான் மேளம் நாயனம் எல்லாம் கொண்டுவாரேன் எசமான்! அடுத்த ரூமிலே மேளம் வாசிப்பாங்க இங்கே கல்யாணம் நடக்கட்டும்!' என்று வீட்டு வேலைக்காரன் முனிசாமி சொல்லிவிட்டு ஐயர் காதில் என்னவோ ரகசியமாகக் கூறினன். பிறகு அவன் பக்கத்து அறைக்குப் போய் நாயனக்கச்சேரி கிராமபோன் பிளேட் ஒன்றை வைத்ததும் குந்தளத்தின் முகம் மலர்ந்தது. பாஸ்கரய்யர் சுந்தரத்தையும் குந்தளத்தையும் உட்காரவைத்து மாலே மாற்றச் சொன்ஞர். அந்தக் காட்சியைப்பார்த்து அம்புஜம் சொல்லமுடியாமல் தனக்குள் முணுமுணுத்துக்கொண்டாள். சுந்தரமும் குந்தளமும் சிறிதுநேரம் கல்யாண விளையாட்டு விளையாடிவிட்டு மாலேயோடு அப்படியே தரையில் படுத்து தூங்கி

விட்டார்கள். பாஸ்கரய்யர் அவர்கள்மீது வைத்த கண்ணை எடுக்காமல் பிரமைபிடித்தவர்மாதிரி பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். பின் கட்டில் வேலைக்கார முனிசாமியும் பாக்கிநேரத்தை தூங்காமலே கழித்தான்.

பாஸ்கரய்யருக்கு மறுநாள் காலை ஒன்பது மணிக்குத்தான் பொழுது விடிந்தது. 'ஏண்டாப்பா இப்படிப் பேயடித்தவன் மாதிரி பிரமை பிடித்து படுத்திருக்கே! பல் தேய்த்து காப்பி கீப்பி சாப்பிடவேண்டாமா?' என்று அம்புஜம் வந்து கேட்டபொழுதுதான் பொழுது விடிந்துவிட்டதை அவர் அறிந்தார். முந்திய நாள் சம்பவம் அவருக்கு ஒரு பயங்கரமான உண்மையை உணர்த்தியது. குந்தளத்துக்கும் சுந்தரத்துக்குமிடையில் வளர்ந்து வரும் பரஸ்பர பாசத்தை இப்பொழுதே கிள்ளி எறிந்துவிடாவிட்டால் பிறகு விபரீதமாகி விடுமென்ற எண்ணம் அவருக்கு உதயமாயிற்று.

அம்புஜமும் இப்படியே நினைத்தாள். இருவர் மனதிலும் ஒரு புதிய கவலை தோன்றி படிப்படியாக வளரத் தொடங்கியது. அதற்கு இருவரும் இரண்டு விதமான பரிகாரங்களைத் தேட தனித்தனியே தீர்மானித்துக்கொண்டனர். பிறகு நடந்த சில சம்பவங்கள் அவர்களுடைய கவலையைப் பீதியாக மாற்றிவிட்டன. அய்யர் மூளை அதி தீவிரமாக வேலைசெய்ய ஆரம்பித்தது.

சில தினங்களுக்குப் பிறகு ஒருநாள் மாலை சுந்தரம் புஸ்தகமும் கையுமாக பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பி வீட்டில் நுழைந்தான். அவன் பாடம் படிக்கும் அறையில் குந்தளம் வெகு சுறுசுறுப்பாக ஒரு மூலையில் உட்கார்ந்து வேலை செய்துகொண்டிருந்தாள். சப்தம் செய்யாமல் அவன் பின்னால் போய் நின்று கவனித்தான். இரண்டு முழுச் செங்கல்கள் அடுப்புமாதிரி வைக்கப்பட்டிருந்தன. அவற்றின் மேல் சமையல் பானை மாதிரியுள்ள ஒரு மரச்செப்பு இருந்தது. விறகுக்குப் பதிலாக கந்தைக் காகிதங்கள் நீளமாகச் சுருட்டி அடுப்பில் வைக்கப்பட்டிருந்தன. பக்கத்

தில் ஒரு டம்ளர் நிறைய ஜலம். இன்னொரு மரச் செப்பில் ஒரு பிடி அரிசி. அடுப்பிற்கு முன்னுல் ஒரு பலகையைப் போட்டு அதில் உட்கார்ந்திருந்தாள் குந்தளம்.

இதைப் பார்த்துவிட்டு 'சமையலா பண்றே குந்தளம்?' என்ருன் சுந்தரம்.

'ஐயையோ !........ அதுக்குள்ளேயா நீ வந்துட்டே! இப்ப வரக்கூடாது அத்தான்; நீ செருப்புப் போட்டிண்டு குடை பிடுச்சிண்டு ஆபீஸுக்குப் போயுட்டு வருவையாம்! நீ வருவதுக்குள்ளே நான் சமையல் பண்ணி வைப்பேனும்! சரியா? ஆபீஸுக்குப்போ அத்தான்! போயேன் !'' இப்படி மடமடவென்று சொல்லியபடி சுந்தரம் கையிலிருந்த புத்தகக் கட்டைப் பிடுங்கி ஒரு மூலையில் எறிந்தாள் குந்தளம். வெளியில் கிடந்த அவன் செருப்பைக் கொண்டு வந்து வைத்து 'ஊம்........இதைப் போட்டுக்கோ! ஆபீஸுக்கு நாழியாச்சு! சீக்கிரம் அத்தான்!........'' என்று துரிதப்படுத்தினுள். சுந்தரம் செருப்பை மாட்டிக்கொண்டு சிறிய குடையையும் கையிலெடுத்துக்கொண்டு "ஆமாம், இதெல்லாம் என்ன குந்தளம்?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டான்.

'இது ஒரு புதிய விளையாட்டு அத்தானுக்கு இது கூடத் தெரியலே !

'புது விளையாட்டுன்னு என்ன விளையாட்டாம் இது !'

'ஆம்படையான் பெண்டாட்டி விளையாட்டு; நீ போயேன் ஆபீஸுக்கு. நான் வரலாம்னு சொல்லுவேன், அப்புறம்தான் வரணும்' தெரியுமா?'

'சரி !'

சுந்தரம் குடை செருப்புடன் அடுத்த அறையில் போய் உட்கார்ந்து 'வரலாமா, வரலாமா?' என்று கேட்டுக்கொண்டே யிருந்தான். 'கூடாது, கூடாது' என்று பதில் வந்தது. கடைசியில் 'வரலாம்' என்ருள் குந்தளம். அசடு மாப்பிள்ளை மாதிரி நடைபோட்டுக்கொண்டு உள்ளே நுழைந்தான் சுந்தரம்.

'இப்படி மக்குபிளாஸ்திரி மாதிரி நிற்கப்படாது அத்தான்' 'ஊம் இன்னும் சமையல் ஆகலேயா? எனக்கு சாப்பாடு வேணும் ஒண்ணும் வேணும்! ஆபீஸுக்கு நாழியாச்சு, நான் போறேன் போ" இப்படி நீ இரைஞ்சு கேட்கணும். எங்கே கேளு!'

சுந்தரம் அதுமாதிரி கேட்டான்.

'இல்லே! இதோ சமையல் ஆய்டுத்தே உட்காரு சாதம் போட்றேன்!' என்றாள் குந்தளம். சுந்தரம் உட்கார்ந்தான். அவனுக்கு முன் ஒரு காகிதத்தை விரித்துப் போட்டு இரண்டு மூன்று அரிசி, இரண்டு துண்டு வாழைக்காய்த் தோல், இரண்டு கத்தரிக்காய் காம்பு இவற்றை குந்தளம் வைத்தாள்.

'இதையெல்லாம் நான் சாப்பிடமாட்டேம்மா'

சுந்தரம் முகத்தைச் சுளித்துக்கொண்டு பின்னால் நகர்ந்தான்.



'நிஜம் நிஜம்மா சாப்பிடவேணும் அத்தான். பொய்யாப் பொய்யான்னு சாப்பிட்ருபோலே வாயில் வைச்சுக்கணும்!' என்றாள் குந்தளம்.

இந்த ரசமான சம்பாஷணையையும் விளையாட்டையும் ஐயர் ஜன்னல் வழியாக அடுத்த அறையிலிருந்து கவனித்துக்கொண்டிருந்தார்.

வேறொரு இடத்தில் நின்று பார்த்துக்கொண்டிருந்த அம்புஜம் சுந்தரத்தை சமிக்கை காட்டி அழைக்கவே 'அம்மா கூப்பிட்ரு? கேட்டுட்டு வரேன்!' என்று சொல்லி எழுந்து போனான்.

'சீக்கிரம் வந்துடணும், சரியா?' என்று கேட்டுக் கொண்டே குந்தளம் "எச்சில் இலையை" எடுக்க ஆரம்பித்தாள்.

'ஐயோ! இல்லை, இல்லை இனிமே இல்லவேயில்லை அம்மா! ஊம்........ ஊம்........ ஹூ........!;

சுந்தரம் திடீரென்று இப்படி அழும் குரல் பாஸ்கரய்யருக்குக் கேட்டது. 'குழந்தைங்க என்னத்தைக் கண்டுதுங்க அம்மா! அதுக்கு இப்படியா கன்னத்தைக் கிள்ளுவாங்க குழந்தையை?' என்று முனிசாமி சமாதானம் செய்யும் சப்தத்தையும் அய்யர் கேட்டார். அடித்தால் பாஸ்கரய்யர் காதில் விழுந்துவிடுமோ என்று நினைத்தே சப்தமில்லாமல் கன்னத்தை நிமிண்டினாள் அம்புஜம். வலி பொறுக்காவிட்டால் சுந்தரம் அழாமல் என்ன செய்வான்? சுந்தரம் செய்த குற்றமென்ன? அவனுக்கு ஏன் இந்த தண்டனை? குழந்தைகள் மெய்மறந்து விளையாட்டில் லயித்திருந்தது குற்றமா?

அம்புஜத்தின் மனப்போக்கை அன்றுதான் தெளிவாகத் தெரிந்துகொண்டார் பாஸ்கரய்யர். தாங்க முடியாத வேதனையுடன் குந்தளத்தின் அறையில் நுழைந்து குழந்தையை அணைத்துக்கொண்டு இரண்டு சொட்டு கண்ணீர் வடித்தார்.

“அத்தான் எங்கேப்பா! அழுருப்லே இருக்கே?’

“ஒண்ணுமில்லேயம்மா! உன் அத்தை மருந்து கொடுக்கிருள். சாப்பிடமாட்டேன்னு அழுருன். இதோ வந்துவிடுவான்!” என்று சமாதானம் கூறியபொழுது அவர் நெஞ்சம் வெடித்துவிடும்போலிருந்தது.

சிறிது நேரம் கழித்து அம்புஜம் அறையில் நுழைந்து ‘ஏண்டியம்மா குந்தளம்! காப்பி கீப்பி ஒண்ணும் குடிக்க வேண்டாமா? அப்பா பாஸ்கரா, நீயும் காலாகாலத்திலே காப்பி குடித்துட்டு வந்தா சமையல்காரிக்கு ஒரு வேலே முடியுமில்லேயா?” என்று அனுசரணையாகக் கேட்டாள்.

“அத்தை! சுந்தரம் அத்தான் ஏன் அழுருன்! மருந்து கொடுத்தையா?’

“மருந்தும் கொடுக்கலே மாயமும் கொடுக்கலே! குழந்தைகள் பள்ளிக்கூடத்திலேயிருந்து வந்தால் கைகால் கழுவி காப்பியைக் குடித்து தலே வாரிக்கொள்ளும்னு கேள்விப் பட்டிருக்கேன்! இப்படியா வந்ததும் வராததுமா ஒரு விளேயாட்டு? சமையல்காரியானு அரைமணி நேரமா காப் பியை ஆற்றிவைச்சுண்டு நிற்கிருள்! நீங்கள் பண்றது அதிசயமாய்த்தானிருக்கு அம்மா! சின்ன வயசிலே இப் படி விளேயாட்டு புத்தியாயிருந்தால் எப்பதான் உங்க அத் தான் படிச்சுக் குட்டிச்சுவராய்ப் போறது!..........”

“அம்புஜம்! எதையாவது மனதில் வைத்துக்கொண்டு என்னவாவது சொல்லாதே! குழந்தையை ஏன் குட்டிச் சுவராய்ப் போகணும்னு சாபமிட்றே!”

“அட பாவமே! உன் பொண்ணேயா சொன்னேன்! எனக்கேண்டாப்பா அந்தப் பொல்லாப்பு!”

“உன் குழந்தையானுலென்ன என் குழந்தையானு லென்ன? இரண்டுபேரும் எனக்கு ஒரே மாதிரிதான்! சமையல்காரியை இங்கு காப்பி கொண்டுவரச்சொல்லு போ!”

அம்புஜம் பதில் பேசாமல் போய்விட்டாள்.

## 2. குடும்பம் சிதைந்தது

மூந்திய அத்தியாயத்தில் குறிப்பிட்ட உருக்கமான சம்பவம் நிகழ்ந்த தினத்தன்று இரவு ஐயருக்கு வெகு நேரம் வரை உறக்கம் வரவில்லை. நெஞ்சில் வஞ்சனையில்லாத இயற்கையுடன் லயித்திருக்க அவர் மனம் விரும்பியது. தோட்டத்தின் பக்கம் சென்று ஒரு மேடையில் உட்கார்ந்தார். அவருடைய இதயத் துடிப்பை காற்றில் அசைந்தாடும் மாந்துளிர்கள் எடுத்துக் காட்டின வென்றால் மிகவும் பொருத்தமாயிருக்கும்.

சோவென்று முன்பனி பெய்துகொண்டிருந்தது. அதையும் பொருட்படுத்தாமல் ஐயர் ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருந்தார்.

"இன்னும் படுக்கப் போகலீங்களா? மணி பத்தடிக்கப் போவுது! பனி வேறே மழை கொட்டுறாப்பலே கொட்டுது! இப்படி தோட்டத்திலே உட்கார்ந்திருக்கீங்களே, எசமான்! உடம்புக்கு ஆவுங்களா?" என்றான் முனிசாமி அங்குவந்து.

"பாதகமில்லை முனிசாமி! மணி பத்தாகிறதா? நேரம் போனதே தெரியவில்லை!"

"நீங்க கேக்கிறதைப் பார்த்தா ரொம்ப நேரமா இங்கேயே இருக்கிறாப்லே தோணுதே! பனி பெய்யறதைப் பாத்திங்களில்லையா! எதிரே நிற்கும் மரம்கூடக் கண்ணுக்குத் தெரியலே!"

"ஆமாம், ஆமாம்!" என்று பொம்மைமாதிரி அய்யர் தலையசைத்தார்.

"ஒரு மாதிரி இருக்கிறீங்களே எசமான். உடம்புக்கு என்ன மாச்சும்..........."

"அப்படியெல்லாம் ஒன்றுமில்லை முனிசாமி! மனசு ஒருமாதிரி வேதனையாயிருந்தது. கொஞ்சம் தனியாயிருப் போமென்று வந்தேன். எல்லாம் குழந்தையைப்பற்றித் தான் முனிசாமி!"

"சாயங்காலம் குழந்தைகள் விளையாடிக்கிட்டு இருந் துச்சே அதை நினைத்தா இப்படி மனசை அலைய விட் றீங்க? சுந்தரத்தை அம்மா கண்டிச்சது எனக்கும் ரொம்ப வருத்தமாய்த்தான் இருந்திச்சு! இருந்தாலும்............"

"அதையெல்லாம் நீயும் பார்த்துக்கொண்டிருந்தாயா என்ன ?"

"ஜன்னல்களை துடைக்க வந்தேன். குளந்தைங்கள் விளையாட்டு வேடிக்கையாயிருந்துச்சு. கொஞ்சம் பார்த்துக் கிட்டு நின்னேன்!" என்று ஏதோ குற்றம் செய்துவிட்டு குற்றத்தை ஒப்புக்கொள்ளுகிறவன்போல தலையைச் சொறிந் துகொண்டான் முனிசாமி.

"உன்னிடம் சொல்லுவதற்கென்ன முனிசாமி! நீ அம்மாள் காலத்திலிருந்து வீட்டில் வேலை செய்பவன். மரணத்தறுவாயில்கூட 'முனிசாமி குழந்தையைப் பார்த் துக்கோ' என்றுதான் அம்மாள் சொல்லிவிட்டுப் போனாள்............"

"அந்தக் கண்றாவியையெல்லாம் இப்ப ஏன் நினைக் கிறீங்க எசமான்............"

"இல்லை, அவள்மட்டுமிருந்தால் குந்தளத்தின் கதி இப்படி ஆகியிருக்குமா ?"

"விதியை யாரு கையிலே பிடிச்சு வைச்சுக்கிட முடி யுங்க! சாயங்காலம் நடந்ததை அம்மாமட்டும் பார்த்தி ருந்தா...........!"

என்னவோ சொல்ல வாயெடுத்து சட்டென்று நிறுத் திக்கொண்டுவிட்டான் முனிசாமி.

பாஸ்கரய்யர் சிறிது நேரம் மௌனத்தில் ஆழ்ந்திருந்த பிறகு சொன்னார், 'தவறு முழுவதும் என்பேரில்தான் முனிசாமி! அம்புஜத்தையும் சுந்தரத்தையும் பட்டணத்துக்கு அனுப்பிவிடப்போகிறேன்............ ஏன் ஒரு மாதிரி பார்க்கிறாய்?'

'இல்லீங்க! குழந்தை ஏங்கிப்போய்டுங்களேன்னு நினைச்சேன்!

'ஆமாம்! அதற்கென்ன செய்வது? மேலும் அவர்கள் இங்கிருந்தால் விபரீதமாகிவிடும்போலிருக்கிறது, அம்புஜத்துக்கு நல்ல வார்த்தை சொல்லி பட்டணத்துக்கு அனுப்பி விடுவதுதான் நல்லது. குந்தளத்தை கவனித்துக்கொள்வது இனி உன்பொறுப்பு!'

'சரிதானுங்க! ஒரு வாத்திபாரம்மாளைப்போட்டு குழந்தையின் மனசை படிப்பிலே திருப்பினால் எல்லாம் சரியாய்ப்போயிடும்'

மறுநாள் காலை காப்பி சாப்பிடும்பொழுது பட்டணத்துப் பேச்சை பாஸ்கரய்யர் தனது தங்கையிடம் ஆரம்பித்தார். பட்டணத்துக்குப் போவதை அம்புஜம் ஆட்சேபிக்கவில்லை. உண்மையில் அவளுக்கும் அது நல்ல யோசனையாகப்பட்டது. சுந்தரத்துக்கு கிட்டத்தட்ட ஐம்பதினாயிரம் ரூபாய் வரையில் அய்யர் எழுதி வைத்திருந்தார். ஆகையால் பட்டணத்துக்குப் போனால் சாப்பாட்டுக்குத் திண்டாடவேண்டுமேயென்ற கவலையில்லை. தொடர்பை அறுத்துக்கொண்டு போய்விட்டால் குந்தளத்தின் சொத்துகள் என்ன ஆகும்? பாஸ்கரய்யர் உயிருடனிருக்கும்வரையில் வேண்டுமானால் சொத்துகளின் நிர்வாகத்தை அவர் கவனிப்பார். பிறகு எப்படியும் சுந்தரம்தானே சகல விஷயங்களையும் கவனிக்கவேண்டியவன்? இப்பொழுது அவன் பட்டணத்திலிருந்தாலென்ன பம்பாயில் இருந்தாலென்ன? எல்லாம் ஒன்றுதான்!

இப்படி நினைத்தாள் அம்புஜம். "பிறகு நாலுபேர் நாலுமாதிரி பேசுவதற்கு இடம்வைக்காமல் இப்பொழுதே

குந்தளத்தையும் சுந்தரத்தையும் பிரித்து விடுவதுதான் நல்லது! நீ நினைக்கிறபடியே செய்துவிடுவோம்!' என்று ஆமோதித்தாள்.

பாஸ்கரய்யர் பதிலே சொல்லவில்லை. எதையோ பறி கொடுத்தவர்போல முகத்தைத் தொங்கவிட்டுக்கொண்டு வெளியே வந்துவிட்டார். அடுத்தவாரமே அவர் சென்னை குச் சென்று மயிலாப்பூரில் ஒரு சிறிய வீட்டை கிரயத்துக்கு வாங்கினர். சுந்தரத்தை பக்கத்திலுள்ள ஒரு பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டு வந்தார். நான்கைந்து தினங்களுக்குப்பிறகு வீட்டுக் கணக் கப்பிள்ளை அம்புஜத்தையும் சுந்தரத்தையும் அழைத்துக் கொண்டுபோய் சென்னையில் குடியேற்றிவிட்டு வந்தான்.

சுந்தரம் போன இரண்டு மூன்று வாரங்கள்வரையில் குந்தளம் சோறு தண்ணீர் இல்லாமல் அழுதுகொண்டே யிருந்தாள். அவளைச் சமாதானப்படுத்துவதில் அய்யருக் கும் முனிசாமிக்கும் நாடி தளர்ந்துபோய்விட்டது. குந் தளத்துக்குப் பாடம் சொல்லிவைக்க ஒரு உபாத்தியாயி னியை அய்யர் ஏற்பாடு செய்தார். அந்த ஆசிரியைக்கு வஸுமதி என்று ஒன்பது வயதுப் பெண்குழந்தையொன் றிருந்தது. குந்தளத்தின் விளையாட்டுப் புத்தி தெரிந்து ஆசிரியை தினசரி வரும்பொழுது தனது பெண் வஸு மதியையும் அழைத்து வருவாள். வஸுமதியின் வரத்துப் போக்கு அதிகரித்தபிறகுதான் குந்தளத்தின் குழந்தை மனது மெதுவாக சுந்தரத்தையும் மறக்க ஆரம்பித்தது.

குந்தளத்தை திருப்திப்படுத்துவதற்காக சில தினங் களில் வஸுமதியை அவளுடனேயே விட்டுச்செல்லுவாள் ஆசிரியை சங்கரி. வீட்டில் குந்தளத்துக்கு நடக்கும் மரி யாதைகளெல்லாம் வஸுமதிக்கும் நடந்தாகவேண்டும். குந் தளத்துக்கு ஒரு புதுச்சட்டை வாங்கினல் அதேமாதிரி வஸுமதிக்கும் வாங்கித்தான் தீரவேண்டும். சங்கரியின் கணவன் ஒரு கோர்ட்டு குமாஸ்தா. சொற்ப சம்பளத்தில் காலம் கழித்து வந்தவன். சங்கரிக்கு இரண்டு பெரிய மனு

ஷர்கள் வீட்டில் பாடம் சொல்லிக்கொடுப்பதில் இருபது ரூபாய்வரையில் கிடைத்தது. குந்தளத்துக்கு சங்கரி பாடம் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்த நாள்முதல் அந்தக் குடும்பத்தின் தரித்திரம் நீங்கிவிட்டது. பாஸ்கரய்யர் தம் வீட்டின் பக்கத்திலேயே ஒரு சிறிய மனையை வாங்கி அதில் சங்கரி குடும்பத்தை குடியேற்றினார். சங்கரியின் கணவனுக்கும் ஒரு சம்பளத்தைப்போட்டு நிலங்களின் ஒரு பகுதியை அவனுடைய மேற்பார்வையில் வைத்தார்.

சங்கரியும் வஸுமதியும் வந்தநாள் முதல் பாஸ்கரய்யர் வீட்டுக்கே ஒரு புதிய லக்ஷ்மிகடாக்ஷம் ஏற்பட்டது போலாயிற்று. வஸுமதியும் குந்தளமும் ஒருதாய் வயிற்றுக் குழந்தைகளைப்போல சில தினங்களுக்குள் அந்நியோன்யமாகி விட்டனர். எப்பொழுது பார்த்தாலும் வீட்டில் சிறுமிகளின் கலகலத்த சிரிப்பும், ஓட்டமும், பாட்டும், விளையாட்டுமே ஒலித்துக்கொண்டிருந்தது. அவர்களை அடக்க ஒரு அத்தையில்லை. அதட்டிப் பயமுறுத்த யாருமில்லை. முனிசாமியும் தன்னுடைய வயதை மறந்து குழந்தைகளோடு குழந்தையாகச் சேர்ந்து விளையாடுவான். தோட்டத்தில் கொட்டியிருந்த மணலிலே அவர்களுடன் சேர்ந்து அவனும் வீடு கட்டுவான்! மாக்கல்லை வைத்துக்கொண்டு அவர்களைப்போல அவனும் தரை முழுவதும் காக்காயும் குருவியும் போடுவான். சிட்டுக்குருவிபோல கவலையின்றி குந்தளத்தின் வாழ்க்கை கழியத்தொடங்கியது. பாஸ்கரய்யருக்கு தலையிலிருந்து ஒரு பெரிய பாரக்கல்லை இறக்கி வைத்தாற்போலிருந்தது. அவரைவிட அதிகத் திருப்தியடைந்தவன் முனிசாமிதான்!

வஸுமதியின் தொடர்பு ஏற்பட்டதில் இன்னும் ஒரு முக்கியமான மாறுதல் குந்தளத்திடம் தோன்றலாயிற்று. வஸுமதி ஒரு படித்த பெண்ணின், அதிலும் ஆசிரியைத் தொழிலில் இருப்பவளின் புதல்வியல்லவா? தாயைப் போலவே பெண்ணிடமும் படிப்பில் அலாதியான ஊக்கம் தென்பட்டது இயற்கைதானே? வஸுமதி சிறிய கதைப் புத்தகங்களை வைத்துக்கொண்டு குந்தளத்திற்கு படித்துக்

காட்டுவாள். குந்தளம் சுவாரஸ்யமாகக் கேட்டுக்கொண்டே பிறகு அதை முனிசாமிக்குச் சொல்லுவாள். நாளடைவில் வஸுமதியைப்போலவே தானும் படிக்க வேண்டுமென்ற ஆசை குந்தளத்துக்கு ஏற்பட்டது. அதை சங்கரி சரியான முறையில் பயன்படுத்தினாள். அவளுடைய திறமையான சிக்ஷை வெகு சீக்கிரத்தில் பலனளித்தது. மூன்று வருடங்களுக்குள் ஆறுவது வகுப்பு பாடங்களை குந்தளம் கரைத்து குடித்துவிட்டாள்.

சங்கரியின் வேலை அத்துடன் முடிந்துவிட்டது. அதற்குமேல் அவள் சொல்லிக்கொடுப்பதற்கில்லை. கோஷா பள்ளிக்கூடத்து துரைஸாணியம்மா ஒருவளை அமர்த்தினால் நல்லதென்று அய்யரிடம் யோசனை சொன்னாள்.

‘குந்தளத்துக்கும் வஸுவுக்கும் சொல்லிக்கொடுக்க நீயே ஏற்பாடு செய்துவிடு!' என்றார் அய்யர்.

சங்கரி இதை எதிர்பார்க்கவில்லை. அய்யர் குடும்பத்தில் தனக்கும் வஸுமதிக்கும் இனிச் செல்வாக்கு இருக்காதென்றே அவள் எண்ணினாள். ‘தாயில்லாக் குழந்தைக்கு நீதான் தாயார்மாதிரி இருந்து கவனித்துக்கொள்ளவேண்டும்' என்று அய்யர் அடிக்கடி சொல்லியதுண்டு. ஆனால் காரியம் ஆகவேண்டியவரையில் பக்குவமாகப்பேசி காலையும் பிடிப்பவர்கள் பலபேர். அவர்களுடைய ஜாபிதாவில் ஒருவராகவே அய்யரையும் வைத்திருந்தாள். சங்கரி வந்த நாள் முதல் குந்தளத்தின் வாழ்க்கையிலே தோன்றிய ஆச்சர்யகரமான மாறுதலைக்கண்ட அய்யர் சங்கரியைத் தம் குடும்பத்தில் ஒருவளாக மதித்தார். அவள் சம்பளத்துக்கு வேலைசெய்யும் ஒரு ஆசிரியை என்ற எண்ணமே அவருக்கு இல்லை.

வாத்தியாரம்மா தங்கமானவங்க! அந்த அம்மா வந்தது குழந்தைக்கு மறுஜன்மம் கொடுத்தமாதிரி ஆய்டுச்சு!' என்று முனிசாமிகூட அய்யரிடம் அடிக்கடி சொல்லுவான். சங்கரியின் புருஷன் சிவராமன் புகாருக்கு இடம் வைக்காமல் விசுவாசத்துடன் நிலங்களைக் கவனித்துக்கொண்டு

வந்தது வேறு அய்யருக்கு பெரிய உதவியாகவிருந்தது. நில விஷயங்களில் அய்யர் தலையிடுவதேயில்லை. பூராவேலை களையும் சிவராமனே திறமையாக நடத்திக்கொண்டுவந்தான்.

இதையெல்லாம் நினைத்துப்பாராமல் 'இனி குந்தளத் துக்கு வேறு ஆசிரியை வந்துவிட்டால் நமக்கு செல்வாக்கு இராது!' என்று சங்கரி வியாகூலமடைந்து வந்தது அவள் தவறே தவிர அய்யர் குற்றமல்லவே?

'வஸுமதியும் குந்தளத்துடன் உயர் வகுப்புப் பாடங் களைப் படிக்கட்டும். சம்பளத்தைப்பற்றி யோசிக்காமல் அடக்கமாயும் யோக்கியதையுடனும் கூடிய ஒரு நல்ல ஆசிரியையை நீயே பேசி அமர்த்திவிடு!' என்று அய்யர் சொல்லவும் அன்று மாலையே சங்கரி கோஷா பள்ளிக் கூடத்துக்குச் சென்றாள்.

கோஷா பள்ளிக்கூட துரைஸாணியம்மாக்களைக் கண்டு பேசியபின் பீ. ஏ. பட்டம்பெற்ற ஒரு ஆங்கிலோ இந் தியப்பெண்ணை தேர்ந்தெடுத்தாள் சங்கரி. தினசரி காலையில் ஒரு மணியும் மாலையில் இரண்டு மணியும் வீட்டுக்கு வந்து பாடம் சொல்லிக்கொடுக்கவேண்டும். மாதம் 75 ரூபாய் சம்பளம். வருஷத்துக்கு இலவசமாக இரண்டு செட் உடுப்பு கள். இதுதான் சங்கரி பேசிமுடித்துக்கொண்டுவந்த நிபந்தனை.

'ரொம்பச்சரி! நன்றாய்ச் சொல்லிக்கொடுத்து குழந்தை களும் திருப்தியடைந்தால் பிறகு 100 ரூபாயாக சம்ப ளத்தை உயர்த்திக்கொடுப்போம். காலையிலும் மாலையிலும் அவள் நடந்து வரவேண்டாம். நம் காரை அனுப்பி அழைத்துவரச் சொல்லு' என்று அய்யர் சொல்லிவிட்டார்.

அடுத்த வாரத்திலிருந்து அந்த ஆங்கிலோ இந்தியப் பெண் பாடம் சொல்லிவைக்க ஆரம்பித்தாள். அவள் பீ. ஏ. படித்தவளென்பதோடு ஆசிரியத் தொழிலில் பயிற்சி யடைந்தவளும்கூட. மாணவிகளைப் போகிற போக்கிலேயே விட்டு பக்குவமாக கல்வியில் கவனத்தைத் திருப்ப ஆசிரி யைகளுக்கு சொல்லியா தரவேண்டும்?

இப்படியே வருடங்கள் சிறகுகளைக் கட்டிக்கொண்டு பறந்தன. வாழ்க்கையில் இனித் தனக்கு ஒரு சுகமும் கிடையாதென்பது தெரிந்துதானோ என்னவோ குந்தளத்துக்கு படிப்பில் அபாரமான ஊக்கம் ஏற்பட்டது. பள்ளிக்கூடத்தில் சேர்ந்து ஒழுங்காக திட்டப்படி கல்வி பயிலும் மாணவ மாணவிகளிடம்கூட இவ்வளவு துரிதமான முன்னேற்றம் ஏற்பட மாட்டாது எந்த நேரமும் குந்தளம் ஏதாவது படித்துக் கொண்டோ அல்லது எழுதிக் கொண்டோ தானிருப்பாள். 'இப்படிப் படித்தால் உடம்புக்கு ஒத்துக்கொள்ளுமா அம்மா!' என்று அய்யர் அடிக்கடி சொல்லுவார்.



ஆங்கில நூல்களையெல்லாம் கரைத்துக் குடித்தபிறகு தமிழ் இலக்கியங்களில் குந்தளத்துக்கு சிரத்தையேற்படச் செய்ய தற்செயலாக ஒரு சம்பவம் நிகழ்ந்தது. வஸுமதிக்கு பதினைந்து வயது பூர்த்தியாகியவுடன் அவள் கல்யாணத்தைப் பற்றி

சங்கரி பிரஸ்தாபித்தாள். பட்டணத்தில் ஒரு பிரபல புத்தகப் பிரசுராலயத்தின் சொந்தக்காரர் பிள்ளையான கேசவன் என்பவனுக்கும் வஸுமதிக்கும் திருமணம் நடத்த அய்யர் ஏற்பாடுசெய்து தம்முடைய செலவிலேயே கல்யாணத்தையும் நடத்திவைத்தார். கேசவன் வஸுமதிக்கு நவீன தமிழ்ப் புத்தகங்கள் பல அனுப்புவான். அவைகளைக் குந்தளமும் படிப்பாள். அவற்றைப் பற்றி குந்தளமும் வஸுவும் விடிய விடிய விவாதிப்பார்கள். இதிலிருந்து தமிழ் நூல்களைப் படிப்பதில் அவ்விருவருக்குமே ஒரு புதிய ஊக்கம் ஏற்படலாயிற்று.

'இதென்ன புத்தகம்? நடையில் உயிர் இருக்கிறதா? அல்லது உயரிய கருத்துத்தானிருக்கிறதா? ஒரு புத்தகம் என்றால் அதற்கு ஒரு இலட்சியம் வேண்டாமா?' என்பாள் குந்தளம்.

'இலட்சியத்துடன் நீ தான் ஒரு புத்தகம் எழுதேன்! என் கணவர் கம்பெனியிலேயே பிரசுரிக்க ஏற்பாடு செய்வோம்!' என்பாள் வஸு.

'நான் எழுத ஆரம்பித்துவிட்டால் பாவம் இந்த எழுத்தாளர்கள் வயிற்றில் மண் விழுந்துவிடுமே! பிறகு அந்தப் பாவத்தை எங்குபோய்த் தொலைப்பது?' என்பாள் குந்தளம்.

இப்படி பிரசுரமாகும் ஒவ்வொரு புதுப் புத்தகத்தையும் படித்து அவர்கள் விவாதித்து அலசிவிடுவார்கள். வஸுமதி வெறும் பேச்சோடு நிற்பதில்லை. இந்த விவாதங்களின் சாராம்சத்தை தன் கணவனுக்கு எழுதுவாள். 'உன் சினேகிதையை ஒரு புத்தகமாவது எழுதச்சொல்லக் கூடாதா? நீ எழுதி வாங்கி அனுப்பு. நான் பிரசுரிக்கிறேன்!' என்று கட்டாயப்படுத்துவான் கேசவன்.

இந்த வற்புறுத்தல் எவ்வளவு தூரம் பலனளித்ததென்பது நமக்குத் தெரியாது. ஆனால் இது குந்தளத்தின் வாழ்க்கையிலே ஒரு பாரதூரமான, ஏன், எதிர்பாராத மாறுதலை உண்டுபண்ணியது என்னமோ உண்மை. இந்த மாறுதல் குந்தளத்தின் வருங்காலத் தலைவிதியை நிர்ணயிப்பதாகவுமிருந்தது.

வஸுமதியும் கணவன் வீட்டுக்குப் போய்விட்டாள். அவள் புறப்பட்ட தினத்தன்று குந்தளம் உறங்கவேயில்லை. உடன் பிறந்த சகோதரிகளுக்கிடையில்கூட அத்தனை பாச மிருக்காது. வஸுமதியின் பிரிவு ஓரிரண்டு வாரங்களுக்கு கஷ்டமாகத்தானிருந்தது குந்தளத்திற்கு. ஆனாலும் என்ன செய்வது? 'உலகில் கஷ்டப்படுவதற்காகவே நாம் பிறந் தோம். இதில் ஒன்று வஸுமதியின் பிரிவும்' என்றுதேன் னைத் தேற்றிக்கொண்டாள். வஸுமதி சென்றபிறகு பச் சுத் துணைக்குக்கூட ஆள் இல்லை. பொழுதைக் கழிப்பது ஒரு பெரிய பிரச்சனையாகிவிட்டது. வஸுமதியிடமிருந்து என்றைக்காவது கடிதம் வந்தால் அதைப் படித்து பதில் எழுதுவதில் சிறிது பொழுது கழியும். மற்ற நேரங்களில் ஏதாவது எழுதிக்கொண்டேயிருப்பாள் குந்தளம்.

இடைக்கிடையில் சுந்தரத்தின் வாழ்க்கையில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. சென்னைக்குச் சென்றபிறகு அம்புஜம் மட்டும் ஓரிரண்டுமுறை திருச்சிக்கு வந்துவிட்டுப் போனாள். தன் ஸ்தானத்தில் சங்கரி இருப்பதைக்காண அவளுக்குப் பிடிக்கவில்லை. தான் வந்துபோவதுகூட தன் தமையனுக்குப் பிடிக்கவில்லையென்பதை ஜாடையாகத் தெரிந்துகொண்டதும் திருச்சிக்கு வருவதையே அவள் நிறுத்திவிட்டாள். ஆடிக்கு ஒருநாள் ஆவணிக்கு ஒருநாள் 'அம்மா சொல்படி சுந்தரம்' என்று கையெழுத்துப்போட்டு மாமாவுக்கு சுந்தரம் கடிதம் எழுதுவான். நான்கைந்து வருடங்களுக்குப்பின் அதுவும் நின்றுவிட்டது.

வஸுமதி தன் கணவன் வீட்டுக்குச் சென்றபொழுது சுந்தரம் பி. ஏ. வகுப்பில் படித்துக்கொண்டிருந்தான். வஸு சுந்தரத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாள். சுந்த ரத்துடன் சிறுவயதில் விளையாடியதைப்பற்றியெல்லாம் குந் தளம் வஸுமதியிடம் கதைகதையாகச் சொல்லியதுண்டு. இதைக் கேசவனிடம் தற்செயலாக வஸு ஒருநாள் பிரஸ் தாபித்தாள். இரண்டு தினங்களுக்குப்பிறகு அந்த சுந்தரத் தையே கொண்டுவந்துவிட்டான் கேசவன். வஸுமதி இதை எதிர்பார்க்கவில்லை. அம்புஜத்துக்கும் பாஸ்கரய்யருக்

கும் உள்ள மனத்தாங்கலை அறிந்திருந்த வஸுந்தரா சுந்தரம் வந்துவிட்டுப்போனது தெரிந்தால் அய்யர் மனவருத்தப் படுவாரோ என்று பயந்தாள். தன் தாயாரிடத்தில் அம்புஜத்துக்கு அசூயை இருப்பதையும் அவள் அறிவாள். ஆகையால் தன் கணவனிடம் சுந்தரத்தைப்பற்றி ஏன் சொன்னோமென்று தன்னைத்தானே சபித்துக்கொண்டாள் வஸுந்தரா.

சுந்தரம் வந்துவிட்டுப் போனதுமுதல் வஸுந்தராமதியிடம் ஒரு மாறுதல் ஏற்பட்டதை கேசவன் கவனிக்காமலில்லை. ஒருநாள் இதை அவன் தெளிவாகக் கேட்டுவிட்டான்.

'அப்படியொன்றும் நான் கவலைப்படவில்லையே! பிரசுராலயத்துக்கு தினசரி எவ்வளவோபேர் வருவார்கள், போவார்கள். அவர்களை நான் கட்டுப்படுத்த முடியுமா?' என்று கவலையற்றவளைப்போல பதிலளித்தாள் வஸுந்தரா. கேசவன் வற்புறுத்தவும் தன் மனதிலுள்ள கவலையை மறைக்காமல் சொன்னாள்.

'அட பாவமே! இதற்குத்தானா ஒரு வாரமாக விளக்கெண்ணை சாப்பிட்டமாதிரி இருக்கிறாய்? சுந்தரத்துக்கு நீயும் நானும் யாரென்பது தெரியாது. நீ பார்க்கவேண்டுமென்பதற்காக ஒரு சாக்குச்சொல்லி அழைத்துவந்தேன்.'

'என்ன சொன்னீர்களோ?'

'காலேஜில் அவனைப்பற்றி விசாரித்தேன். ரொம்ப கெட்டிக்காரப் பையனென்றும் பத்திரிகைகளுக்கெல்லாம் என்னென்னவோ கதை, கட்டுரைகள் எழுதுகிறானென்றும் சொன்னார்கள். அவனை அழைத்துவர அது ஒரு நல்ல காரணமாக உதவியது. அவனைக்கொண்டு ஒரு நாவல் எழுதச்சொல்லி பிரசுரிக்க விரும்புவதாயும், அதைப்பற்றி தனிமையில் பேசவேண்டுமென்றும் தெரிவித்து அழைத்து வந்தேன். பையன் உண்மையிலேயே சரளமாக எழுதுவான் போலிருக்கிறது. அவனுக்கும் ஒரு சான்ஸ் கொடுத்துப் பார்க்கலாமென்று உத்தேசம். உனக்கு இஷ்டமில்லாவிட்டால் வேண்டாம்!'

கேசவன் இப்படிச் சொல்லவும் வஸுமதிக்கு ஒரு பெரிய சுமை தலையைவிட்டு இறங்கியது போலிருந்தது. 'அப்பாடா! தப்பினேன்! இந்த ஆண்பிள்ளைகளிடம் ஒரு ரகசியமும் வெளியிடக்கூடாதென்பது இப்பொழுது சரியாய்விட்டது!' என்று சொல்லி பெருமூச்சு விட்டாள்.

'உன் ரகசியங்களை நான் வெளியிட்டுவிடவில்லையே இப்படி கசந்துகொள்ள!'

'போதும் போதும்! இனிமேல் உங்களிடம் பிறர் ரகசியங்களைப்பற்றி நான் ஏன் பேசுகிறேன்! நல்ல மாட்டுக்கு ஒரு சூடு!'

'இப்படியெல்லாம் சபதம் போட்டால் இதோ இப்பொழுதே சுந்தரத்தின் வீட்டுக்குப்போய் நீ சொல்லியதையெல்லாம் அப்படியே ஒப்புவித்துவிடுவேன்! போகட்டுமா?'

'ஊம்! போவீர்கள்! திரும்பி வந்தால் உங்கள் வஸு இங்கிருக்கமாட்டாள். கிணற்றுக்குள் தேடிப்பார்க்கவேண்டியிருக்கும். போகும்பொழுது இதையும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு போங்கள்!'

ஒரு மாதத்துக்குப்பிறகு கேசவன் ஒருநாள் சொன்னான் 'வஸு! இன்று சுந்தரம் பிரசுராலயத்துக்கு வந்துவிட்டுப்போனான்!' என்று.

'எதற்காக வந்தார்?' என்றாள் வஸு ஆவலுடன்.

'புத்தகம்போடும் கிறுக்கு சரியாகப் பிடித்துவிட்டது. தன் சுய சரித்திரத்தையே எழுதியிருப்பதாயும் அதைப் புத்தகமாகப் போடவேண்டுமென்றும் சொல்லிக்கொண்டு வந்தான்!'

'அதைப் பார்த்தீர்களா ?'

'அவசரப்படாமல் கேளேன்! இரண்டு பெரிய நோட்டுப் புத்தகங்கள் நிறைய நெருக்கி நெருக்கி எழுதிக்கொண்டு வந்திருந்தான். அதன் தலைப்பைப் பார்த்ததும் எனக்குத் தூக்கிவாரிப்போட்டது!'

'அது எங்கே ஓடிப்போகிறது? சுந்தரம் ஒரு பெரிய இடத்தில் கல்யாணம் செய்துகொண்டால், அந்தச் செல்வாக்கு வேறு இருக்கும். சுய ஜாதிஜனங்களின் மதிப்பையும் இழக்காமலிருக்கலாம். அய்யரின் காலத்துக்குப்பிறகு சொத்து நிர்வாகத்தை சுந்தரம் தானே கவனிக்கவேண்டியிருக்கும்? குந்தளம் வேறு எவர் உதவியை நாடுவாள்?'

ஏன் அவளே துணிந்து வேறு கல்யாணம் செய்துகொண்டுவிட்டால்?'

'அவளுக்கு அவ்வளவு துணிவு ஏற்படாது. பாஸ்கரய்யரும் சம்மதிக்கமாட்டார் என்பதுதான் அம்புஜம்மாள் திட்டம்!'

'நீ நினைக்கின்றாய். நாளை நடப்பது இன்று யாருக்குத் தெரியும்!'

அன்றிரவு வஸந்தா வெகுநேரம் உறங்கவேயில்லை. கேசவனும் சுந்தரமும் பேசியதை அப்படியே குந்தளத்துக்கு எழுதிவிடவேண்டுமென்று அவள் மனம் துடித்தது. ஒரு சமயம் அந்தக் கடிதம் அய்யர் கையில் அகப்பட்டுவிட்டால்? தன் தாயாருக்கு எழுதி அதற்குள் குந்தளத்தின் கடிதத்தை வைத்து ரகசியமாகக் கொடுக்கச் செய்தாலென்னவென்று வஸந்தா நினைத்தாள். குந்தளம் என்ன நினைத்துக்கொள்வாளோ? சுந்தரத்தைப்பற்றி அவள் அதிருப்தியாக எப்பொழுதும் பேசியதில்லையென்பது என்னவோ வாஸ்தவம். அய்யர் தானென்ன? சுந்தரத்திடம் அவருக்கும் வெறுப்பில்லையே! 'அவன் சம்பந்தப்பட்டவரையில் நல்ல பையன் தான்!' என்று அடிக்கடி அய்யரே சொல்லியிருக்கிறார். இருந்தாலும் சுந்தரத்தைப்பற்றி அதிலும் அவன் குந்தளப்பிரேமா என்ற பெயருடன் ஒரு கதையெழுதிக்கொண்டு வந்ததைப்பற்றிக் குந்தளத்துக்கு எழுதுவது முறையா?

இப்படி தனக்குள் தர்க்கம் செய்துகொண்டே படுத்துப் புரண்டாள் வஸந்தா. குந்தளத்துக்கு எழுதினால்தான் மனநிம்மதியேற்படும்போலத் தோன்றியது அவளுக்கு. இரவு மணி இரண்டடித்தது. தூக்கம் வருவதாயில்லை.

'என்ன ஆனாலும் ஆகட்டும்; எழுதுவதை எழுதி விடுகிறேன்!' என்று தீர்மானித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் வஸு. கடிதத்தை எழுதி முடித்துவிட்டு மறுபடி படுக்கச் சென்றபோது நான்கு மணியாகி விட்டது.

மறுநாட்காலை கடிதத்தைத் தபாலில் சேர்க்க கேசவனிடம் கொடுத்தபொழுது 'நேற்றைய சம்பவங்களையெல்லாம் எழுதிவிட்டாயோ? ஏதாவது அசட்டுத்தனம் செய்து விடாதே!'' என்று அவன் எச்சரித்தான்.

'அதெல்லாம் ஒன்றுமில்லை. அம்மாவுக்கு இதையெல்லாம் ஏன் எழுதப்போகிறேன்!' என்று வஸு மழுப்பி விட்டாள்.

கடிதம் தன் கையைவிட்டுப் போனதுமுதல் வஸுவின் மனவேதனை மேலும் அதிகரித்தது. குந்தளம் என்ன நினைப்பாள்? பதில் எழுதுவாளா? அல்லது கிழித்துப் போட்டுவிட்டு பேசாமலிருந்துவிடுவாளா? அய்யருக்குத் தெரியாமல் ரகசியமாகக் கடிதம் எழுதியதைப்பற்றி எவ்வளவு மோசமாக நினைப்பாள்? குந்தளத்தின் பதில் வருமளவும் வஸுவிற்கு நிம்மதியேயில்லை.

## 3. அவசர அழைப்பு

இயற்கையென்ற மகாசக்தி சமூகத்தின் சட்ட திட்டங்களையும் சம்பிரதாயங்களையும் லக்ஷியம் செய்வதேயில்லை. ஒருவள் விதவையானாலும்சரி, அல்லது அரைவயிற்றுக் கஞ்சிக்கே பறப்பவளாயிருந்தாலும்சரி அதைப்பற்றி இயற்கை தேவிக்குக் கவலைகிடையாது. ஒருவருக்கும் உதவாமல் உள்ளே அடைந்து கிடக்கும் கைம்பெண்ணிடம் அழகைக் கொட்டி வியர்த்தமாக்குகிறோமேயென்று அவள் நினைக்கிறாளா? அதுவுமில்லை. குந்தளம் யௌவனப்பருவத்தையடைந்தவுடன் இயற்கையென்ற இந்த மகாசக்தி தனது மந்திரக்கோலைச்சுழற்றி பற்பல அற்புதங்களை அள்ளி வீசினாள் அவளிடம். பருவகாலத்தில் ஏற்படும் தேகமனோ மாறுதல்களைத் தடுக்கும் வல்லமை மனிதன் இயற்றும் சட்டதிட்டங்களுக்குக் கிடையாதெனஅகில உலகிற்கும் விளம்பரப்படுத்துவதைப் போலிருந்தது குந்தளத்தினிடம் இயற்கையன்னை காண்பித்த மந்திர ஜாலங்கள். அவளுடைய பரிபூரண கடாக்ஷத்தில் எவ்வளவு வர்ணித்தாலும் தீராதுபோலிருந்தது யுவதி குந்தளத்தின் எழில் உருவம்!

ஆனால் இந்தப் பெருமையை குந்தளம் உணரவில்லை; ரஸிக்கவுமில்லை. வயது செல்லச்செல்ல தான் ஒரு விதவை என்பதையும், உறங்குவதையும் உண்பதையும் தவிர வாழ்க்கையில் இனித் தனக்கு ஒன்றுமில்லை என்ற பயங்கரமான உண்மை அவள் மனதைச் சூழ்ந்துகொண்டது. வேளா வேளைகளில் வயிறாரச் சாப்பிடலாம்; பொழுது சாயும்வரையில் புத்தகங்களைப் படிக்கலாம்; இஷ்டப்பட்ட பொழுதெல்லாம் படுத்து உறங்கலாம்; முதுமை வந்தவுடன் மரணத்தை வரவேற்று மண்ணுடன் மண்ணாக மறைந்துவிடலாம். வாழ்க்கையில் தனக்குக் கொடுத்துவைத்தது அவ்வளவுதான் என்பதை குந்தளம் நன்கு உணர்ந்திருந்தாள்.

உயர்தரக்கல்வி பயின்ற ஒரு பெண், நாகரீக உலகின் முற்போக்கான கொள்கைகளை படித்தறிந்த ஒரு பெண், பிறர் தயவை நாடியிராமல் பல தலைமுறைகளுக்கு சொந்த சொத்துக்களை வைத்துக்கொண்டே காலக்ஷேபம் செய்யும் சீமான் வீட்டில் வளரும் ஒரு பெண், பழைய சம்பிர தாயங்களையும் சமூகக் கட்டுப்பாடுகளையும் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்? தகப்பனருக்கு அவள் அஞ்சினளா? அப்படிச் சொல்லி விடுவதற்குமில்லை. மறுமணம் செய்துகொள்ள விரும்புவதாகஜாடையாக அவள் பிரஸ்தாபித்தது கூடக் கிடையாது; இதை தகப்பனர் விரும்புவாரோ அல்லது மாட்டாரோ என்ற சந்தேகம் குந்தளத்துக்கு இருந்ததாகவும் தெரியவில்லை. சுருங்கச் சொல்வதாயின் அவள் மனதை அறிந்தவர் ஒருவருமில்லை.



ஒருநாள் மாதர் மறுமண சகாய சங்கத்தின் வருடாந்த விழாவில் சில தலைவர்கள் செய்த பிரசங்கங்களை குந்தளம் பத்திரிகையில் படித்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் மனதை அறிய சங்கரி ஜாடையாகப் பேச்சை ஆரம்பித்தாள்.

'நம் சமூகத்தில் இது ஒரு பெரிய அநியாயம் குந்தளம்! ஆண்பிள்ளைகள் எத்தனை வயதானாலும் எவ்வளவு கல்யாணங்கள் வேண்டுமாயினும் செய்துகொள்ளலாமாம். பெண்ணைப் பிறந்துவிட்டால் புருஷன் இறந்தபிறகு மறு மணம் செய்துகொள்வது பாபமாம்! இதில் என்ன நியாய மிருக்கிறதோ தெரியவில்லை' என்றாள் சங்கரி.

'என்ன செய்யலாம்! அதுதான் சமூகக் கட்டுப்பாடு!' என்று பட்டுக்கொள்ளாமல் பதில் சொன்னாள் குந்தளம்.

'சட்டத்துக்கு சமூகமா அல்லது சமூகத்துக்குச் சட்டமா?'

'சமூகத்துக்கு சில சட்டதிட்டங்கள் அவசியம்தான். சமூகம் லட்சியம் செய்யாத சட்டதிட்டங்களுக்கு மதிப்பு ஏது?

சமூகத்தில் ஒரு கோஷ்டியாரை அடக்கி ஒடுக்கி வைத்திருக்கும் சட்டத்தை தர்ம நியாயமுள்ளதென்று எப்படிச் சொல்லமுடியும்? அப்படிப்பட்ட சட்டத்துக்கு மதிப்புதான் ஏது?

'எது தர்மம், எது நியாயம் என்பதை நிர்ணயிப்பதும் அதே சட்டங்கள்தானே? இந்த நிர்ணய அதிகாரம் சமூகத்துக்கு அளிக்கப்படவில்லையே!'

'பகுத்தறிவு என்று ஒன்றிருக்கிறதல்லவா? அதைப் புறக்கணித்து விடலாமா?'

'இந்தக் கேள்விக்கே இடமில்லை. அனுஷ்டானத்திலிருந்து வரும் இந்துமதம் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது!'

இந்த சம்பாஷணை வேதாந்தத்தின் எல்லையை எட்டிப் பிடிக்க முயற்சித்ததேதவிர சங்கரியின் நோக்கம் நிறைவேறவில்லை. அன்று மாலையில்தான் வஸுமதியிடமிருந்து சங்கரிக்குக் கடிதம் வந்தது. தன் தாயாருக்கு சுந்தரத்தைப் பற்றி வஸு ஒன்றுமே எழுதவில்லை. வழக்கமாக எழு

தும் க்ஷேம சமாச்சாரங்களைக்கூடக் காணோம். 'இத்துட னிருக்கும் கடிதத்தை குந்தளத்தினிடம் கொடுத்துவிடு. அய்யருக்குத் தெரியவேண்டாம்—வஸு' என்று இரண்டே வரிகளுள்ள ஒரு சிறு துண்டுக் கடிதமும் குந்தளத்துக்கு விலாசமிட்ட ஒரு கவரும்தானிருந்தன. அய்யருக்குத் தெரி யாமல் குந்தளத்தின் கடிதத்தையும், அதை அவளிடம் கொடுக்கும்படி வஸு எழுதிய துண்டுக் கடிதத்தையும் குந்தளத்திடம் சங்கரி சேர்த்துவிட்டாள்.

வஸுவின் கடிதம், குந்தளத்தைக் குழப்பத்திற்கு உள்ளாக்கியது. கழிந்துபோன பழையகால சம்பவங்கள் ஒவ்வொன்ருக அவள்முன் நாடகத்தைப்போல தோன்றி மறைந்தன. அவள் திருஷ்டியில் அந்தக்காலத்திலே தலை வாரிப் பின்னலிட்டுக்கொண்டு புத்தகமும் கையுமாகப் பள் ளிக்கூடத்திலிருந்து வரும் சுந்தரத்தையே கற்பனைசெய்ய முடிந்தது. சுந்தரமும் அத்தையும் ஏன் சென்னைக்குப் போனுர்கள்? நெருங்கிய பந்துக்களாயிருந்தும் அவர்கள் ஏன் திருச்சிக்கு வருவதேயில்லை? இந்தக் குடும்ப ரகசியங் களை அறிந்துகொள்ள குந்தளம் முயற்சித்ததில்லை. தந்தைக் கும் அத்தைக்கும் ஏதோ விரோதமிருப்பதுமட்டும் அவ ளுக்குத் தெரியும். இரண்டொரு சந்தர்ப்பங்களில் அத்தை யைப்பற்றி பேச்செடுத்தபொழுது அதைத் தனது தந்தை விரும்பவில்லையென்பதை ஜாடையாக குந்தளம் தெரிந்து கொண்டாள். அதன்பின் அத்தையைப்பற்றி அவள் பிரஸ் தாபிப்பதேயில்லை. அத்தையைப் பிடிக்கவில்லையென்ருல் அதற்கு அத்தான் சுந்தரம் என்ன செய்வார்? அவரும் ஏன் வருவது கிடையாது? இந்தக் கேள்விகளுக்கு குந்த ளம் பதில் அறிய முயற்சித்திருந்தால் தெரிந்துகொண் டிருக்கலாம். ஆனல் தந்தைக்கு விருப்பமில்லாத விஷயங் களை அவரிடமிருந்து கிரகிக்கும் சுபாவம் அவளுக்கில்லை.

வஸுவின் கடிதத்திலடங்கியிருந்த எல்லா விஷயங் களையும்விட, "குந்தளப்பிரேமா" என்ற கதையைப்பற்றி எழுதிய குறிப்புகளே குந்தளத்தை ஆழ்ந்து சிந்திக்கச் செய்தன. அந்தக் கதையில் என்ன எழுதியிருந்தாரென்

பதையாவது கேசவன் படித்திருக்கக்கூடாதா? உண்மையில் அவர் படித்திருந்து வஸுவிற்குச் சொல்லாமலிருந்திருப்பாரா? அல்லது வேண்டுமென்றே வஸுமதிதான் மறைக்கிறுளா? இதைத் தெளிவாக எழுதிக் கேட்டுவிட்டாலென்ன? கேட்டால் வஸுவும் கேசவனும் என்ன நினைப்பார்கள்? கதைக்கு குந்தளப்பிரேமா என்று பெயர் கொடுத்து அதை சுயசரித்திரமென்று சுந்தரம் வர்ணிப்பானேன்? இதெல்லாம் எப்படியாவது இருக்கட்டும்; வஸுமதிக்கு என்ன பதில் எழுதுவது? சுந்தரத்தைப் பற்றி குறிப்பிடாமலே பதில் எழுதிவிடுவதா? குறிப்பிடாமல் பதில் எழுதிணுலும் அவள் கடிதம் என் மனதைப் புண்படுத்தி விட்டதாக வஸு நினைத்துக் கவலைப்படுவாள். சுந்தரத்தைப்பற்றி நான் பிரஸ்தாபித்தாலும் விகற்பமான அபிப்பிராயம் கொள்ளுவதற்கு இடமேற்படும். இது தர்ம சங்கடமான நிலைமையல்லவா?

இப்படி வெகு நேரம் வரையில் மூளையைக் குழப்பிக்கொண்டாள் குந்தளம். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவளைப்போல பின்வருமாறு வஸுமதிக்கு எழுதினுள்.

அன்புள்ள வஸு,

உன் கடிதம் கிடைத்தது. பத்துப் பக்கம் எழுத உனக்கு எப்படிப் பொறுமையிருந்ததென்பதுதான் ஆச்சரியமாயிருக்கிறது. 'அன்புள்ள அக்கா' என்று எழுதியிருக்கிறுய். உண்மையில் உனக்கு அன்பு கொஞ்சமாவது என்னிடமிருக்குமாணுல், இப்படி ஒன்பது மாத காலமாக திருச்சிஃப்பள்ளியை எட்டிப் பார்க்காமலே இருப்பாயா?

அத்தான் சுந்தரத்தைப்பற்றி நீ எழுதியிருந்ததைக் கவனித்தேன். அவர் கொண்டுவந்த கதையை நீயோ அல்லது உன் கணவரோ படித்துப் பார்த்திருக்க வேண்டுமென்றே எனக்குத் தோன்றுகிறது. படிக்கவில்லையென்று சொல்லி வேண்டுமென்றே என்னிடமிருந்து மறைக்கிருயென்று நினைக்கிறேன். எப்படியாணுலென்ன? நீயாக எழுதாத விஷயங்களை கட்டாயப்படுத்தித் தெரிந்துகொள்ள நான் விரும்பவில்லை. அத்தானைப்பற்றி மேலும் ஏதாவது

எழுதுவதாயிருந்தால் அதை உன் அம்மாவின் கடிதத்துடன் வைத்து அனுப்புவதே நல்லது. உனக்கும் எனக்குமுள்ள உறவு அத்தானுக்குத் தெரியாமலிருப்பதுதான் உசிதமென்று நினைக்கிறேன்!

உன் அன்புள்ள,

குந்தளம்.

'இதோ பார்த்தீர்களா குந்தளத்தின் கடிதத்தை! நான் நினைத்தபடியே ஆயிற்று!' என்று சொல்லி குந்தளத்தினிடமிருந்து வந்த கடிதத்தைக் கேசவனிடம் கொடுத்தாள் வஸுமதி. கேசவன் அதைப் படித்துவிட்டு, 'குந்தளத்திற்கு ஒன்றுமே எழுதவில்லை யென்றாயே! இப்பொழுது பார்த்தாயா ரகசியத்தைக் காப்பாற்றுவது ஆண்களா அல்லது பெண்களா என்பதை' என்றான்.

'சுந்தரத்தின் 'குந்தளப்பிரேமா'வில் அவர் என்ன எழுதியிருக்கிறார் என்பது எப்படியாவது தெரியவேண்டும். அதை அறிய குந்தளம் விரும்புவது கடிதத்தில் தொனிக்கவில்லையா?'

'எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. ஆனால் அந்தக் கதையைத்தான் திருப்பிக் கொண்டுபோய் விட்டானே!'

'மறுபடியும் கேட்டுப்பாருங்களேன்.'

'அவன் பேசியதைப் பார்த்தால் பிரசுரிக்க உடன்படுவானென்று தோன்றவில்லை. அப்படியே உடன்பட்டாலும் அதைப் பிரசுரிக்க முடியுமா? அய்யருக்கு விஷயம் தெரியாமற்போய்விடாதே?'

'பெயர்களையும், சிற்சில இடங்களையும் மாற்றிப் பிரசுரிப்பதாகச் சொல்லிப்பாருங்கள். நாம் படித்துப் பார்த்துவிட்டு மாற்றிப் பிரசுரிக்க முடியவில்லையென்று சொல்லிவிடலாம்!'

'சம்மதிப்பானென்று எனக்கு என்னவோ நம்பிக்கையில்லை!'

'முயற்சி செய்து பார்ப்பதில் நஷ்டமில்லையே!'

'சரி, பார்க்கிறேன்' என்று சொல்லிப் புறப்பட்டான் கேசவன்.

குந்தளப்பிரேமாவை வாங்க கேசவன் எவ்வளவோ தந்திரங்களை யெல்லாம் அனுஷ்டித்துப் பார்த்தான். ஆனால் அவை பலிக்கவில்லை.

'இன்னும் நல்ல கதையாக வேறு எழுதிக்கொடுக்கிறேன்!' என்றான் சுந்தரம் பிடிவாதமாக.

'கொடுக்கமாட்டீர்களென்பதற்காக இல்லை. என்ன இருந்தாலும் புதிய கதை எழுதி முடிக்க ஒரு மாதமாவது பிடிக்கும். அதுவரையில் குந்தளப்பிரேமா அச்சாகட்டுமே என்று பார்த்தேன். அச்சாபீஸில் கைவசம் ஒரு வேலையுமில்லை. குந்தளப்பிரேமாவைக் கொடுத்தால் பெயர்களையும், வேண்டுமானால் சிற்சில சம்பவங்களையுங்கூட மாற்றி வேலையை ஆரம்பித்துவிடலாம். பணத்தைப்பற்றி யோசிக்காதீர்கள். நீங்கள் கேட்பதைக் கொடுக்கிறேன்!' என்றான் கேசவன்.

'குந்தளப்பிரேமாவின் பேச்சை விட்டுவிடுங்கள். அதைப் பற்றி நினைப்பதிலேயே பிரயோசனமில்லை!'

'வேண்டாம். படித்தாவது பார்க்கலாமா? உங்கள் நடையின் போக்கை கவனித்துவிட்டுக் கொடுத்துவிடுகிறேன். பிறகு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்வோம்!

'என் நடை தெரியவேண்டுமானால் நான் எழுதிய வேறு பல கதைகளிருக்கின்றன, தருகிறேன். எல்லாம் ஒன்றுதானே?'

இதன்பிறகு என்ன செய்வான் கேசவன்? வஸுமதியிடம் தன் தோல்வியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. இதற்கிடையில் குந்தளத்தினிடமிருந்து இரண்டு கடிதங்கள் வந்துவிட்டன. அவற்றில் சுந்தரத்தைப்

பற்றி ஸ்பஷ்டமாக அவள் ஒன்றும் கேட்கவில்லை. சுந்தரத்தின் பெயரைக்கூட பிரஸ்தாபிக்கவில்லை. ஆனால் வஸுவும் கேசவனும் ஏதோ சில விஷயங்களைத் தன்னிடமிருந்து மறைக்க முயற்சிக்கிறார்களெனப் புகார்செய்யும் தொனியிலிருந்தன குந்தளத்தின் கடிதங்கள்.

சுந்தரத்தைப்பற்றி ஆரம்பத்திலேயே எழுதாமலிருந்தால் இவ்வளவு தொந்தரவுமில்லையென்றுகூட நினைக்க ஆரம்பித்து விட்டாள் வஸு.

இந்த நிலைமையில் ஒரு வாரம் கழித்து குந்தளத்தினிடமிருந்து சுருக்கமாக ஒரு கடிதம் வந்தது.

'அந்தரங்கமாகவும் மிகமிக அவசரமாகவும் சில விஷயங்கள் பேசவேண்டியிருக்கிறது. அத்தானைப்பற்றியல்ல. முடியுமானால் உன் கணவரின் அனுமதியைக் கேட்டுக் கொண்டு புறப்பட்டு வா!' என்று எழுதியிருந்தாள் குந்தளம்.

'அத்தானைப்பற்றியல்லவாம். பிறகு அந்தரங்கமான விஷயம் என்னவோ? அவசரமில்லாவிட்டால் குந்தளம் இப்படி எழுதமாட்டாளே!' என்றாள் வஸு.

'எனக்கு எப்படித் தெரியும்? பெண்கள் விஷயமே விசித்திரமானது' என்று பட்டுக்கொள்ளாமல் பதில் சொன்னான் கேசவன்.

'உங்கள் யோசனை என்ன?'

'போகவேண்டுமென்று நீ தீர்மானித்துவிட்டாய். அதற்கு அப்பீல் ஏது?'

'உங்களுக்குப் பிரியமில்லாவிட்டால் போகவில்லை!'

'சிவசிவா! என்மேல் பழியைப் போடாதே. தாராளமாகப் போய்வா! சீக்கிரத்தில் திரும்பிவிட்டால் நல்லது!'

'அப்படியானால் அங்கே போய் உட்கார்ந்து விடுவேனா என்ன?'

சுந்தரத்தைப்பற்றி நீ எழுதியிருக்கவேகூடாது. இத ஞல் என்னென்ன விபரீதங்கள் ஏற்படுமோ தெரிய வில்லை!'

மூலகாரணம் நீங்கள்தானே? அவசரக் குடுக்கை மாதிரி எதற்காக ஊரெல்லாம் விசாரித்து அவரைத்தேடி அழைத்துவந்தீர்களாம்!'

"சுந்தரத்தைப்பற்றி என்னிடம் ஒன்றுமே சொல் லாமலிருந்தால் நான் அவனைப்பற்றி விசாரிக்கப்போவது மில்லை அழைத்து வந்திருக்கவுமாட்டேன். குற்றம் என்மேலில்லையே!"

"தவறு என்மீதுதான். அதன் பலனை உங்களுக்குப் பங்கில்லாமல் நானே தனியாக அனுபவிக்கிறேன். இப் பொழுது திருப்திதானு?"

அன்றிரவு வண்டியிலேயே வஸுமதி திருச்சினுப்பள் ளிக்குப் புறப்பட்டாள். திருச்சி வந்தபிறகுதான் குந்தளம் அழைத்தது உண்மையில் சுந்தரத்தைப்பற்றி விசாரிப்பதற் கல்லவென்பது வஸுமதிக்குத் தெரிந்தது.

## 4. பிரசுராலயப் புரட்சி

'தமிழ் நாட்டில் பெரிய புரட்சியை உண்டுபண்ணி விட்டீர்களே!' என்று கேட்டுக்கொண்டு கேசவனின் பிர சுராலயத்துக்கு வந்தான் சுந்தரம் ஒருநாள்.

'எதைக் குறிப்பிடுகிறீர்கள்? குறைந்த விலையில் சிறந்த புத்தகங்கள் வெளியிடுவதையா? உங்களைப்போன்ற நண்பர் களின் உதவி இருக்கும்வரை 'கமலாலயத்துக்கு' என்ன குறை? எழுத்தாளர்களுக்கு பணக்கஷ்டம் ஒரு பெரிய சத்ரு. பணக் கவலையிருந்தால் கற்பனைகள் சிதைந்துவிடும். என் தகப்பனார் அடிக்கடி சொல்லுவார், 'சிறந்த எழுத் தாளரென்பது நிச்சயமாகத் தெரிந்தால் அவருக்குக் கை நிறையப் பணம் கொடு. கொடுப்பதைப்போல் பத்து மடங்கு பிறகு சம்பாதித்துக்கொண்டுவிடலாம்' என்று. பெரும்பா லான ஆசிரியர்கள் சோபிக்காமல் ஓரிரண்டு புத்தகங்களுடன் மறைந்துபோவதற்கு வறுமைதான் காரணம். இது என் தகப்பனார் அனுபவத்தில் கண்ட உண்மை. பிரதிப் பிர யோசனத்தைக்கூட எதிர்பாராமல் அருமையான இலக் கியங்களைச் சிருஷ்டித்துக்கொடுக்க உங்களைப்போன்ற நண் பர்களிருக்கும்வரையில் கமலாலயம் தமிழ் நாட்டில் புரட் சியைமட்டுமா உண்டுபண்ணும்? புயலையும் சூறுவளியையுமே கிளப்பிவிடாதா?' என்று மூச்சுவிடாமல் பேசினான் கேசவன்.

'நான் என்னவோ கேட்கிறேன் நீங்கள் என்னவோ சொல்லிக்கொண்டு போகிறீர்களே! குமாரி சாந்தாவின் புத்தகத்தைப்பற்றியல்லவா பிரஸ்தாபித்தேன்!'

'மூன்றுவது புத்தகம் அச்சிலிருக்கிறது.'

'மூன்றுவது புத்தகம்வேறு அச்சாகிறதா? இரண்டா வது புத்தகத்துக்கு இன்று காலைப் பத்திரிகையில் வெளி யான மதிப்புரைகளைப் பார்த்தீர்களல்லவா?'

'பார்த்தேன். அத்துடன் உங்களுடைய கடைசிப் புத்தகத்தின் மதிப்புரையும் பிரசுரிக்கப்பட்டிருந்தது!'

சுந்தரத்தின் முகம் சிறிது மாறுதலடைந்தது. 'என் புத்தகத்தையும் குமாரி சாந்தாவின் புத்தகத்தையும் ஏககாலத்தில் நீங்கள் மதிப்புரைக்கு அனுப்பியிருக்கக்கூடாது!' என்று சொன்னான் மாறுபட்ட தொனியில்.

'ஏன் அதிலென்ன தவறு? உங்கள் புத்தகத்தைப் பற்றியும் நன்றாகத்தானே மதிப்புரை எழுதியிருக்கிறார்கள்?

'கண்டிக்கவோ அல்லது குறைகூறவோ இல்லையென்பது உண்மைதான். ஆனால் சாந்தாவின் நடையும் கருத்துகளும் தமிழ் இலக்கிய உலகிலேயே ஒரு பெரிய புரட்சியை உண்டுபண்ணிவிட்டதாக வர்ணித்திருக்கிறார்களே அதுதான் எனக்கு விளங்கவில்லை. சாந்தாவின் இரண்டாவது புத்தகத்தை நானும் படித்தேன். எனக்கு ஒரு புரட்சியும் தெரியவில்லை. வசனநடை கொஞ்சம் விறுவிறுப்பாயிருக்கிறது. கருத்தும். ஓரளவிற்கு நூதனமாயிருக்கிறது. இதில் என்ன புரட்சி இருக்கிறதாம்?'

'எனக்கென்ன தெரியும்? மதிப்புரை எழுதிய பத்திரிகாசிரியர்களையல்லவா கேட்கவேண்டும்?'

'கேட்பானேன்? பத்திரிகைக்காரர்களின் யோக்கியதை தெரியாதவர்களல்லவா கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும்? காளிதாஸனே மறுபிறவியெடுத்துவந்து ஒரு அற்புதமான காவியத்தைச் சிருஷ்டிக்கட்டும்; அதை நமது பத்திரிகைக்காரர்கள் நோக்கும் போக்கு வேறுதான். ஒரு பெண் எழுதிவிட்டால் அதற்குக் கொடுக்கும் மதிப்பு முற்றிலும் வேறுதான். தெருக்கூத்தில் சாவித்திரி நாடகத்திலே பார்க்கிறோமே எமதர்மன் தர்பார். அதில் பாபிகளை கொண்டுவந்து நிறுத்தி தண்டிக்கப்படுவது, உண்மையில் நடப்பதாயிருந்தால் விமரிசனிகளின் கைவிரல்கள் எண்ணெய்க் கொப்பரையில்தான் வைக்கப்படும்!'

'பத்திரிகாசிரியர்கள்மீது நீங்கள் இவ்வளவு ஆத்திரப் பட காரணமில்லையே, ஸ்வாமி! உங்கள் புத்தகங்களில் ஆறு புத்தகங்களை இதுவரை கமலாலயம் வெளியிட்டிருக்கிறது. ஒரு புத்தகத்தைப்பற்றியாவது எந்த விமரிசகரேனும் குறைகூறியதுண்டா? இல்லையே?'

'என்னை இந்திரன் சந்திரனென்று எவரும் எழுதவேண்டியதில்லை; அதை நான் விரும்பியதுமில்லை. வேண்டியவர்களுக்கு ஒருவிதமாகவும், வேண்டாதவர்களுக்கு மற்ெறாரு விதமாகவும் விமரிசனம் எழுதுவது பத்திரிகைத் தர்மத்துக்கே விரோதம். விமரிசனம் புத்தகத்துக்கா அல்லது அதை எழுதியவருக்கா என்றுதான் கேட்கிறேன்.

'குமாரி சாந்தா பத்திரிகைக் காரர்களுக்கெல்லாம் வேண்டியவள். ஆகையால்தான் இப்படி வானளாவப் புகழ்ந்திருக்கிறார்கள் என்கிறீர்கள். அப்படித்தானே? எதுவானாலென்ன. உங்களைப்போல அவரும் எனது எழுத்தாளர்களில் ஒருவர். ஒருவரைப்பற்றி இன்னொருவரிடம் குறைகூறுவதோ, அல்லது விவாதிப்பதோ என் தொழிலுக்கு நன்மையானதல்ல. ஆனால் ஒன்று. எழுத்தாளர்களிடையில் இவ்வித பொறாமையிருப்பது இயற்கை. அது வரவேற்கத்தக்கதும்கூட. இந்த விஷயம் ஒருபுறமிருக்கட்டும். உங்கள் பரீட்சைகளெல்லாம் முடிந்துவிட்டதல்லவா?'

'ஆம், ஏன்?'

'நாளை நான் இலங்கைக்குப் போகிறேன். நீங்களும் வருவதானால் வாருங்கள். இரண்டு வாரகாலத்தில் திரும்பிவிடலாம். நீங்கள் இலங்கைக்குப் போனதே இல்லையே!'

'இலங்கையில் என்ன வேலை?'

'கமலாலயத்தின் கிளை ஸ்தாபனமொன்று இலங்கையிலிருக்கிறது. அதைப் பார்த்துவிட்டு வரப்போகிறேன்!'

'நான் வருவதற்கில்லை. என் தாயாருக்கு கொஞ்ச காலமாக காசநோய் ரொம்ப உபத்திரவம் கொடுத்து வருகிறது. அந்த வியாதிக்கு கடற்காற்று கூடாதென்கிறார்கள். உஷ்ணப் பிரதேசம் எதற்காவது ஜாகையை மாற்றலாமென்று நினைத்துக்கொண்டிருக்கிறோம். இன்னும் ஒன்றும் நிச்சயமில்லை. இருந்தாலும் இந்தசமயம் தாயாரைத் தனிமையில்விட்டு வரமுடியாது. பிறகு ஒருசமயம் பார்க்கலாம்!'

மேலும் சிறிதுநேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனான் சுந்தரம். அவன் புத்தகங்களைப் பிரசுரிக்க கமலாலயம் ஆரம்பித்ததுமுதல் கேசவனைப் பார்க்க சுந்தரம் அடிக்கடி வருவது வழக்கமாகிவிட்டது. ஒவ்வொருமுறை அவன்வந்துவிட்டுப் போகும்பொழுதும் குந்தளத்துக்குக் கடிதம் எழுத புதிய விஷயம் ஏதாவது கிடைத்துக்கொண்டிருக்கும் வஸுமதிக்கு. குமாரி சாந்தாவைப்பற்றி அன்று ஆத்திரத்துடன் சுந்தரம் பேசிவிட்டுப் போனதையும் வழக்கம் போல வஸுமதி எழுதியிருந்தாள். 'அத்தான் உண்மையைச் சொன்னார். என் அபிப்பிராயமும் அதுதான். சாந்தாவின் புத்தகங்களை வெளியிடுவதை நிறுத்திவிடுங்களேன்! சுந்தரம் அத்தான் புத்தகங்களுக்கு இரண்டு வர்ணத்தில் அட்டை. சாந்தாவின் புத்தகமென்றால் மூன்று வர்ணத்தில் அட்டை போடுகிறீர்கள். இது பாரபட்சமில்லையா?' என்று குந்தளம் தனது பதிலில் கேட்டிருந்தாள். இது பாரபட்சமில்லை. பிரசுர கர்த்தாவின் உரிமை. இந்த உரிமையை அனுமதிக்கச் சம்மதிப்பவர்களின் புத்தகங்களைமட்டுமே கமலாலயம் வெளியிடுவது வழக்கம்' என்று வஸுமதி சுருக்கமாக பதிலெழுதி அந்த விஷயத்தை அத்துடன் முடித்துவிட்டாள்.

சிறந்த எழுத்தாளர்கள் மட்டும் கிடைத்தால் தமிழ் நாட்டில் புரட்சியைமட்டுமல்ல, புயலையே கிளப்பிவிடுவேன் என்று கேசவன் சொல்லியது மெய்யாகிவிட்டது. சாந்தாவின் மூன்றாவது புத்தகமாகிய 'ஆற்றங்கரை அம்மன்' வெளிவந்ததுதான் தாமதம்; பத்திரிகைகள் பத்திபத்தியாகப்

புகழ்மாலைகளைச் சொரிந்தன. இலக்கிய உலகத்தின் பொக்கிஷமென்றது ஒரு பத்திரிகை. நகைச்சுவையரசி என்றது இன்னொன்று. நவீனங்களின் சிகரமென்று வர்ணித்தார் ஒரு விமரிசகர். தமிழ் நாடெங்கும் 'ஆற்றங்கரை அம்ம'னைப் பற்றியே பேச்சு. பேராசிரியர்கள் கையிலும், பள்ளிக்கூட மாணவர்கள் கையிலும், வக்கீல்களின் கையிலும், குமாஸ்தாக்கள் கையிலும் இதே புஸ்தகம்தான். சமையலறையில் இருக்கும் ஒரு ஸஹதர்மிணிக்கு அடுப்பில் பால் பொங்குவதுகூடத் தெரியவில்லை. இன்னொரு வீட்டில் 'சனியன் இரண்டு நிமிஷம் படிக்கவிடமாட்டேனென்கிறதே! என்று எரிந்து விழுகிறாள் பாலுக்குப் பசித்து அழும் குழந்தையிடம் அதன் தாயார்.

'இப்படிப் பேய்பிடித்தமாதிரி புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தால் வீட்டு வேலைகள் முடிந்தமாதிரித்தான்' என்று வேலைக்காரனை திட்டிக்கொட்டுகிறார் ஒரு எஜமான்.

'நான்தான் முதல், நீதான் முதல்' என்று இன்னொரு வீட்டில் ஒரு இளம் தம்பதிகள் போட்டி போட்டுக்கொண்டு புத்தகத்தை இழுத்ததில் ஒரு ஆற்றங்கரை அம்மன் இரண்டு அம்மன்களாகிவிட்டன!

இவ்விதம் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களையெல்லாம் பித்துப்பிடிக்கச் செய்துவிட்டது அந்தப் பொல்லாத ஆற்றங்கரை அம்மன்!

கமலாலயத்துக்கு நூற்றுக்கணக்கில் பாராட்டுக் கடிதங்கள் வந்து குவிந்தன. சாந்தாவின் போட்டோ வேண்டுமென்று கேட்டனர் சிலர். ஆட்டோகிராப் வேண்டுமென்றார்கள் வேறு சிலர். பள்ளிக்கூட பரிசளிப்பு விழாவிற்குத் தலைமை வகிக்க சாந்தாவை அழைத்தன நான்கைந்து கடிதங்கள். இவைகளையெல்லாம்விட சில வாரங்களுக்கு முன் பொறாமைக் கனலைக் கொட்டிவிட்டுப்போன சுந்தரமே கமலாலயத்தின் வெற்றியைப் பாராட்டி ஒரு கடிதம் எழுதியிருந்தான். நினைத்தால் கமலாலயம் சூறாவளியையே கிளப்புமென்பதை இப்பொழுதாவது சுந்தரம் ஒப்புக்கொண்டானே

என்று ஆத்ம திருப்தியடைந்தான் கேசவன். ஆற்றங்கரை அம்மனைப் பாராட்டிக் கிடைத்த கடிதக் குவியல்களை எல்லாம் குமாரி சாந்தாவுக்கு எப்படி அனுப்புவது? கேசவனுக்கு இது பெரிய பிரச்னையாகிவிட்டது!

இரண்டே வாரங்களில் எழுபதினாயிரம் பிரதிகள் விற்ற புத்தகமும் இல்லை; அதை வெளியிட்டு தமிழ்ப் பணியாற்றிய கமலாலயத்துக்கு ஈடுமில்லையென்று பெருமையடைந்தாள் வஸு. கணவனின் பெருமையில் அவளுக்கும் பங்கு உண்டுதானே?

அன்று காலை பாஸ்கரய்யர் முகம் என்றுமில்லாத வாட்டமடைந்திருந்தது.

'கடுதாசி வால்லேன்னு எவரு அழுதாங்க! இப்படி கடுதாசி வரவும் வேணும், அய்யரு முவத்தை இப்படி வைச்சுக்கிடவும் வேணும்!' என்று முனிசாமி தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான்.

சிந்தனை கலைந்தவரைப்போல சட்டென்று நிமிர்ந்து 'குழந்தை எங்கே இருக்கிறாள்?' என்று முனிசாமியைக் கேட்டார் அய்யர்.

'புத்தகசாலையிலே இருக்காங்க! கூட்டியரட்டுமா? என்னமாச்சும் கெட்டசேதி வந்திருக்குதா எசமான்?'

'அப்படியொன்றுமில்லை முனிசாமி. அம்புஜம் விஷயம்தான்!'

'பெரியம்மா எழுதியிருக்கிறாங்களா?'

'அவள் எழுதவில்லை, சுந்தரம் எழுதியிருக்கிறான்.'

'பதினைஞ்சு இருபது வருஷம் கழிச்சு இப்பனுச்சும் கடுதாசிபோடத் தெரிஞ்சுதே. எல்லாரும் சுகந்தானே எசமான்!'

'அம்புஜத்துக்கு காச நோயாம். படுத்த படுக்கையிலிருக்கிறாளாம். கடற்கரையைவிட்டு உஷ்ணமான ஊருக்

குப் போகவேண்டுமென்று டாக்டர் சொல்லுவதாய் சுந்தரம் எழுதியிருக்கிறான்!'

'கோயம்புத்தூரு சீமை நல்ல இடம்னு சொல்லுவாங்களே. அங்கு போகிறதுதானே!'

அய்யர் கொஞ்சம் தயங்கிவிட்டுச் சொன்னார், 'எந்த ஊருக்குப் போகலாமென்று யோசனைகேட்டு எழுதவில்லையப்பா, அம்புஜம் சொல்லுகிறாளாம் கடைசிகாலத்தில் என் பக்கத்திலிருந்து உயிரை விடவேண்டுமென்று. விஷயம் இதுதான். இதற்கு ஊரைச்சுற்றி வளைத்து எழுதியிருக்கிறான் பத்துப்பக்கம். அம்புஜம் செய்த தவறுகளுக்கெல்லாம் வருத்தப்படுகிறாளாம். எனக்கு ஏதோ துரோகம் செய்துவிட்டதாயும் அந்த துரோகத்தின் பலனை ஒவ்வொரு நிமிஷமும் அனுபவிப்பதாயும் சொல்லி அழுகிறாளாம். சுந்தரம் எழுதியிருப்பதை வாசித்தால் உண்மையில் அவள் ரொம்பக் கஷ்டப்படுவதாகத்தான் தெரிகிறது. ஆனால் சகோதரியென்ற பாசமே எனக்கு ஏற்படமாட்டேனென்கிறதே!'

'என்ன இருந்தாலும் பெரியம்மா எசமானுக்கு அங்கச்சிதானுங்களே!'

'அதற்காக?'

'கஷ்டப்பட்டால் உதவிசெய்யத்தான் வேணும்! அவங்களுக்கும் எசமானைவிட்டா வேறு யாரு இருக்கிறாக!'

'இத்தனை நாள் யார் இருந்தா?'

'பொம்புளே அசட்டுத்தனம்னு கேள்விப்பட்டதில்லிங்களா? சின்ன எசமான் எழுதியிருக்கிறதைப் பார்த்தால் பெரியம்மா இருக்கப்போறது இன்னும் ஆறு மாசமோ ஒரு வருசமோ? கடைசி காலத்திலேயாவது நிம்மதியாயிருந்துட்டு போவட்டுமே!'

'நீ சொல்வது சரிதான் முனிசாமி! உண்மையாகவே அம்புஜம் கஷ்டப்படுவதாகத்தான் தெரிகிறது. கஷ்டகாலம்

வந்தால் பழைய தவறுகள் ஞாபகத்துக்கு வருவதும் அதற்கு வருத்தப்படுவதும் இயற்கை. அதற்காக இங்கு அழைத்துவைத்துக்கொள்ள முடியுமா? இதை யோசிக்க வேண்டுமில்லையா?'

'இங்கேதான் வந்து இருக்கட்டுங்களே! இதிலே என்ன நஷ்டம்?'

'அம்புஜம் தனியாகப் பிரிந்து சென்னைக்குப் போய் விட்டால் நல்லதென்று முன்பு ஏன் நினைத்தோம்?'

'அதுமாதிரிங்களா இப்ப? நம்ம குளந்தையும் நினைவு தெரிஞ்சது. சின்ன எசமானும் படிச்சுப் பட்டம் வாங்கின வங்க. தவிரவும் நம்ம குழந்தை நீங்க நினைக்கிறமாதிரி இல்லவே இல்லை.'

'நீ சொல்லுகிறாய். அப்படி அம்புஜம் நினைக்கவேண் டுமே!'

'எல்லாம் தெரிஞ்சுதானே கடுதாசி போட்டிருக்கிறாங்க?'

'என்ன கடுதாசி அப்பா? வஸு வீட்டுக்காரர் எழுதி யிருக்கிறாரா?' வஸு எல்லாரும் சௌக்கியந்தானே?' என்று கேட்டுக்கொண்டே வந்தாள் குந்தளம் அங்கே.

'இல்லையம்மா' என்று ஆரம்பித்து வார்த்தையை விழுங் கினார் அய்யர். அவர் முனிசாமியைப் பார்த்தார். முனி சாமி அய்யரைப் பார்த்தான். இருவரையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டு நின்று மௌனத்தின் பொருள் விளங் காமல் திகைத்தாள் குந்தளம்.

சிறிதுநேரம் கழித்து ஏதோ வேலையிருப்பதுபோல 'பிறகு வருகிறேன் அப்பா!' என்று சொல்லி நகர ஆரம் பித்தாள்.

'இல்லை குந்தளம் இரு! உன் அத்தைக்கு உடம்பு ரொம்ப மோசமாயிருக்கிறதாம். இங்கு வந்திருக்க ஆசைப் படுகிறாளாம், சுந்தரம் எழுதியிருக்கிறான்' என்றார் அய்யர்.

'அப்படியா?' என்று சம்பந்தமில்லாதவள்போல பட்டுக்கொள்ளாமல் சொன்னாள் குந்தளம்.

'அம்புஜமும் சுந்தரமும் இங்கு வந்திருக்க விரும்புகிறார்கள். என்னவோ போனதையெல்லாம் மறந்து கஷ்டகாலத்தில் உதவிசெய்யவேண்டுமென்று வாதாடுகிறான் முனிசாமி.'

'உங்களுக்கு இஷ்டமானால் வந்திருக்கட்டுமே!'

'எனக்கு இஷ்டமானால் என்றால்? உனக்குப் பிரியமில்லையென்று அர்த்தமா?'

'நான் அப்படிச் சொல்லவில்லையே!'

'உன் அபிப்பிராயத்தைக் கேட்டேன்.'

'உங்கள் அபிப்பிராயப்படிதானென்றேன்!'

'அதற்கு என்ன அர்த்தம்?'

'ஒரே அர்த்தம்தான். உங்களுக்கு எது விருப்பமோ அதுதான் என் இஷ்டமும். எப்பொழுது உங்கள் அபிப்பிராயத்துக்கு மாறாக நான் அபிப்பிராயப்பட்டிருக்கிறேன்?'

'குந்தளம், உன்னை வக்கீலுக்குப் படிக்கவைத்திருக்க வேண்டும்! என்றார் அய்யர்.

'இப்பொழுது படிக்கும் ப்டிப்பிற்கே நேரமில்லை. வக்கீலுக்கும் படிப்பதென்றால் ஒரு நாளைக்கு இருபத்தெட்டு மணி இருந்தாலும் போதாதே அப்பா!'

'நம்ப குழந்தைக்கிட்டே யாரும் பேசித் தப்பிச்சுக்கிட முடியாதுங்க!' என்று முகமெல்லாம் புன்னகை படர பெருமையோடு சொன்னான் முனிசாமி.

'முனிசாமி சொல்லுகிறமாதிரி உன்னிடம் பேசமுடியாதம்மா! உன் புத்தகப் ப்டிப்பையெல்லாம் என்னிடமே காட்டுகிறாயே! நான் நினைக்கிறேன் அம்புஜம் உண்மையாகவே கஷ்டப்படுகிறாளென்று. கடைசி காலத்தில் பக்கத்தில்தான் இருந்துவிட்டுப்போகட்டுமே!'

'நல்லது அப்பா!'

'அத்தைக்கு நீயே எழுதிவிடு இங்கு வந்துவிடும்படி?' என்றார் அய்யர்.

'நானா? நீங்கள் எழுதுவதுதான் நல்லது' என்று தயக்கத்துடன் சொன்னாள் குந்தளம்.

'குழந்தை சொல்றது ஒருவிதத்தில் சரிதானுங்க. நீங்களே எழுதிப்போட்டால்தான் எசமானுக்கு கோவம் கீவம் ஒண்ணுமில்லேனு நினைப்பாங்க.'

'அதுவும் சரிதான். நானே எழுதுகிறேன் அம்மா! அத்தையின் முகம் உனக்கு மறந்துபோயிருக்கும். சுந்தரத்தையோ அடையாளமே தெரியாது!' என்றார் அய்யர்.

'வந்தபிறகு எல்லோருடைய அடையாளமும் தெரிந்துவிடுகிறது! நான் போகிறேன் அப்பா, வேலையிருக்கிறது!' என்று சொல்லிவிட்டு மாடியிலுள்ள தனது தனி அறைக்குச் சென்றாள் குந்தளம்.

அம்புஜத்தையும் சுந்தரத்தையும் புறப்பட்டு வந்து சேரும்படி பாஸ்கரய்யர் ஒரு கடிதம் எழுதி அன்றைய கட்டில் சேர்த்துவிடச்சொல்லி முனிசாமியிடம் கொடுத்தார்.

அறையில்போய் அமர்ந்த குந்தளம் பிரமைபிடித்தவளைப்போலானாள். தகப்பனாரிடம் ஏதோ கேட்பதற்காகவே மாடியிலிருந்து இறங்கி வந்தாள். ஆனால் அவரிடமிருந்து எதிர்பாராத வேறொரு செய்தியைக் கேட்டு அந்த அதிர்ச்சியில் சென்ற காரியத்தை மறந்து அறைக்குத் திரும்பிவிட்டாள். ஒரு புதிய பீதி தன்னைப் பலமாகப் பற்றிக்கொண்டதைப்போலிருந்தது குந்தளத்துக்கு. ஏன் என்ற காரணம் அவளுக்கே தெரியவில்லை. இதுவரை குதூகலத்துடனிருந்த அவளுக்கு இப்பொழுது திடீரென்று தனது சுதந்திரத்துக்கும் மன அமைதிக்கும் பங்கம் ஏற்பட்டுவிட்டதைப்போல தோன்றியது. அந்த வீட்டுக்கு அய்யருக்கு அடுத்தபடி எஜமானி அவள்தானே? அவள் சுதந்திரத்தை யார் கட்டுப்படுத்த முடியும்? அவளுடைய விவகாரங்களில் எவர் துணிந்து தலையிடமுடியும்? என்ன இருந்தாலும் வீடுதேடி வரும் அத்தை ஒரு விருந்தாளிபோலத்தானே?

கர்னுடகத்தில் பழகிய அத்தை தனது நாகரிகப் போக்கை விரும்பமாட்டாளென்று குந்தளம் அஞ்சினுளா? அத்தையை நினைவிருந்தாலல்லவா அவள் கர்நாடகமா அல்லது புது நாடகமா என்று தெரியமுடியும்? குந்தளத்துக்கே அறிய முடியவில்லை திடீரென்று அவளைப்பற்றிக்கொண்ட உணர்ச் சிப் பிரவாகத்தின் தன்மையை. வஸுவிற்குக் கடிதம் எழுதினுல் மனம் சிறிது நிம்மதியடையும்போலிருந்தது. உடனே எழுத உட்கார்ந்துவிட்டாள். ஒருபக்கம்தான் எழுதி னுள். அதற்கு ஒருமணிநேரம் பிடித்தது. ஏழெட்டு காகி தங்கள் வீணுகி குப்பைக் கூடைக்குப் போயின. கடைசி யில் எழுதி முடித்து உறையில்போட்டு ஒட்டிய கடிதத் தையும் கிழித்தெறிந்துவிட்டு வேருெரு கடிதத்தில் ஏழெட்டு வரி எழுதி தபால்பெட்டியில் போட அனுப்பினுள்.

குந்தளத்தின் கடிதத்தைப் பார்த்ததும் வஸுவிற்கு தூக்கிவாரிப் போட்டது. 'நான் நினைத்தபடியே ஆயிற்று பார்த்தீர்களா?' என்று சொல்லி அதை கேசவனிடம் கொடுத்தாள். கடிதத்தில் பின்வருமாறு எழுதப்பட்டிருந் தது :—

அன்புள்ள வஸு,

நான் எழுதப்போவதை நீ எதிர்பார்த்திருக்கமாட் டாய். ஏன் நானே எதிர்பார்க்கவில்லை. என் அத்தையும் அவள் பிள்ளையான பிரபல ஆசிரியர் சுந்தரமும் எங்களு டன் சேர்ந்து வசிக்க திருச்சினுப்பள்ளிக்கு வருகிருர்களாம். அப்படி ஒரு கடிதம் வந்திருக்கிறது இன்று. அத்தான் சுந்தரம் என்னைப்பற்றி உங்களிடம் என்னென்னவோ பேசி யிருக்கிருர். உனக்கும் எனக்குமுள்ள தொடர்பு வெளியா ஞல் என்ன விபரீதம் ஏற்படுமோ தெரியவில்லை. உன் தாயாரும் தகப்பனுரும் எங்களுடனிருக்கும்பொழுது உன் னைப்பற்றியும் உன் கணவரைப்பற்றியும் அத்தையிடமோ அத்தானிடமோ அப்பா பிரஸ்தாபிக்காமலிருப்பாரா என்ன? இது என்ன விபரீதத்தில் முடியப்போகிறதோ என்று பயமாயிருக்கிறது.

குந்தளம்.

இதைப் படித்ததும் கேசவனுக்கும் என்ன சொல்வ தென்று புரியவில்லை. 'பாஸ்கரய்யரைப்பற்றி ஒன்றுமே தெரியாதவன்போலில்லையா சுந்தரத்திடம் இதுவரையில் பேசிவந்தேன். உண்மை தெரிந்தால் என்னைப்பற்றி அவன் என்ன நினைப்பான்?' என்றான் பிறகு கவலையோடு.

'தர்மசங்கடமான நிலைமையில்லையா இது! என்னைத் தெரிந்ததுபோலக் காட்டிக்கொள்ளவேண்டாமென்று நானே அய்யருக்கு எழுதினாலென்ன?' என்று கேட்டான் கேச வன் சிறிது நேரங்கழித்து.

'அவர் என்ன நினைப்பாரோ?'

'நினைப்பதற்கு என்ன இருக்கிறது? 'தொழில்முறையை உத்தேசித்து உங்களைத் தெரியாதவன்போல சுந்தரத்திடம் நான் நடந்துகொண்டிருக்கிறேன். தயவுசெய்து நீங்களும் என்னைத் தெரிந்ததுபோலக் காட்டிக்கொள்ளாமலிருந்தால் நல்லது' என்று அய்யருக்கு எழுதுகிறேன். நீயும் அப்ப டியே அம்மாவுக்கு எழுதிவிடு!'

'தொழிலின்மேல் பழியைப்போட்டுவிடலாம். நல்ல யோசனைதான். ஆனால், சுந்தரம் திருச்சிக்கு வரப்போவ தாக நமக்கு எப்படித் தெரியுமென்று கேட்டால்? குந்த ளம் எழுதியிருக்கலாமென்று அவர்கள் நினைக்கக்கூடா தல்லவா?'

'குந்தளம் எழுதுவானேன்? சுந்தரம் சொன்னதாகவே எழுதிவிடுவது. வேண்டுமானால் இன்றே சுந்தரத்தைக்கண்டு பேசுகிறேன். திருச்சிக்குப் போகப்போவதாக அவனே சொல்லும்படி செய்துவிட முடியாதா?'

கேசவன் யோசனை நல்ல யோசனைதானென்று வஸந்த வும் ஆமோதித்தாள். அன்றையதினமே அவர்கள் அய்ய ருக்கும் சங்கரிக்கும் இரண்டு கடிதங்கள் எழுதிப்போட்டு விட்டார்கள்.

## 5. அவளும் சிரித்தாள், அவனும் சிரித்தான்

வெள்ளிக்கிழமை விடியற்காலை நான்குமணி வண்டியில் வருவதாக சுந்தரம் எழுதியிருந்தான். அதற்காக அய்யர் வீட்டில் எல்லோரும் மூன்றரைமணிக்கே அன்று எழுந்துவிட்டார்கள். ஸ்டேஷனுக்குப்போன மோட்டார் டிரைவர் திரும்பிவந்து 'நாலுமணி வண்டியில் ஒருவரும் வரவில்லை' என்றான்.

'எல்லா வண்டியையும் பார்த்தாயா? ஒரு சமயம் வண்டியில் தூங்கிவிட்டார்களோ என்னவோ?' என்றார் அய்யர்.

'இல்லை எஜமான்! ஒவ்வொரு வண்டியாய்ப் பார்த்து கேட்டனுங்க' ரயில் தவறி அடுத்த வண்டியில் வருகிறார்கள் போலிருக்கிறது!'

'சரி! பத்துமணி வண்டிக்கு மறுபடியும் காரைக் கொண்டுபோய்ப்பாரு!; என்று சொல்லிவிட்டு அய்யர் மறுபடியும் படுக்கப்போனார்.

குந்தளம் உறக்கம் வராமல் புத்தகசாலையில் நுழைந்தாள். சுந்தரம் எழுதிய புத்தகங்களிலொன்றைப் புரட்டி சிறிதுநேரம் வாசித்தாள். வாசலில் பெரிய கூச்சல் கேட்ட பொழுதுதான் பொழுது விடிந்துவிட்டதென்பது அவளுக்குத் தெரிந்தது. ஒரு குடுகுடுப்பாண்டி 'அய்யாவுக்கு அதிர்ஷ்டம் வருகுது! அய்யாவுக்கு அதிர்ஷ்டம் வருகுது!' என்று கத்திக்கொண்டே உடுக்கை அடித்தான்.

'வந்திருக்கிற அதிர்ஷ்டம் போதும் சப்தம்பண்ணுமே போறியா சுடுதண்ணியைக் கொண்டுவந்து ஊத்தட்டுமா?' என்று தூக்கம் கலையாமல் கண்ணைக் கசக்கிக்கொண்டே அதட்டி விரட்டுகிறான் முனிசாமி.

அந்த நாடகத்தை உப்பரிகையில் நின்று பார்த்தாள் குந்தளம். அவள் நிற்பதை குடுகுடுப்பாண்டி எப்படியோ கவனித்துவிட்டான். பிரமாதமான குஷி பிறந்துவிட்டது அவனுக்கு. உடுக்கை இன்னும் கொஞ்சம் வேகமாகச் சென்றது. அவன் தொனியும் உச்ச ஸ்தாயியை அடைந்தது.

'ராசாத்தி அம்மாளுக்கு ராசாபோல ஒரு புருஷன் வரப்போறான்! ராசாபோல ஒரு புருஷன் வரப்போறான்! தங்கப்பொம்மை மாதிரி ஒரு சின்னராசா பொறக்கப்போறான்' தங்கப்பொம்மை மாதிரி ஒரு சின்னராசா பொறக்கப்போறான்.'

குடுகுடுப்பாண்டியின் இந்த ஜோஸ்யத்தைக்கேட்டு குந்தளம் 'களுக்'கென்று சிரித்துவிட்டாள். அதே சமயம் கீழே இன்னொருவர் கலகலவென்று நகைத்த சப்தம் குந்தளத்துக்குக் கேட்டது. சப்தம் வந்த திசையில் திரும்பினாள். குடுகுடுப்பாண்டிக்குச் சிறிது பின்னால் கதராடையணிந்த ஒரு இளைஞன் தன்னையும் குடுகுடுப்பாண்டியையும் பார்த்து நகைப்பதை அவள் கவனித்தாள். அவன் யார்? எப்படி திடீரென்று அங்கு நுழைந்தான்? நேர்வாசல் வழியாக வந்திருந்தால் முன்னரே குந்தளம் பார்த்திருப்பாள்? பங்களாவின் வலது பக்கத்து வாசல்வழியாக வந்திருந்தால் மாடியிலிருந்து பார்ப்பவர்களுக்கு பங்களாவில் நுழைபவர்கள் வாசற்படியை அடையும்வரையில் தெரியாது. 'ராசாத்தி அம்மாளுக்கு ராசாபோல ஒரு புருஷன் வரப்போறான்!' என்று குடுகுடுப்பாண்டி ஜோஸ்யம் சொன்ன சமயத்தில் தற்செயலாக அங்கு வந்து சேர்ந்ததை நினைத்துச் சிரித்தான் இளைஞன். மாடியிலிருந்து சிரிப்புச் சப்தம் கேட்டபிறகு தான் அங்கு ஒரு பெண் நிற்பதைக் கவனித்தான். ஒருவரையொருவர் பார்த்தவுடன் விவரம் தெரியாத ஒரு கலவரம் இருவருக்கும் ஏற்பட்டது. குந்தளம் உப்பரிகையை விட்டு உள்ளே போய்விட்டாள். தனது அர்த்தமற்ற சிரிப்பு அசம்பாவிதமாக முடிந்துவிட்டதைத் தெரிந்துகொள்ள வாலிபனுக்கு அதிகநேரம் பிடிக்கவில்லை.

சட்டைப்பையிலிருந்து இரண்டணுக்காசை எடுத்துக் கொடுத்து குடுகுடுப்பாண்டியை அனுப்பிவிட்டு 'பங்களா விற்குள் அவன் நுழைந்தபொழுது, குடுகுடுப்பாண்டிக்குக் கொடுக்க ஒரு கிழிசல் சட்டையுடன் அங்கு வந்தான் முனி சாமி. குடுகுடுப்பாண்டி மறைந்து ஒரு வாலிபன் வருவ தைக் கண்டதும் 'யாரையா நீ, சொல்லாமே கேளாமே உள்ளே வரது? வராண்டாவிலே உட்காரு, கணக்கப்பிள்ளை வருவாரு;' என்று அதிகாரத்தொனியில் ஒரு உத்தரவு போட்டான்.

'நான் பட்டணத்திலிருந்து வருகிறேனப்பா! உங்க அய்யாவின் தங்கைபிள்ளை! அம்மா வெளியே காரிலிருக்கி ருள்! மெயின் கேட் பூட்டியிருந்தது. தட்டித்தட்டிப் பார்த் தேன்; பதிலில்லை. ஆகையால் பக்கத்து சின்னவாசல் வழி யாக நான் வந்தேன். மெயின் கேட்டைத் திறக்கச்சொல்லு, கார் உள்ளே வரட்டும்!' என்ருன் வந்த வாலிபன்.

'சின்ன எசமான் சுந்தர எசமாங்களா? வாங்க வாங்க. என்துரையை அடையாளமே தெரியலீங்களே! நான் முனி சாமியில்லங்களா! என்னைத் தெரியலே? அடே யாரடா குப்பு சாமி! மெயின் கேட்டைத்திற! ஜல்தி திறந்துவிடடா!'

முனிசாமி போட்ட சப்தத்தில் வந்திருப்பது யாரென் பது வீட்டுப் பணியாளர்களுக்கெல்லாம் பரவிவிட்டது. நிம்மதியாகப் படுக்கையில் சோம்பல் முறித்துக்கொண் டிருந்த தோட்டக்காரர்களில் ஒருவனுன குப்புசாமி ஓடோ டியும் சென்று மெயின் கேட்டைத் திறந்தான். இருட்டு இன்னும் பூரணமாகக் கலையாததால் இன்னொரு பணியாள் மின்சார விளக்குகளைப் பற்றவைத்தான். இதற்குள் 'என்ன அமர்க்களம் இது? இதெல்லாம் என்னப்பா முனிசாமி!' என்று கேட்டுக்கொண்டே வாசற்புறத்துக்கு அய்யரும் வந்து சேர்த்தார்.

'நம்ப சின்னய்யா சுந்தரம் வந்திட்டாருங்க எசமான்! அம்மா வெளியே காரிலே இருக்கிருக! மெயின் கேட்டைத் திறக்கப் போயிருக்கிருன் குப்புசாமி!' என்ருன் முனிசாமி.

அவன் பக்கத்தில் தூய வெள்ளைக் கதராடையணிந்த ஆடம்பரமற்ற ஒரு இளைஞன் நிற்பதை அய்யர் பார்த்தார். 'வா அப்பா சுந்தரம்! அடையாளமே தெரியவில்லையே! யாரோ என்றில்லையா நினைத்தேன்!' என்று நல்வரவு கூறி சுந்தரத்தை அணைத்துக்கொண்டார் அன்புடன்.

'பதினைந்து பதினாறு வருடங்களுக்குப்பிறகு இப்பொழுதாவது உங்களைப் பார்க்கும் பாக்கியம் கிடைத்ததே மாமா!' என்றான் சுந்தரம். அவன் கண்கள் கலங்கியதை முனிசாமி ஒருவனைத்தவிர வேறு எவரும் கவனிக்கவில்லை.

'ஆமாம் இப்பொழுது வண்டி ஏது? நாலுமணிக்குப் பிறகு அடுத்த வண்டி 10 மணிக்குத்தானே?

'நாலுமணி வண்டியில்தான் வந்தோம் மாமா. கும்பகோணம் ஸ்டேஷனுக்கருகில் தண்டவாளம் பெயர்ந்திருந்தது. அதனால் எல்லா வண்டிகளும் இரண்டுமணி நேரம் தாமதப்பட்டுவிட்டது!'

'அப்படியானால் நாலுமணிக்கு திருச்சி வந்த வண்டி உண்மையில் இரண்டுமணி வண்டிபோலிருக்கிறது! ஸ்டேஷனுக்குப்போன முட்டாள்பயல் ஒன்றும் விசாரிக்காமல் இரண்டுமணி வண்டியில் தேடிவிட்டு நீ வரவில்லையென்று சொன்னான். ஒரு சமயம் வண்டி தவறிப்போய் பத்துமணி வண்டியில் வருவாயென்று நினைத்தேன். அதோ கார் வருகிறது, அப்பா முனிசாமி காரிலுள்ள சாமான்களையெல்லாம் பத்திரமாக எடுத்து வைக்கச்சொல்லு, என்று சொல்லிக்கொண்டே அய்யர் கீழிறங்கி கார் அருகில் வந்தார். கையில் ஒரு தடியுடன் மெள்ள ஊன்றிக்கொண்டே அம்புஜம் காரிலிருந்து இறங்கினாள். அவளைப் பார்த்ததும் அய்யருக்கு உடல் பதறிவிட்டது.

'யார் அம்புஜமா! ஐயையோ! என் இப்படி எலும்பும் தோலுமாகி விட்டாய்! உடம்பு இவ்வளவு மோசமாகும்வரையிலா தமையனிடம் போகக்கூடாதென்ற வைராக்கியம்? அடபாவி! நடைப்பிணம்மாதிரி ஆகிவிட்டாயே!

என்று சகோதரி அம்புஜத்தைக் கட்டிக்கொண்டு கண்ணீர் வடித்தார் அய்யர்.

'அண்ணு! நான் செய்த பாவம் படுத்துகிறது இப்படி என்னே! அவரவர் தலைவிதியை அவரவர்கள் அனுபவித்துத்தானே தீரவேண்டும். சென்றதையெல்லாம் மறந்து இவ்வளவு அன்புடன் வரவேற்கிருயே அது ஒன்றே போதும் என் ஆத்மா சாந்தியடைய! இனி அமைதியாக சாவை வரவேற்பேன்!' என்று அழுதுகொண்டே சொன்ஞள் அம்புஜம்.



'அசடுமாதிரி உளறுதே! சீக்கிரம் குணமடைந்துவிடுவாய். மெதுவாக வா, உள்ளே போவோம்! சுந்தரம் அம்மாவை அந்தப்பக்கம் பிடித்துக்கொள் அப்பா!' என்று அய்யர் சொல்லவும். அந்த உருக்கமான காட்சியில் உணர்ச்சி பரவசமடைந்த சுந்தரம் ஸ்வப்ன உலகில் நடமாடுவதைப் போல தனது தாயாரை ஒருபக்கம் பிடித்துக்கொண்டான். அவனும் அய்யருமாக அம்புஜத்தை மெதுவாக உள்ளே அழைத்துக்கொண்டு போனார்கள். 'நான் அப்பொழுதே சொல்லவில்லையா? என்ன விரோதம் இருந்தாலும் உடன் பிறந்த பாசம் விடுமா?' என்று முகமலர்ச்சியோடு தனக்குள் சொல்லிக்கொண்டான் முனிசாமி.

கீழே இவ்வளவு நடந்தும் அவைகளைப்பற்றி குந்தளத்துக்கு ஒன்றும் தெரியாது. 'ராசாத்தி அம்மாவுக்கு ராசாபோல ஒரு புருஷன் வரப்போறான்! தங்கப் பொம்மை மாதிரி ஒரு சின்னராசா பொறக்கப்போறான்!' என்று குடுகுடுப்பாண்டி விடிந்ததும் விடியாததுமாகச் சொல்லியது குந்தளத்துக்கு வேதனையைக் கொடுத்தது. குந்தளத்துக்கு ஒரு புருஷன்! அவனுக்குப் பிறக்கும் ஒரு குழந்தை! இந்த ஜோஸ்யம் நீ விதவை, விதவை! அகில உலகமும் வெறுத்து ஒதுக்கப்பட்ட தீண்டத்தகாத களிமண் பொம்மை!' என்று இடித்துக் காட்டுவதைப் போலிருந்தது குந்தளத்துக்கு. விவரம் தெரியாமல் கேலியாக நினைத்துச் சிரித்ததற்கு வெட்கினாள். குடுகுடுப்பாண்டிக்குப் பின்னால் நின்று சிரித்தானே அவன் யார்? எதற்காகச் சிரித்தான்? விதவைக்கு பிள்ளைவரம் கொடுத்ததைக்கேட்டு கேலிசெய்தானா? அல்லது ராசா வரப்போகிறானென்று ஜோஸ்யம் சொன்ன சமயத்தில் தற்செயலாக வந்து சேர்ந்ததை நினைத்துச் சிரித்தானா? அல்லது ஒரு அர்த்தமுமில்லாமல் குடுகுடுப்பாண்டியின் வேஷத்தைப் பார்த்துச் சிரித்தானா? என்னைக் கேலிசெய்ய நினைத்திருக்கமாட்டான். நினைத்திருந்தால் என்னைப் பார்த்தவுடன் ஏன் சட்டென்று சிரித்ததை நினைத்து வருந்தியதுபோல நிறுத்திக்கொண்டான்? அவன் ஏன் வந்தான்? நம் வீட்டில் இந்தநேரத்தில் அவனுக்கு என்ன வேலை?

இப்படி குமிழிபோல ஓராயிரம் எண்ணங்கள் குந்தளத்தின் மனதில் தோன்றின. அந்த வேதனையில் கீழே கார்வந்த சப்தத்தையோ பேச்சுக்குரலையோ அவள் கவனிக்கவே இல்லை. 'பெரியம்மாவும், சின்ன எசமானும் வந்துட்டாங்க அம்மா!' என்று முனிசாமி வந்து அறிவித்ததும் அப்பொழுதுதான் தூக்கத்திலிருந்து எழுந்ததைப்போல, 'அப்படியா? எப்பொழுது வந்தார்கள்? வண்டி ஏது இப்ப?' என்று கேட்டாள் குந்தளம்.

'குடுகுடுப்பாண்டிக்கு கிழிசல் சட்டையெடுத்துக்கிட்டுப் போறேன் அங்கே சின்ன அய்யா வந்து நின்னாரு! எனக்கே ஆச்சரியமாப்போச்சு!' என்று ஆரம்பித்து வண்டி நேரம் கழித்து வந்ததுமுதல் அம்புஜத்தை அய்யர் வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றதுவரை ஒன்றுவிடாமல் வர்ணித்தான் முனிசாமி.

அப்பொழுதுதான் குடுகுடுப்பாண்டியின் பின்னால் வந்துநின்ற வாலிபன் அத்தான் சுந்தரமென்பது குந்தளத்துக்குத் தெரிந்தது. இந்த உண்மை அவளுடைய கலவரத்தை மேலும் அதிகப்படுத்தியது.

'பெரியம்மாளும், சின்ன எசமானும் உங்களை நாலஞ்சு தடவை கேட்டுவிட்டாங்க. இன்னும் எழுந்திருக்கலேனு சொன்னேன். ஜல்தியா பல்தேய்ச்சு முகம் கழுவிக்கிட்டு வாங்க நான் போறேன்!' என்று முனிசாமி சொல்லிவிட்டுப் போனான்.

இதுவரை பறவை ஜாதியைப்போல எதேச்சையாக நடமாடிக்கொண்டிருந்த குந்தளத்துக்கு வெட்கமும் நாணமும் திடீரென்று எப்படித்தான் ஏற்பட்டதோ தெரியவில்லை! இந்த மாறுதலை அவளும் நன்கு உணர்ந்திருந்தாள். ஒரு காலத்தில் வாடா போடா என்று ஏக வசனத்தில் அழைத்த சுந்தரம்தானே இப்பொழுது வந்திருப்பவன்? வயதாகி வளர்ந்துவிட்டால் அந்நியனாகிவிடுவானா? கிராமங்களுக்குப் போய் எவ்வளவோ அந்நிய புருஷர்களுடன் பழகியபொழுதுகூட இப்படிப்பட்ட சங்கோஜம்

ஏற்பட்டதில்லையே? இப்பொழுது மட்டும் ஏன் ஒருமாதிரி கூசுகிறது மனம்? இப்படி நினைத்தாள் குந்தளம். காரணம் அவளுக்கே தெரிந்தால்தானே!

'அம்மா குந்தளம்! குந்தளம்! பலகாரம் சாப்பிட வர வில்லை!' என்று அய்யர் கூப்பிடும் சப்தம் கேட்டது. அதற்குமேல் தாமதிப்பது சரியில்லையென்று தோன்றியது. 'இதோ வந்துவிட்டேன் அப்பா!' என்று பதில் குரல் கொடுத்துக்கொண்டே கீழிறங்கி சமையலறையில் நுழைந் தாள் குந்தளம்.

அங்கு அய்யர் நடுவிலும், ஒரு பக்கம் அம்புஜமும், மற்றொருபக்கம் சுந்தரமும் உட்கார்ந்திருந்தார்கள். பக்கத் தில் இரண்டு இலைகள் காலியாயிருந்தன.

'அத்தை! வாருங்கள், வாருங்கள்! உருவமே தெரியா மல் இப்படி இளைத்துவிட்டீர்களே! உடம்பு இப்படி மோச மாகும்வரையிலா ஒரு கடுதாசிகூடப் போடாமலிருந்தீர்கள்?' என்று அம்புஜத்தைப்பார்த்து மரியாதைக்குச் சொல்லி விட்டு, 'அத்தானைக்கூடத்தான் அடையாளமே தெரிய வில்லை. யாரோ புது மனுஷர்மாதிரியிருக்கு!' என்று தலை நிமிராமல் கூறினாள் குந்தளம்.

அம்புஜம் மெதுவாக எழுந்து குந்தளத்தின் தலையைத் தொட்டு திருஷ்டி கழித்து, 'குழந்தையின் முகம் அம்மா மாதிரி அப்படியே உரித்து வைத்தாப்லே இருக்கு! என்ன செய்யலாம் பாழும் கடவுளுக்குத்தான் கண்ணில்லாமல் போய்விட்டது. ஊம்! உன் அத்தையைப் பார்த்தாயோ இல்லையோ? இந்த நிலைமையிலாவது நீ பார்க்க முடிந்ததே, அதுவே பெரிதென்று நினைத்துக்கொள். போனமாதமெல் லாம் நினைவுமூச்சு இல்லாமல் கிடந்தேன். உன்னையும் பாஸ்கரனையும் பார்த்துவிட்டு உயிரை விடுவதற்காக ஆத்மா ஊசலாடிக்கொண்டிருந்தது! என்று தழுதழுத்த தொனியில் சொன்னாள்.

பிறகு எல்லோரும் காலைப்போஜனத்துக்கு உட்கார்ந்தார்கள். சுந்தரத்தின் பக்கத்தில் இருந்த இரண்டு காலி இலைகளிலொன்றிலே குந்தளம் உட்காரவேண்டியிருந்தது. நடுவில் ஒரு இலையைக் காலியாகவிட்டு கடைசி இலையில் உட்காருவது மரியாதையில்லையென்று எண்ணி, சுந்தரத்துக்கு அடுத்தபடியாக அமர்ந்தாள் குந்தளம்.

'இன்னும் சங்கரியம்மாளைக் காணோமே!' என்றாள் சமையல்காரி கனகம்.

'ஆமாம், அவளை அடியோடு மறந்துவிட்டோமே! நீதான் போய் அழைத்துவா' என்று சமையல்காரியிடம் சொன்னார் அய்யர். அதற்குள் 'முனிசாமி, முனிசாமி! நேரமாகிறது. குழந்தையை எழுப்பி காப்பி சாப்பிட வரச் சொல்லு!' என்று கூவிக்கொண்டே வழக்கம்போல தடதடவென்று சமையலறையில் பிரவேசித்தாள் சங்கரி. அங்கு அம்புஜம் முதலியோர்களைக் கண்டதும் சட்டென்று கொஞ்சம் பின்வாங்கினாள்.

'உங்கள் குழந்தை இதோ இலையில் உட்கார்ந்து இட்லி சாப்பிடப்போகிறது!' என்று சிரித்துக்கொண்டே கூறினாள் குந்தளம்.

'உனக்கு எத்தனை வயசு ஆனால்தானென்ன? எங்களுக்கு நீ குழந்தைதானே!' என்று அம்புஜம் குந்தளத்தைப்பார்த்துச் சொல்லிவிட்டு சங்கரியை நோக்கி 'ஏனம்மா தயங்குகிறாய். வா உனக்குத்தான் காத்திருக்கிறோம். நான் வந்திருப்பதற்காக கொஞ்சங்கூட சங்கோசப்படாதே! என்னை உங்களுடைய விருந்தாளியைப்போல நினைத்துக் கொள்ளுங்கள். குழந்தையை கண்ணிமைமாதிரி காப்பாற்றி வளர்த்துவிட்ட தாயார் நீ. இந்த வீட்டில் உனக்குப்பிறகு தான் நான்! உட்காரம்மா!' என்று உபசரித்தாள்.

சங்கரி குந்தளத்துக்கு அடுத்தாற்போல் உட்கார்ந்த பின் சமையல்காரி பலகாரங்களைப் பரிமாற ஆரம்பித்தாள்.

'நீ சொல்லியது என்னவோ வாஸ்தவம் அம்புஜம். உயிருக்கு உயிராக இருந்து குந்தளத்தை வளர்த்தது சங்கரிதான். அவளுக்கு நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன்!' என்றார் அய்யர் சாப்பிட்டுக்கொண்டே.

'அதான் நான் சொன்னேன் சங்கரிக்கு எப்பொழுதும்போலிருக்கவேண்டுமென்று. நான் வியாதிக்காரி. குந்தளத்தைப்போலவே என்னையும் அவள்தான் கவனித்துக் கொள்ளவேண்டும்!' என்றாள் அம்புஜம். இந்த வார்த்தைகள் அந்தரங்கசுத்தியானவைகளென்பது அவளுடைய தொனியில் தெளிவாக பிரதிபலித்தது.

'இனிமேல் அம்மாபாடு திண்டாட்டம்தான்! நான், அத்தை அத்தான் இந்த மூன்று குழந்தைகளையும் கவனித்தாகவேண்டும்!' என்று குந்தளம் குறும்பாகச் சொல்லவும் எல்லாரும் 'கொல்'லென்று சிரித்துவிட்டார்கள். அந்தச் சிரிப்பில் சுந்தரம் வாயிலிருந்த இட்லியில் ஒரு துண்டு குந்தளத்தின் இலையில் தவறி விழுந்துவிட்டதை அவனும் அவளும் மட்டும்தான் கவனித்தனர். ஒருவரையொருவர் ஒருவினாடி பார்த்துவிட்டு ஒன்றுமே நிகழாததுபோல இருவரும் சாப்பிடலாயினர்.

பலகாரம் சாப்பிட்டுவிட்டு எல்லோரும் தாழ்வாரத்துக்கு வந்து உட்கார்ந்தார்கள். சங்கரி சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு மத்தியானச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்வதற்காகப் போனாள்.

'காந்திஜீமாதிரி அத்தானுக்கும் மௌனதினம் ஒன்றுண்டோ? வாரத்துக்கு ஒரு நாளா அல்லது மாதத்தில் ஒருநாளா? ஒரு வார்த்தைகூடப் பேசாமலிருக்கிறாரே!' என்றாள் குந்தளம்.

'இருக்கிறாரே போகிறாரே என்று புதுப்பாஷையில் நீ பேசுவதால்தான்! உன் அத்தான் சுந்தரம் பழைய சுந்தரம்தான். இத்தனை மரியாதை எதற்கு?' என்றாள் அம்புஜம்.

'அப்படி ஒன்றுமில்லை அத்தை!' என்று அசட்டுச் சிரிப்புச் சிரித்தாள் குந்தளம். சுந்தரமும் அர்த்தமில்லாமல் சிரித்தான்.

'சுந்தரத்துக்கு இங்கு பொழுதே போகாது. இந்த ஊரில் புதிய சிநேகம் பிடிக்கவேண்டும் இனிமேல்!' என்ருர் அய்யர்.

அம்புஜம்:- பட்டணத்திலும் சுந்தரம் அதிகமாய் வெளியில் வாசலில் போவதில்லை. எப்பொழுது பார்த்தாலும் எழுதிக்கொண்டேயிருப்பான். நான்கூடச்சொல்லுவேன் உடம்புக்கு ஏதாவது வந்துவிடுமென்று! கேட்டால் தானே!'

குந்தளம்:- 'அத்தான் நாவல்களை நீங்கள் படித்திருக்கிறீர்களோ அத்தை? நன்ருய்த்தான் எழுதியிருக்கிருர். அப்பாகூடப் படித்திருக்கிருர் அத்தான் புத்தகங்களையெல்லாம்!

சுந்தரம்:- இப்பொழுதுதானே அம்மா சொன்னுள் அவர் இவர் என்ற கௌரவப்பட்டமெல்லாம் எனக்கு வேண்டாமென்று!

அய்யர்:- எவரிடமும் மரியாதையாகப் பேசுவது குந்தளத்தின் சுபாவம். நாளடைவில் சரியாய்ப்போய்விடும். இல்லையா குந்தளம்?

மறுபடியும் ஒரு அர்த்தமற்ற சிரிப்புதான் இதற்கு குந்தளத்தின் பதில்.

அம்புஜம்:- 'அதையேன் கேட்கிருயம்மா! பட்டணத்தில் யாரோ சாந்தாவாம்! அவள் ரொம்ப நன்ருய் எழுதுகிருளென்று ஜெகமெலாம் முழங்குகிறதாம். அவளைவிட நன்ருக எழுதிப் பெயர் வாங்கவேண்டுமென்று ராத்திரி பகலென்றிராமல் ஓய்ச்சலின்றி எழுதுகிருன். உடம்பு கெட்டுவிடாதோ இப்படி உயிரை விட்டு எழுதினுல்?

குந்தளம்:- சாந்தா அப்படியொன்றும் பிரமாதமாக எழுதிவிடவில்லையே! அவள் புத்தகங்களை நானும் படித்திருக்கிறேன்.

சுந்தரம்:- உண்மையை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும் குந்தளம்! உன் அத்தானை புகழ்வதற்காக ஒரு சிறந்த எழுத்தாளரை தாழ்த்திப் பேசிவிடக்கூடாது. என்ன இருந்தாலும் சாந்தாவின் கடைசிப் புத்தகத்துக்கு நிகர் தமிழ் இலக்கியத்திலேயே கிடையாது.

குந்தளம்:- அபிப்பிராயம் மாறுபடலாம். ஆனால் நான் ஒப்புக்கொள்ளமாட்டேன்.

சுந்தரம்:- அதனால் சாந்தாவின் மதிப்பு குறைந்துவிடுமா? தமிழ்நாடு முழுவதும் போற்றுகிறது அவளை!

குந்தளம்:- அதற்கு விவஸ்தையில்லை. நாளை இன்னொருவரை வானத்தில் தூக்கிவைக்கும்!

சுந்தரம்:- இது முற்போக்கான வரவேற்கத்தகுந்த அம்சம்தானே! தமிழ் இலக்கியம் ஸ்தம்பிதமடையாமல் படிப்படியாக மேல்நோக்கி வளர்ச்சியடைவதைக் குறிப்பிடுகின்றது இது!

குந்தளம்:- இருக்கலாம். ஆனால் ஒருவரை வானளாவிப் புகழுவது அவருக்கு மண்டைக்கனத்தை உண்டுபண்ணுகிறது. அவரைப்போன்ற வேறு பல இளம் எழுத்தாளர்களின் நெஞ்சத்தையும் பிளந்துவிடுகின்றது.

சுந்தரம்:- நீ நினைப்பது தவறு. புகழும் பாராட்டுதலும் உற்சாகத்தை அதிகரிக்குமேதவிர கர்வத்தை உண்டுபண்ணாது.

குந்தளம்:- மனிதனை மனிதனாக நினைத்துப்பேசவேண்டுமேதவிர தேவனாகக் கற்பனைசெய்துகொண்டு ஆராய்வதில் பயனில்லை. கர்வம் மனித சுபாவம். அதற்கு பலியாகாமலிருப்பவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம்.

அய்யர்:- குந்தளம் சொல்வது என்னவோ அனுபவ உண்மை! ஏதோ ஒரு பத்திரிகையில் இரண்டு கதையைப் போட்டுவிட்டார்களென்று அந்தப்பயல் எப்படி தலைகீழாக நிற்கிறான். நாலு எழுத்து எழுதத்தெரிந்தவுடன் மண்டைக் கிறுக்கு ஏற்பட்டுவிடுவதை எத்தனைபேர்களிடம் நாம் பார்க்கவில்லை?

அம்புஜமும் அய்யரை ஆதரிக்கும் முறையில் பேச ஆரம்பிக்கவே சுந்தரம் தன்பக்கம் தோல்வியடைந்து விட்டதை உணர்ந்து சம்பாஷணையை வேறுவிஷயத்தில் திருப்பி விட்டான்.

'மூன்றாவது மாடியிலுள்ள இரண்டு அறைகளையும் சுந்தரத்துக்கு ஒழித்துக்கொடுத்துவிடு முனிசாமி! நல்ல காற்றோட்டமான அந்த இடம்தான் அமைதியாக உட்கார்ந்து கதை எழுதச்சரி!' என்று முனிசாமியிடம் சொன்னார் அய்யர்.

'வாங்க எஜமான் அறைகளை காட்டுகிறேன். வேண்டிய சௌகரியங்களை பண்ணிக்கலாம். தண்ணீர்க்குழாய் எல்லாம்கூட உயரவே இருக்குது!' என்று சொல்லி முனிசாமி அழைக்கவும் அவனுடன் சென்றான் சுந்தரம்.

முதல் மாடியைத்தாண்டி இரண்டாவது மாடியின் மத்திய ஹாலை அடைந்ததும் சுந்தரம் அங்கேயே ஸ்தம்பித்து நின்றுவிட்டான். ஹாலின் நாலாபுறங்களிலும் பெரிய பெரிய கண்ணாடி அலமாரிகள் இருப்பதையும், அவற்றில் வரிசை வரிசையாக நூற்றுக்கணக்கான புத்தகங்கள் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருப்பதையும் பார்த்தவுடன் அவனுக்குக் கனவு காண்பதுபோலிருந்தது. அது பாஸ்கரய்யர்வீடா அல்லது சர்வகலாசாலையின் புத்தகசாலையா என்ற சந்தேகம் அவன் மனதில் தோன்றியிருக்கவேண்டும். சுந்தரம் பின்னால் வருவதாக நினைத்து மூன்றாவது மாடிக்குப்போன முனிசாமி திரும்பிப் பார்த்து சுந்தரத்தைக் காணாமல் இரண்டாவது மாடிக்கு இறங்கி வந்தான்.

அதிர்ச்சியடைந்தவன் மிரளமிரள விழிப்பதைப்போல சுந்தரம் திக்பிரமையுடன் நிற்பதைக் கண்டதும் 'ஏன் இப்படி நிற்கிறீங்க' என்று கேட்டான்.

சுந்தரம்:- 'இல்லே! புத்தகம் படிப்பவர்கள் வேறு யாராவது இங்கிருக்கிறார்களோ என்று சந்தேகப்பட்டேன்!'

முனிசாமி:- 'ஏன் எல்லாம் சின்ன எசமானியம்மாளுடையதுதான்.'

சுந்தரம்:- குந்தளத்தின் புத்தகங்களா?

முனிசாமி:- ஆமாம் எல்லாம் அவங்க படிச்ச புத்தகங்கள். அதையேன் கேட்கிறீங்க. மாசம் இருநூறு முந்நூறு ரூபாய்க்கு வந்துக்கிட்டிருக்கும் புதுப்புதுப் புத்தகங்கள்.'

சுந்தரத்துக்கு தலை கிறுகிறுத்தது. இவ்வளவு புத்தகங்களும் குந்தளம் படித்தவைகளா? பேராசிரியர் ராதாகிருஷ்ணனின் தத்துவார்த்த நூல்கள்; காந்தி, நேரு, பட்டேல் போன்ற தேசத்தலைவர்களின் ஆங்கிலப் பிரசங்கங்கள், மேனாட்டு இலக்கிய மேதைகளின் எழுத்து ஓவியங்கள், தாகூர் சரோஜினி, டோருடட் போன்ற இந்திய கவிதா ரத்தினங்களின் கவிதைப் பொக்கிஷங்கள், தென்னாட்டிலே ஒவ்வொரு நூல் நிலையங்களிலிருந்தும் வெளியான தமிழ்ப் புத்தகங்கள். இவை தனித்தனி பகுதிகளாகப்பிரித்து ஒரு ஒழுங்கின்படி அடுக்கிவைக்கப்பட்டிருந்தன அலமாரிகளில். ஒரு பெண், அதிலும் வீட்டைவிட்டு வெளியே போகாத ஒரு இளம்பெண் இத்தனை புத்தகங்களையும் படித்திருப்பதாகச் சொன்னால் யார் நம்புவார்கள்?

'நீங்கள் பார்க்கிற பார்வையைக் கவனித்தால் என் பேச்சில் நம்பிக்கை இல்லைபோலத் தோணுதே!' என்றான் முனிசாமி.

'எப்படி நம்பமுடியும் முனிசாமி! படிக்கப் பிறந்தவர்கள் ஆடவர்கள்தானே! பெண்கள் பொருளாதார சாஸ்திரத்தைக் கண்டார்களா? அல்லது தத்துவார்த்த நூல்

களேக் கண்டார்களா? உப்பு உறைப்பாய் நல்ல சாம்பார் வைக்கச்சொன்னல் வைக்கத்தெரியும்!' இப்படிக் குந்தளம் சொல்லியது கேட்டது.



அப்பொழுதுதான் இருவருக்கும் தெரியாமல் குந்தளம் பின்னல் வந்துநிற்பது அவர்களுக்குத் தெரிந்தது.

சுந்தரம்:- அப்படியொன்றுமில்லை குந்தளம்! இவ்வளவு விரிவான இலக்கிய பொக்கிஷங்களை எங்குமே நான் பார்த்ததில்லை. அதிலும் ஒன்றுகூட கசங்காமல் கிழியாமல் புத்தப்புதுப் புத்தகங்களாயிருப்பது ஆச்சரியமாயிருக்கிறது.

குந்தளம்:- நான் படிக்கிற வழக்கமேதவிர கிழிக்கிற வழக்கமில்லை அத்தான்! இதோ பார்த்தீர்களா உங்கள் புத்தகங்களை!

சுந்தரம்:- இந்த "உங்கள் நீங்களை" விடமாட்டாய் போலிருக்கிறதே' என்று சொல்லிக்கொண்டே தன் புத்தகங்களுக்கு அடுத்தபடியாக இருந்த சாந்தாவின் புத்தகங்களை எடுத்துப் புரட்டினுன்.

குந்தளம்:- இந்த சாந்தா அம்மாள் அத்தானை சொப்பனத்தில்கூட மிரட்டுவாள் போலிருக்கே!

சுந்தரம்:- இல்லை குந்தளம், உண்மையாகவே அபூர்வமாக எழுதுகிருள் சாந்தா.

குந்தளம்:- அவளை அத்தானுக்குத் தெரியுமோ?

சுந்தரம்:- நேரில் பார்த்ததில்லை. யாரோ ஒரு பெரிய வக்கீலின் பெண்ணும். அவள் யாராளுல் நமக்மென்ன? கல்வியறிவிலும் எழுத்து வன்மையிலும் நிகரற்றவர்களென்று நினைத்த ஆடவர்களுக்கு கர்வபங்கம் செய்ய ஒரு சாந்தாவும் ஒரு குந்தளமும் போதுமே! நீ மட்டும் எழுத ஆரம்பித்தால் சாந்தாவை இருக்குமிடம் தெரியாமல் செய்து விடலாம்.

குந்தளம்:- எல்லோரும் உங்களைப்போல எழுத்தாளராகிவிட முடியுமா? அதற்கு அலாதியான அனுபவம் வேண்டாமா?

முனிசாமி:- ஆமாம், நீங்கதான் ராத்திரி பகலெல்லாம் எழுதிக்கிட்டே இருக்கீங்களே, அனுபவமில்லாமேயா அப்படி விழுந்து விழுந்து எழுதுறீங்க ?

சுந்தரம்:- நீ ஏதாவது எழுதியிருக்கிறுயா? என்னிடம் கொடுத்தால் நான் பார்த்து புத்தகமாக வெளியிட ஏற்பாடு செய்கிறேன். கமலாலயத்தின் சொந்தக்காரர் எனக்கு நெருங்கிய நண்பர்.

குந்தளம்:- முனிசாமி என்னவோ உளறுகிறுன். அதை நிஜமென்று நம்பிவிட்டீர்களாக்கும்.

சுந்தரம்:- உண்மையில்லாமலா சொல்லுவான்?

குந்தளம்:- எழுத முயற்சித்ததுண்டு. அந்த முயற்சி குப்பைக் கூடையைத் தாண்டிப் போனதில்லை. அவனையே கேளுங்கள் தினசரி கூடைநிறையக் கடுதாசிகள் கிடக்குமா இல்லையா என்று.

சுந்தரம்:- ஓஹோ! படித்துக்கிழிக்கும் வழக்கமில்லையென்றுயே, எழுதிக்கிழிக்கும் வழக்கம்தானுண்டுபோலிருக்கிறது.

இதற்கு குந்தளத்தின் பதில் ஒரு சிரிப்பு.

முனிசாமியுடன் சுந்தரம் தனது அறைகளுக்குச் சென்று அதை ஒழுங்குபடுத்த ஆரம்பித்தான். அன்றைய அனுபவங்களைப்பற்றி குந்தளம் வஸந்தாவிற்கு ஒரு நீண்ட கடிதம் எழுதிப்போட்டாள்.

# 6. கூட்டுப்பண்ணையில்

அடுத்த ஒரு வாரம்வரை சுந்தரத்துக்குமட்டுமல்ல, குந்தளத்துக்கும் ஒரு புதிய உலகத்தில் சஞ்சரிப்பதைப் போன்றிருந்தது. குந்தளத்தின் ஒவ்வொரு வார்த்தையும் அவனை திகைக்கச் செய்தது. தமிழ் ஆங்கில இலக்கியங் களில் அவளுக்குத் தெரியாத விஷயம் எதுவுமே இல்லை போலத் தோன்றியது சுந்தரத்துக்கு. எவ்விதக் கடினமான பிரச்னைகளையும் சரளமாகவும் அலக்ஷியமாகவும் அவள் விவாதிப்பதைக் கேட்டதே குந்தளம் ஒரு அசாதாரண மான பெண்ணென்ற முடிவிற்கு அவன் வரவேண்டியிருந் தது. ஒருநாள் எல்லோர் முன்னிலையிலும் இதை வாய் விட்டே சொல்லிவிட்டான் சுந்தரம்.

அய்யர் சொன்னார்:- 'நீயே எழுதியிருக்கிறாயே உன் கதையில்! உன்னுடைய நாவல்களிலொன்றில் கதாநாயகி ஆகாயத்தை வில்லாய் வளைத்துவிடுவாள்; மணலைக் கயி றாய்த் திரித்துவிடுவாள்; அவளுடைய நாவில் சரஸ்வதி நடமாடுகிறாள் என்று இன்னும் என்னவோ எழுதியிருந் ததை படித்த ஞாபகமிருக்கிறது!' என்று.

சுந்தரம்:- 'அது என் இலட்சியப்பெண். நிஜ வாழ் வில் அப்படி ஒருவள் இருக்க முடியுமென்று நினைத்து எழுதியதில்லை' என்றான்.

குந்தளம்:- 'சாந்தாவை நினைத்து எழுதியிருக்கலாம் அத்தான்!'

சுந்தரம்:- சாந்தாவை விடமாட்டாள்போலிருக்கிறதே குந்தளம்!

குந்தளம்:- அப்படியானால் உங்கள் கதைகள் நிஜ வாழ்க்கைக்குப் பொருத்தமற்றவைகளென்று சொல்லுங்கள்!

சுந்தரம்:- உன்னோடு பேச என்னால் முடியாதம்மா! அலமாரியில் நீ அடுக்கி வைத்திருக்கும் தர்க்க சாஸ்திரங்களை நான் படித்ததில்லை.

இதைக்கேட்டு அய்யர் பெருமையுடன் தனக்குள் சிரித்துக்கொண்டார். அம்புஜம் ஏதோ சொல்ல ஆரம்பித்தாள். அதற்குள் முனிசாமி குறுக்கிட்டுக்கேட்டான் முதல் நாள் வந்த பஞ்சுமூடைகளை என்ன செய்வதென்று.

அய்யர்:- ஆமாம், அந்த விஷயத்தை அடியோடு மறந்துவிட்டேனே! பஞ்சு மூடைகளெல்லாம் வந்து சேர்ந்துவிட்டன குந்தளம்! கிராமத்துக்கு நாளை நீ போகிறாயா அல்லது முனிசாமியிடம் கொடுத்து அனுப்பிவிடுவோமா?

அம்புஜம்:- 'பஞ்சுமூடை எதற்கு பாஸ்கரா?'

அய்யர்:- நம் கிராமத்தைப்பற்றி உனக்கு ஒன்றுமே தெரியாதல்லவா? அதுதான் இப்படிக்கேட்கிறாய். குந்தளத்தின் நிலங்களில் மொத்தம் ஆறு கிராமங்கள் உண்டு. அவைகளில் சுமார் 700 ஜனங்கள் இருக்கிறார்கள். அவர்கள் எந்தச் சாமானுக்கும் நகரத்தை நாடுவதேயில்லை. ஆண்பிள்ளைகளுக்கெல்லாம் வயலில் வேலை. பெண்களுக்காக ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு நெசவுத் தொழிற்சாலை அமைத்திருக்கிறோம். சமையல் சாப்பாடு நேரம்போக பாக்கி நேரங்களில் அவர்கள் ராட்டினத்தில் நூல் நூற்று வேண்டிய துணிமணிகளை அவர்களே நெய்துகொள்ளுகிறார்கள். இதில் அவர்களுக்கு நல்ல மேல் வரும்படியும் கிடைக்கிறது. காய்கறி பயிர் செய்துகொள்ள தனியாக துண்டு நிலங்களை குந்தளம் ஒதுக்கிக் கொடுத்திருக்கிறாள். அதிலும் அவர்களுக்கு மேல் வரும்படி வருகிறது. ராட்டினம், பஞ்சு, நெசவு இயந்திரம் எல்லாம் இனமாக வாங்கிக் கொடுக்கிறாள் குந்தளம்.

குந்தளம்:- இதைச் சொன்னீர்களே தவிர அவர்கள் எப்படி வேலைசெய்கிறார்களென்பதைச் சொல்லவில்லையே அப்பா. அதுதானே முக்கியம்! கறிகாய் தோட்டத்திலும்

நெசவாலையிலும் எல்லோரும் பொதுவாக வேலை செய்ய வேண்டியது. கிடைக்கும் லாபத்தையும் அவர்கள் சமமாகப் பங்குபோட்டுக்கொள்ளவேண்டியது. ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம் வைத்திருக்கிறேன் குழந்தைகள் படிக்க.

முனிசாமி:- சின்னப்பிள்ளைங்கள் விளையாட பந்து, கோலி எல்லாம்கூட அம்மா வாங்கிக் கொடுத்திருக்கு. அதான் சின்னம்மாவைத் தெய்வமாய் நினைத்து கையெடுத்துக் கும்பிடுறாங்க எல்லாரும்!

அம்புஜம்:- ஏன் இப்படி பணத்தை வாரியிறைக்கிறாய் குந்தளம்!

குந்தளம்:- இந்த ரகசியம் உனக்குத் தெரியாது அத்தை. கிராம ஜனங்களுக்கு ஒரு குறையும் இல்லாமல் சகல வசதிகளும் செய்து கொடுத்திருப்பதால் உண்மையான விசுவாசத்துடனும் ஊக்கத்துடனும் அவர்கள் வேலை செய்கிறார்கள். இவ்வளவு செலவு செய்தும் கிராமத்திலிருந்து நம் வருமானம் படிப்படியாக வருஷத்துக்கு வருஷம் எப்படி அதிகரித்துக்கொண்டிருக்கிறதென்று அப்பாவைக் கேட்டுப்பாரு தெரியும்.

அய்யர்:- குந்தளம் சொல்வது என்னவோ வாஸ்தவம். நான்கூட நினைத்தேன் உதவாக்கரை புத்தகங்களைப் படித்துவிட்டு கிராமாபிவிருத்தி, குடிசைத்தொழில் அபிவிருத்தி என்று உளறிக்கொண்டு இப்படிச் செலவுபண்ணுகிறாளே யென்று. அதனால் வருமானம் அதிகப்பட்டிருக்கிறதே தவிர குறையவில்லை. குடியானவர்களும் சந்தோஷமாயிருக்கிறார்கள்.

சுந்தரம்:- இதைத்தான் பொதுவுடமையென்கிறார்கள். பொதுவுடமை நம் நாட்டுக்குப் பொருத்தமென்பதை அனுபவத்தில் செய்துகாட்டுகிறாள்போலிருக்கிறது குந்தளம்.

குந்தளம்:- அத்தான் நினைப்பது தவறு. இது பொதுவுடமையில்லை. நிலத்தில் கிடைக்கும் வருமானம் முழுவ

தும் எங்களுக்கு. குடியானவர்களுக்கு கூலிமட்டும்தான். ஆனால் அவர்கள் நிலைமையையும் அபிவிருத்திசெய்ய விசேஷ மான சில ஏற்பாடுகளைச் செய்திருக்கிறோம். நெசவாலையி லும், காய்கறி தோட்டங்களிலும் குடியானவர்களுக்காக அமைத்துக் கொடுத்துள்ள குடிசைத் தொழில்களிலும் மட்டுமே பொதுவுடமை. சுருங்கச் சொல்லவேண்டுமானால் பொதுவுடமையும் முதலாளித்துவமும் இசைந்து ஒத்து ழைத்து இருவர் நலனையும் கோரும் ஒரு புதிய நிலைமை இது. முரண்பட்ட இரு கொள்கைகள் முரண்பாடின்றி வேலைசெய்யும் ஒரு புதிய திட்டம் இது. பல்லாயிரக்கணக் கான வருஷங்களாக முதலாளித்துவத்தில் ஊறிப்போயிருக் கும் ஒரு நாட்டிலே ஒரே இரவில் பொதுவுடமையைப் புகுத்தி மற்றொரு சோவியத்ரஷ்யாவைச் சிருஷ்டித்துவிட லாமென்று சிலர் கனவு காண்கின்றனர். அது அனுபவ சாத்தியமுமில்லை; விரும்பத்தக்கதுமில்லை. பொருளாதாரச் சீர்குலைவும் விபரீதமான புரட்சியுமின்றி படிப்படியாக பொருளாதார சமத்துவத்தை ஏற்படுத்த ஒரு இடைக்கா லத் திட்டம் அவசியம் தேவை. எங்கள் கிராமத்தில் நான் அனுஷ்டிக்கும் திட்டம் அத்தகைய இடைக்காலத் திட்டம் தான்.

சுந்தரம்:- 'நீ பேசுவதெல்லாம் எனக்கு கனவுமாதிரி இருக்கிறது. இந்தக் கிராமங்களை எல்லாம் நானும் பார்க்க வேண்டும் மாமா.

அய்யர்:- குந்தளம், நீ போகிறாயா? அல்லது முனி சாமி போனால் போதுமா?'

குந்தளம்:- நான்தான் போகவேண்டும் அப்பா! நாளை கணக்குப்பார்த்து பங்குபோடும் நாளில்லையா? முனிசாமி யுடன் அத்தானும் இஷ்டமானால் வரட்டுமே!

மறுநாள் காலை சுந்தரமும் குநதளமும் முனிசாமியும் பஞ்சு மூடைகளுடன் கிராமத்துக்குப் புறப்பட்டனர். புறப் படுவதற்குமுன் குந்தளம் வஸூவிற்கு ஒரு நீண்ட கடிதம் எழுதித் தபாலில் சேர்த்துவிட்டுப்போனாள்.

அன்று விளநகர் கிராமம் ஒரு பெரிய சந்தை கூடும் தினத்தைப்போலிருந்தது. மற்ற ஐந்து கிராமங்களைச் சேர்ந்தவர்களும் அன்று விளநகருக்கு வந்திருந்தார்கள். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை அவர்கள் இப்படிக்கூடுவார்கள். தங்களுடைய முயற்சிகளின் பலனைப் பகிர்ந்துகொள்ளுவார்கள். குறைகள் ஏதாவது இருந்தால் அதை அய்யரிடமோ அல்லது குந்தளத்தினிடமோ நேரில் சொல்லுவார்கள். விளநகரில் ஒருநாள் தங்கிவிட்டு மறுநாள் அவரவர்களுடைய கிராமங்களுக்குத் திரும்பிவிடுவர். இலாபத்தைப் பங்குபோடும் இந்த தினத்தில் அய்யரோ அல்லது குந்தளமோ இருவரில் ஒருவர் நிச்சயமாக வருவது வழக்கம். இரண்டு தினங்களுக்கு முன்பே சங்கரியின் கணவர் சிவராமன் கணக்குகளைச் சரிபார்த்து ஜாபிதா தயாரித்து வைத்துவிடுவார். அய்யரோ அல்லது குந்தளமோ வந்தால் அவர்களுக்கு அதிக வேலை இருப்பதில்லை. அவர்களுக்கு ஆறு கிராமங்களிலும் ஆறு தனிபங்களாக்களுண்டு. அவற்றை கிராமவாசிகள் மற்ற சமயங்களில் வாசிகசாலையாக உபயோகிப்பார்கள்.

அன்று குந்தளமும் சுந்தரமும் விளநகருக்கு வந்து சேர்ந்தபொழுது காலை பத்துமணிக்கு மேலாகிவிட்டது. பங்களாவின் முன்னுள்ள மைதானத்தில் கிராம ஜனங்கள் கூடியிருந்தார்கள். சென்ற ஏழெட்டு முறையாக லாபப் பங்கீட்டுக்கு குந்தளமே வந்தபடியால் அன்று பத்துமணி வரையில் அவள் வராதது கிராம ஜனங்களுக்கு கலக்கமாயிருந்தது. சிறிது தூரத்தில் கார்வரும் சப்தம் கேட்டவுடனேயே அவர்கள் முகம்மலர்ந்தது. 'என்ன நேர்ந்தாலும் அம்மா வராமலிருக்கமாட்டாங்களென்று நான் சொல்லவில்லையா? அதோ வந்துவிட்டாங்க பாரு!' என்று அவர்கள் பேசிக்கொண்டனர். குந்தளத்துடன் ஒரு வாலிபனும் வருவதைக்கண்டதும் அவர்கள் திகைத்துப்போயினர். குந்தளமும் சுந்தரமும் மேடையில்போய் உட்கார்ந்தபின் கூட்டத்தில் குசுகுசுப் பேச்சு அதிகரித்தது. இதன் காரணத்தைத் தெரிந்துகொண்டாள் குந்தளம். அவள் சொன்னாள் :-

'என்னுடன் யாரோ ஒரு புதுமனிதர் வந்திருக்கிறாரே என்று ஆச்சரியப்படுகிறீர்கள் போலிருக்கிறது. அவர் அந்நிய மனிதரில்லை. என்னைப்போலத்தான் அவரும் உங்களுக்கு. உங்கள் அய்யாவின் சகோதரிபிள்ளை இவர். இனி அடிக்கடி உங்களைப் பார்க்க வருவார். என்னிடம் சொல்ல விரும்பும் எல்லா விஷயங்களையும் இனிமேல் அவரிடமும் நீங்கள் சொல்லலாம்.

'போன கணக்கில் நீங்கள் உற்பத்திசெய்த துணிகள் ஏழாயிரம் ரூபாய்க்கு விற்றிருப்பதாக மானேஜர் சொல்லுகிறார். இந்தத் தடவை ஏன் ஆயிரம் ரூபாய் குறைந்துவிட்டதோ தெரியவில்லை. தச்சுத் தொழிற்சாலையில் ஐயாயிரம் ரூபாய் கிடைத்திருக்கிறது. பால் பண்ணையில் ஆயிரம்ரூபாய் வசூலாகியிருக்கிறதாம். நீங்கள் முடையும் பிரம்பு நாற்காலிக்கும் பழக்கூடைகளுக்கும் நல்ல கிராக்கியிருக்கிறது. இந்த முறை உங்கள் ஒவ்வொருவருக்கும் தலைக்கு 100 ரூபாய் வந்திருக்கிறது. இதில் 50 ரூபாய் ரொக்கமாகக் கொடுக்கச்சொல்லுகிறேன். பாக்கியை உங்கள் ஒவ்வொருவருடைய கணக்கிலும் வரவுவைக்கச் சொல்லுகிறேன்.'

கூட்டத்தில் ஒருவன் எழுந்து சொன்னான்:- 'எங்களுக்கு 50 ரூபாய் எதற்கு அம்மா! எந்தச்சமயத்திலும் மானேஜர் ஐயா கேட்டால் கொடுக்கிறாங்க பணம். நாங்க கையிலே வைத்துக்கொண்டு என்ன செய்யப்போறோம்? எல்லாம் எசமான் கணக்கிலேயே இருக்கட்டும். போன தடவை 60 ரூபாய் கொடுத்தீங்க. அவ்வளவும் செலவாகிப்போச்சு!'

குந்தளம்:- இருளன் சொல்லுவது உண்மை. கையில் பணம் இருந்தால்தான் செலவழிக்கத்தோன்றும். இல்லாவிட்டால் வாங்கிச் செலவழிக்க மனம் வராது. ஆரம்பத்திலிருந்தே உங்கள் பணத்தில் ஒரு பகுதியை நான் பிடித்து வைக்காவிட்டால் ஒவ்வொருவர் கணக்கிலும் இரண்டாயிரம் ரூபாய்வரையில் சேர்ந்திருக்குமா? இருளன் நல்ல புத்தி

சாலி: இருந்தாலும் வெறுங்கையோடு நீங்கள் வீட்டுக்குப் போகக்கூடாது. சம்பாதிப்பதெல்லாம் சந்தோஷமாயிருப்ப தற்குத்தானே? சிக்கனம் அவசியமென்றாலும் ரொம்பச் சிக்கனம் கூடாதில்லையா?

குந்தளம் சொல்லியதை எல்லோரும் ஆமோதித்தார்கள். விருப்பமானவர்கள் 70 ரூபாய்வரையில் பிடிக்கச் சொல்லலாமென்று குந்தளம் தெரிவித்தது இருளனுக்கும் திருப்தியைக் கொடுத்தது. ஒருவாரம் கிராமத்தில் சுற்றுப் பிரயாணம் செய்யப்போவதாகக் குந்தளம் அறிவித்ததைக் கேட்டு எல்லோரும் சந்தோஷமடைந்தனர். குந்தளம் மற்ற விஷயங்களை மானேஜர் சிவராமனிடம்விட்டு சுந்தரத்துடன் தன் அறைக்குச்சென்றாள்:

“வீட்டில்தான் தர்க்க ரீதியாக விவாதிக்கிறாயென்றால் பொதுக்கூட்டத்திலும் அழகாகப் பேசுகிறாயே குந்தளம்!” என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சுந்தரம் அறைக்குப் போனவுடன்.

குந்:- எல்லோரும் நம் ஜனங்கள்தானே. அவர்களிடம் பேச என்ன சங்கோஜம்? அடுத்த பங்கீட்டுக்கு நான் வரமாட்டேன். அத்தான்மட்டும்தான் தனியாகவந்துபேசணும்!’

சுந்:- அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம். எனக்கு ஒரு சந்தேகம் குந்தளம். பணமே வேண்டாமென்று சொன்னானே இருளன், பணமில்லாமல் எப்படி காலம் கழிப்பதென்று நினைத்துச்சொன்னான்?

குந்:- அவர்களுக்குப் பணம் உண்மையில் தேவையில்லை. இந்தக்கிராமங்கள் வேலைசெய்யும் முறை இன்னும் உங்களுக்குச் சரியாகத் தெரியாது. தெரிந்தால் இப்படிக் கேட்கமாட்டீர்கள். உதாரணமாக இந்த விளநகர் கிராமத்தில் 90 பேர்களிருக்கிறார்கள். அவர்களில் 30 பேர் பெண்கள். 25 பேர் சிறுவர்கள். பாக்கி 35 பேர் வேலைசெய்யக்

கூடிய ஆண்கள். பெண்களில் பாதிப்பேர் தச்சுவேலைகளை யும் பால் பண்ணையையும் கவனித்துக்கொள்ளுகிறார்கள். பாக்கிப்பேர்களுக்குச் சமையல்வேலை. சமையலும் சாப்பா டும் எல்லோருக்கும் பொதுவானது. கங்காணி இருளன் மேற்பார்வையில்தான் இந்த கிராமத்தில் எல்லாம் நடக்கி றது. சகல செலவுகளுக்கும் அவன் மனேஜரிடம் பணம் வாங்கிப் பொதுவாகச் செலவிடுவான். லாபப்பங்கீட்டின் பொழுது வருமானம் பகிர்ந்துகொள்ளப்படுவதுபோலவே செலவும் பகிர்ந்துகொள்ளப்படும்.

சுந்:- அதெப்படி முடியும்.? ஒரு கிராமத்துக்கு அதிகம் செலவாகலாம். இன்னொன்றில் குறைந்து செலவாகலாம். இதை எப்படிச் சமமாகப் பங்கிடுவது?

குந்:- இதேபோல வருமானமும் மாறுபடலாமில்லையா? ஆறு கிராமமும் ஒரே குடும்பம்மாதிரி. ஒன்றின் தேவையை மற்றொன்று பூர்த்திசெய்கிறது. ஒவ்வொருவருடைய சேவை யும் மற்றவர்களுக்கு அவசியமானது. உதாரணமாக பால் பண்ணை இரண்டு கிராமங்களில்தானிருக்கிறது. அவை ஆறு கிராமங்களுக்கும் பால்சப்ளை செய்து பாக்கியைத்தான் ஓட் டலுக்கு அனுப்புகிறது. இதேபோல இரண்டு கிராமங்கள் கறிகாய் உற்பத்தியில் கவனம் செலுத்துகின்றன. நெசவு தொழிற்சாலை மூன்று கிராமங்களில் இருக்கின்றன. தச்சு வேலை இரண்டுஇடங்களில்தான் நடக்கிறது. ஒவ்வொருகிராம த்திலும் ஒரு கங்காணியும் அவனுக்கு உதவியாக மூன்றுபேர் களுமிருக்கிறார்கள். அவர்கள்வேலை தங்களுடைய கிராமத் தின் தேவையை கவனிப்பதும் மற்ற கிராமங்களுக்கு வேண் டிய சாமான்களை அனுப்பிவைப்பதும் அதிகப்படிச் சாமான் களை விற்பனை செய்ய ஏற்பாடுபண்ணுவதும்தான்.

சுந்:- சரி, லாபத்தை எப்படி பங்குபோடுகிறாய்? ஒரு குடும்பத்தில் அதிக குழந்தைகளிருக்கும், இன்னொரு குடும் பத்தில் குழந்தையேயிருக்காது. இருகுடும்பங்களுக்கும் சம பங்குதானா?

குந்:- குடும்பத்தைப்பற்றி கவனிப்பதில்லை. கிராமங்களிலுள்ள வீடுகளும் இயந்திரங்களும் மாடுகளும் எல்லாம் எனக்குச் சொந்தம். அதாவது மூலதனம் என்னுடையது. விரும்பியபொழுது எவரையும் நான் கிராமத்திலிருந்து வெளியேற்றலாம். புதிய ஆட்களையும் கொண்டுவந்து குடியேற்றலாம். இவர்களுடைய பிரதானவேலை வயலில் சாகுபடி செய்வது. அதற்கு வழக்கமான கூலி கொடுத்துவிடுகிறோம். மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இவர்களுடைய குடிசைத் தொழில்களினால் கிடைக்கும் மொத்த வருமானம் கணக்கிடப்படும். அதில் மூலதனத்துக்காக ஒரு சொற்ப வட்டி கழித்துக்கொள்ளுவோம். பாக்கித்தொகையில் அவர்களுடைய சாப்பாட்டுச்செலவு, மரம், பஞ்சு முதலான வேறு பல சாமான்கள் வாங்கிய செலவு, மானேஜர் சங்கரய்யர் சம்பளம், அதிகப்படி பால், ஜவுளி, மரச்சாமான்கள் முதலியவற்றை விற்பனை செய்வதற்காக ஏற்பட்ட செலவு இவைகளையும் கழித்துவிடுவோம். பாக்கிப்பணத்தில் வேலைசெய்யும் ஒவ்வொரு ஆண் பெண்ணுக்கும் சமபங்கு போட்டு பிரித்துவிடுவோம். ஒவ்வொருவர் கணக்கிலும் அவனுடைய லாபப் பங்கீடு, கூலி முதலியவைகளெல்லாம் பதிந்திருக்கும். யாராவது கிராமத்தைவிட்டுப் போகப் பிரியப்பட்டால் அவன் கணக்கிலுள்ள பணத்தைக் கொடுத்து அனுப்பிவிடுவோம். இதுமாதிரி பத்துப் பதினைந்துபேர்கள் ஐயாயிரம் ரூபாய் வரையில் சேர்த்து வாங்கிக்கொண்டு பிரிந்துபோய் வியாபாரம் செய்கிறார்கள். இதெல்லாம் அத்தானுக்கு விசித்திரமாயிருக்கிறதில்லையா?

சுந்:- விசித்திரமாயில்லை, நம்பமுடியாத ஆச்சரியமாயிருக்கிறது! இவ்வளவுபேர்களும் உங்களிடம் விசுவாசமாகவும் சிவராமய்யர் எழுதும் கணக்குகளில் நம்பிக்கையாகவும் இருந்து ஒற்றுமையாக வேலைசெய்வது பெரிய விஷயம். இதுமாதிரி ஏழெட்டு கிராமங்கள் தனித்தனி கோஷ்டிகளாக வேலைசெய்ய ஆரம்பித்தால் இந்திய விவசாயிகளின் பிரச்னை இரண்டே வருடங்களில் தீர்ந்துவிடும். நீ ஒரு மகத்தான சாதனை செய்துகாட்டுகிறாய் குந்தளம்.

குந்:- என் சாதனையை அத்தான்தான் மெச்சிக்கொள்ள வேண்டும்! எனக்கும் ஏதாவது வேலை வேண்டுமில்லையா? பொழுதுபோக்குக்கு ஏதோ செய்துகொண்டிருக்கிறேன்.

"சாப்பாடு தயாராகிவிட்டது. இன்னும் பேசிக்கொண்டிருக்கிறாயே குந்தளம். ஸ்நானம்செய்து சாப்பிடவேண்டாமா?' என்று கேட்டுக்கொண்டு வந்தார் சிவராமன்.

'மாமாவை அத்தானுக்கு அறிமுகம்செய்துவைக்க மறந்தேபோய்விட்டேனே! சங்கரி மாமியின் ஆத்துக்காரர் இவர்தான். நம் சகல நிலங்களும் இவருடைய மேற்பார்வையில்தானிருக்கு. அப்பாவுக்கு இவர் வைத்ததுதான் சட்டம். மாமா ஒரு கோடு கிழித்து அதை தாண்டக்கூடாதென்றால் அப்பா தாண்டமாட்டார். அவ்வளவு நம்பிக்கை!' என்றாள் குந்தளம்.

"ஏதோ கோர்ட்டில் கிடந்து திண்டாடியகுமாஸ்தாவை அய்யர் இப்படி நல்ல நிலைமையில் வைத்திருக்கிறார். என் குடும்பமே அவருக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறது' என்று நன்றியறிதலுடன் சொல்லிவிட்டு 'குந்தளம் பேச உட்கார்ந்துவிட்டால் அதற்கு ஒரு முடிவேயிருக்காது, ஸார்! நீங்கள் எழுந்திருங்கள் ஸ்நானத்துக்குப் போகலாம்!' என்று துரிதப்படுத்தினார் சிவராமன்.

சாப்பாட்டுக்குப்பிறகு அன்று மத்தியானம் முழுவதும் குந்தளமும் சிவராமனும் கணக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சுந்தரம் முனிசாமியுடன்போய் கிராமத்தைச் சுற்றிப்பார்த்துவிட்டு வந்தான்.

'கிராமத்தின் கிழ்ப்புறத்தில் ஆற்றோரமாக ஒரு தோப்பு இருக்கிறதே, அது எவ்வளவு ஜிலுஜிலு என்று குளிர்மையாயிருக்கிறது கவனித்தாயா?; என்றான் சுந்தரம் மாலையில். அங்கு போய் உலாவிவிட்டு வருவோம் வருகிறாயா? என்று அழைப்பது போலிருந்தது அவன் தொனி. காப்பிகுடித்துவிட்டு இருவரும் மாந்தோப்பில் உலாவிவிட்டுவரச் சென்றனர்.

## 7. மாந்தோப்பில் மதிமயக்கம்.

நதிக்கரையோரமாக ஒற்றையடிப் பாதையில் அவர்கள் நடந்து சென்ற சமயம் சூரியன் அஸ்தமித்துக்கொண்டிருந் தான். ஆற்று ஜலத்தில் படர்ந்திருந்த மர நிழல்களின் இடை யிடையே மாலைக் கதிரவனின் செங்கிரணங்கள் பிரதிபலிக்க மெல்லிய காற்றில் ஒளியும் நிழலும் நீரின் மேல் அசைந்தா டும் காட்சி ஒரு வர்ண ஜாலம் போன்றிருந்தது. வசந்தகால புஷ்பங்கள் இயற்கை காட்சியைப் பூரணத்துவம் பெற்று விளங்கச் செய்தன.

'எவ்வளவு ரம்மியமாயிருக்கிறது பார்த்தாயா இந்த இடம்!' என்றான் சுந்தரம் சற்று நின்று.

பூரண சந்திரன் போலப் பொலிவுடன் பிரகாசித்த முகத் தின் மீது காற்று வேகத்தில் படர்ந்த கூந்தலை ஒதுக்கிக் கொண்டு 'ஆமாம் நகரவாசிகளுக்கு நாட்டுப்புறத்தை எப் பொழுதாவது பார்த்தால் அப்படித்தான் தோன்றும்! அதி லும் நீங்கள் கற்பனையுலகில் சஞ்சரிக்கும் கதாசிரியரல்லவா?' ஒரு என்றாள் கிண்டலாக குந்தளம்.

சுந்:- நான் ஒரு வார்த்தை சொன்னால் பதிலுக்கு ஒன் பது வார்த்தை சொல்கிறாயே குந்தளம். நீ பேசுவது கூட அழகாய்த்தானிருக்கிறது.

குந்:- அப்படியிருந்துமா அதிகப் பிரசங்கியென்று பட் டம் கொடுக்கிறீர்கள்? நீங்கள் பேசுவது முன்னுக்குப் பின் முரணாயிருக்கிறதே.

சுந்:- உன் நடத்தையைப்போல!

குந்:- என் நடத்தையில் முரண்பாடா? ஆச்சர்யமா யிருக்கிறது உங்கள் ஆராய்ச்சி!

சுந்:- நாம் சின்ன வயதிலிருந்த பொழுது வாருங்கள், பாருங்கள், சொல்லுங்கள் என்று மரியாதை அடைமொழிகளுடனே என்னுடன் பேசுவாய்! இந்த மரியாதை முரண்பாடில்லையா?

குந்:- அதெப்படி? கால வேறுபாட்டை அனுசரித்தது முரண்பாடாகுமா? அத்தானும் முன்போல பள்ளிக்கூடம் போய்விட்டு வந்தால் நானும் சிறுமி குந்தளம்மாதிரி இருக்கலாம், பேசலாம்!

சுந்:- இதற்காகவேனும் வளராமல் சிறுவனாகவே இருந்துவிடக்கூடாதா என்று தோன்றுகிறது! வயது வளர்ந்தது என் குற்றமில்லையே? அதற்கா இந்த தண்டனை? நீ விரும்பினால் இந்தக் கிராமப் பள்ளிக்கூடத்தில் வேண்டுமானாலும் மறுபடி புத்தகங்களைத் தூக்கிக்கொண்டு போயிருந்து படித்துவிட்டு வருகிறேன்!

குந்:- அட பாவமே! அத்தான் படிக்கப்போனால் நான் மறுபடியும் மரச்சொப்புகளை வைத்துக்கொண்டு சமைக்க உட்காரவேண்டியதுதான்!

குந்தளம் இப்படிச் சொல்லவும் சுந்தரத்துக்கு பழைய சம்பவங்கள் ஞாபகத்துக்கு வந்தன. சரியாகப் பாவாடை கட்டிக்கொள்ளத் தெரியாத சிறுமி குந்தளம் 'நீதான் ஆம்படையானும், நான்தான் பெண்டாட்டியாம்! நீ ஆபீஸ் போயிட்டு வரணும்! நான் சமையல் பண்ணிவைப்பேன்!' என்று மழலைமறவாத வார்த்தைகளில் சொல்லுவது போல ஒலித்தது அவன் செவிகளில். சிறிது நேரம் அவன் ஒரு பதிலும் சொல்லாமல் மெதுவாக மேலே நடந்தான். மாந்தோப்பை அடைந்து நதியின் ஓரமாக அமரும் வரையில் இருவரும் பேசவில்லை.

'உன் சிகப்பு உடம்புக்கு மெல்லிய நீலப்புடவை தனி சோபையைக் கொடுக்கிறது குந்தளம். எப்பொழுதையும்விட

இன்று பன்மடங்கு ரம்மியமாகத் தோன்றுகிறாய்' என்றான் சுந்தரம்.

காற்றில் அவன் மீது பறந்து விழுந்த மேற்புடவையை சரிப்படுத்திக்கொண்டே "உடல் அழகை என்றுமே நான்பொருட்படுத்துவதில்லை. இதோ பாருங்கள் இந்த புஷ்பங்களை! இந்தக் காட்டுப் பூவினால் யாருக்கு என்ன உபயோகம்? கொஞ்ச நேரம் மினுக்கிவிட்டு உதிர்ந்துபோய் மண்ணோடு மண்ணாகி விடும்! அல்லது காற்றுவாக்கில் ஆற்றிலே விழுந்து அழுகிப் போகும்' என்றாள் தத்துவசாஸ்திரிபோல குந்தளம்.

என் அழகும் அலங்காரமும் உலகில் எவருக்கு உபயோகம்? நான் மனித பாஷையில் விதவைதானே? என்று குந்தளம் கூறுவதைப்போலிருந்தது சுந்தரத்துக்கு. சட்டென்று ஏதோ சொல்வதற்கு வாயெடுத்தவன், பிறகு என்ன நினைத்துக்கொண்டானோ தெரியவில்லை. மௌனம் அவனை ஆதிக்கம் கொண்டுவிட்டது.

'நானும் இந்தத் தோப்பும் அந்திநேரத்து ஆற்றங்கரைக் காட்சியும் இன்னும் எவ்வளவு நாட்களுக்கு அழகாய்த் தோன்றப்போகிறது அத்தானுக்கு? இவ்வளவு அழகுகளும் சாசுவதமற்றவைகள்தானே உங்கள் சம்பந்தப்பட்டவரையில்?' என்று அவன் வாயைக் கிண்டினாள் மறுபடியும் அவள்.

சுந்:- என்ன அப்படிச் சொல்லுகிறாய்? எனக்கு ரஸிக்கும் சக்தியில்லையென்கிறாயா?

குந்:- அல்ல! நாளை ஒரு மனைவி வந்துவிட்டால் அவள் முகத்தில் இத்தனை அழகுகளையும் ஒருங்கே பார்த்து ரஸித்துக்கொண்டிருப்பீர்களல்லவா என்றேன்! அப்பொழுது இந்தத் தோப்பும் வர்ணஜாலங்கள் போல மாலைச் சூரியனைப் பெருமைப்படுத்திக்கொண்டு ஓடும் காவேரியும் சோபையை இழந்துவிடுமில்லையா உங்கள் திருஷ்டியில்?

'ஏன்? உன்னைபோலவே அவளும் இப்படி என்பக்கத்தில் உட்கார்ந்து இருவரும் இயற்கையின் விநோதங்களை சேர்ந்து ரஸித்தால்?' என்றான் சுந்தரம் குந்தளத்தை தன் மனைவியின் ஸ்தானத்தில் வைத்து.

'அவள் கவனம் வேண்டுமானால் இயற்கையழகுகளில் லயித்திருக்கலாம். ஆனால் அத்தான் கவனம் லயித்துப்போவது வேறிடத்தில்!' என்று கலகலவெனச் சிறித்துக்கொண்டே கூறினாள் குந்தளம். சுந்தரமும் சேர்ந்து சிரிப்பானென்று அவள் நினைத்தாள். ஆனால், அவன்முகம் சட்டென்று மாறுதலடைந்தது குந்தளத்துக்கு கொஞ்சம் கலவரத்தை உண்டுபண்ணியது. சம்பாஷணையை வேறு திசையில் மாற்றுவதற்காக 'சாந்தாவின் நான்காவது புத்தகம் அச்சாகிறதாமே! அது எப்பொழுது வெளிவருமாம்?' என்று கேட்டாள்,

"திடீரென்று சாந்தாவைப்பற்றி பேசுவதன் அர்த்தம் எனக்கு விளங்காமலில்லை குந்தளம்! அவளுடைய மூன்றாவது புத்தகமான 'ஹேமலதா'வில் இப்படித்தான் கதாநாயகி ஹேமலதா ஆற்றின் கரைக்குப்பதிலாக ஒரு மலையடிவாரத்தில் உட்கார்ந்து குணபாலனைத் திக்குமுக்காடச் செய்கிறாள். அவள் முகத்தையே பார்த்துப்பார்த்து ரஸித்துக்கொண்டிருக்கும் குணபாலன் இயற்கையழகைக் கண்டானா அல்லது சூரியாஸ்தமனத்தின் சோபையைக் கண்டானா? காற்றிலே பறந்து விழுந்து என் நெற்றியை மறைக்கும் கூந்தல், மதியை மறைக்கும் மேகத்தைப்போலில்லையா என்று அவள் கேட்டால் சட்டென்று பதில்சொல்லியிருப்பான் தயங்காமல்! தேன் குடிக்கும் ஈயின் கவனம் வேறு எதிலாவது செல்வதுண்டா? அப்படித்தான் ஹேமலதாவின் பக்கத்திலிருக்கும்பொழுதெல்லாம் குணபாலனின் நிலைமையும் என்று வர்ணிக்கிறாள் சாந்தா. அதை நினைத்துப் பேசுகிறாய்போலிருக்கிறது" என்று மூச்சுவிடாமல் மளமளமென்று பேசினான் சுந்தரம்.

'ஹேமலதா என் ஞாபகத்துக்கு வரவேயில்லை. ஹேமலதாவைப்போல் என்னைக் கற்பனை செய்துகொள்ளவுமில்லை!' என்று சுந்தரத்தை மேலே பேசவிடாமல் குந்தளம் இடைமறித்துச் சொன்னாள்.

'இருக்கலாம்! ஆனால், குணபாலனைப்போலவே வாழ்க்கையில் உன் மனக்கோட்டையும் தகர்ந்து விழப்போகிறதென்று இடித்துக்காட்டுகிறாய்போலிருக்கிறது நீ பேசுவது! என் ஆசை நிராசையாகிவிடலாம். அதற்கும் நான் தயாராகத்தானிருக்கிறேன்' என்று உறுதியான தொனியில் நிதானமாகவும் அர்த்தபுஷ்டியுடனும் சொன்னான் சுந்தரம்.

ஹேமலதா ஒரு இளம் விதவை. வைதீகக் குடும்பத்தில் பிறந்தவள். அவளை மணஞ்செய்துகொள்ள விரும்புகிறான் குணபாலன். ஆனால், அவன் எண்ணம் நிறைவேறவில்லை. ஹேமலதாவின் பெற்றோர்கள் திடீரென்று வேறு தேசத்திற்கே போய் விடுகிறார்கள். குணபாலனுக்குப் பயித்தியம் பிடித்துவிடுகிறது. இதுதான் சாந்தா எழுதிய ஹேமலதா கதையின் சாராம்சம். இந்தக் கதை எழுத்து எழுத்தாக சுந்தரத்தின் ஞாபகத்துக்கு வந்தது இப்பொழுது. சிற்சில கட்டங்கள் சினிமாப்படம் போல் அவன் பார்த்துக்கொண்டிருந்த காவேரி ஜலத்தின்மீது காட்சியளித்தன. அவன் மேற்கொண்டு பேசச் சக்தியற்றவனாய் நதியைப் பார்த்துக்கொண்டே மௌனம் சாதித்தான். அந்த நிஷ்டையைக் கலைக்காமல் குந்தளமும் யோசனையில் ஆழ்ந்திருந்தாள்.

பொழுது சாய்ந்து வெகுநேரமாகிவிட்டது. சப்தமி பிறைச் சந்திரன் நடுவானத்தில் மிதந்துவந்து நதி ஜலத்தில் பிரதிபலித்துக்கொண்டிருந்தான் சுந்தரம் கைகெடியாரத்தைப் பார்த்து 'மணி எட்டடித்து விட்டதே! பங்களாவுக்கு திரும்ப வேண்டாமா? என்றான். 'பொழுது போனதே தெரியவில்லை பயித்தியகார யோசனைகளில்!' என்று சொல்லிவிட்டு எழுந்தாள் குந்தளம்.

நதிக்கரையின் ஒற்றையடிப்பாதை வழியாக இருவரும் மௌனமாக நடந்தனர். சிறிது தூரம் சென்றதும் சுந்தரம், காலில் தைத்த ஒரு முள்ளை எடுக்க சட்டென்று நின்றான். எங்கோ பார்த்துக்கொண்டு பின்னால் வந்த குந்தளம் ஒரு காலில் நின்று சுந்தரம் தபஸ் செய்வதைக் கவனியாமல் பலமாக அவன்மீது மோதிவிட்டாள். இதன் பலனாக உருட்டியடித்துக்கொண்டு பக்கத்திலிருந்த பள்ளத்தில் விழுந்தான் சுந்தரம்.

'ஐயையோ அத்தான்! ஏதாவது காயம்பட்டுவிட்டதா?' என்று கலவரத்துடன் கேட்டாள் குந்தளம். 'நல்லவேளையாக கீழே மணல்! கல்லாயிருந்தால் மண்டை உடைந்து போயிருக்கும்! கொஞ்சம் கை கொடுத்துத் தூக்கு!' என்று சொல்லி இரண்டு கரங்களையும் நீட்டினான் அவன்.

'என்னையும் பள்ளத்தில் இழுத்துத்தள்ளி வஞ்சம் தீர்க்கப்பார்க்கிறீர்களா!' என்று கேலிச்சிரிப்புடன் கேட்டுக்கொண்டே கரங்களை நீட்டினாள் குந்தளம். அதைப் பற்றிக்கொண்டு சுந்தரம் மெதுவாக ஏறிவந்து 'வழுக்கி விழுந்தவனைக் கரையேற்றிய புண்ணியவதியிடமா வஞ்சகம்? குரோதத்தின் எதிரொலியல்லவா அது?' என்றான்.

'வாழ்க்கையில் இது சகஜம்தானே?' என்று சொல்லிக்கொண்டே நடக்க ஆரம்பித்தாள்.

சுந்:- எது சகஜம்? பழிவாங்குவதா?

குந்:- அதுமட்டுமல்ல, அதற்குக் காரணமாயிருப்பதும் தான்! கண்களிருந்தும் குருடர்களைப்போல வாழ்க்கைப் பாதையிலே பலர் நடப்பதை அனுபவத்தில் நாம் அறிவோம். அது பாதையின் தவறா அல்லது நடப்பவரின் தவறா?

சுந்:- இரண்டுமில்லை. நடத்திச்செல்பவரின் தவறு! காலில் தைத்த முள்ளை எடுப்பதற்கு நான் நின்றிராவிட்டால் நீ மோதியிருக்கப்போவதில்லையே!

குந்:- முள் இருந்தது பாதையின் குற்றமல்லவா?

சுந்:- நான் அதைத் தாண்டிச் சென்றிருக்கலாம். காலில் குத்திக்கொண்டது என் தவறென்றால் நாம் இருவருமே கண்களிருந்தும் குருடர்களைப்போல நடக்கிறோமென்றுதான் ஏற்படும். நடையிலும் நிஜவாழ்வு பிரதிபலிக்கின்றது போலிருக்கிறது!

சுந்தரம் எதைக் குறிப்பிடுகிறானென்பதை உணர்ந்து கொள்ள குந்தளத்துக்கு அதிகநேரம் பிடிக்கவில்லை.

'இப்பொழுது உங்களை நடத்திச்செல்வது நான். நினைவிருக்கட்டும்!' என்றாள் வேகமாக இரண்டடி முன்னால் நடந்து.

'ஆட்சேபணையின்றி பின்தொடருகிறேன்!' என்றான் சுந்தரமும் சிரித்துக்கொண்டே.

அன்றிரவு இருவரும் பங்களாவுக்குத் திரும்ப 8-30 மணியாகிவிட்டது.

மறுநாள் சிவராமன் திருச்சிக்குப் புறப்பட்டுவிட்டான். சுந்தரம், குந்தளம், முனிசாமி ஆகிய மூவர் மட்டும் அடுத்த கிராமத்தைப் பார்வையிடச் சென்றார்கள். அவர்கள் கிராமத்தில் நுழைந்தபொழுது ஒரு மாடு 'மா! மா!' என்று கத்தியது. ஒரு குடியானவப்பெண் ஓடிவந்து 'அம்மாவா? வாங்க, வாங்க! மாடு கத்தினதும் நீங்கதான் வருவீங்களென்று நினைச்சேன்! எப்படித்தான் தெரியுதோ அந்த மாட்டுக்கு?' என்று முப்பத்திரண்டு பற்களையும் காட்டிக் கொண்டு முகமன் கூறினாள்.

'ஒவ்வொருமுறையும் குழந்தை வரும்போது அந்த சிவப்புமாடு எப்படியோ தெரிஞ்சுக்கிட்டு கத்துகிறது பாரேன்!' என்றான் முனிசாமியும்.

'எனக்கும் ஆச்சரியமாகத்தானிருக்கிறது. இந்த மிருகங்களுக்கு இருக்கும் பகுத்தறிவுகூட சில சமயங்களில் மனிதர்களுக்கு இருப்பதில்லை!' என்று சொல்லிவிட்டு மாட்

டுப்பண்ணையில் முதலாவதாக நுழைந்தாள் குந்தளம். வழியிலிருந்த சுமார் இருபது மாடுகளைத்தாண்டி சிகப்புமாட்டிடம்போய் அதைத் தடவிக்கொடுத்தாள்.

“போனவாரம்தான் மீனட்சி கன்னுபோட்டது! எவ்வளவு அளவாயிருக்கு பாருங்கள் கிடேறிக்கன்னு!” என்று சொல்லி ஒரு கன்றுக்குட்டியைத்தூக்கி குந்தளத்தின் முன்பு நிறுத்தினுள் குடியானவப்பெண். குழந்தையை வாரியெடுத்துக்கொள்ளுவதைப்போல அந்தக்கன்றை குந்தளம் தூக்கியெடுத்துக்கொண்டு ‘கன்றுக்குட்டிகளிடம் எனக்கு ஒரு அலாதியான பிரேமை! எவ்வளவு நிஷ்களங்கமாகப் பார்க்கிறது கவனித்தீர்களா?’ என்றுள். ஆம் என்று ஆமோதிப்பதுபோல சுந்தரமும் அதன் முதுகைத் தடவிக்கொடுத்தான்.

‘நம்ப பண்ணையில் போனமாசம் ஆறுமாடு கன்னு போட்டிருக்குது! இப்ப தினசரி 15 படி பாலு ஒட்டலுக்கு அனுப்புகிறோம்! நம்ப ஜனங்கள் கொஞ்சம் சிக்கனமாய் பாலை உபயோகித்தார்களானல் 200 படிகூட அனுப்பலாம்!’ என்றுள் குடியானவப்பெண். அவள் குரலில் ஒரு பெருமை தொனித்தது.

‘அட அசடே! பால் உணவின் தன்மை உனக்குத் தெரியாது. நீங்களெல்லோரும் இவ்வளவு ஆரோக்கியத்துடனிருப்பதற்கு போதிய அளவு பால் குடிப்பதுதான் காரணம். எல்லாவித உணவு சத்துகளும் அதிலிருக்கிறது. நீங்கள் குடித்ததுபோக பாக்கியை ஒட்டலுக்கு அனுப்பினல் போதும். ‘பால்பட்டிக் கணக்குகளை எடுத்துக்கொண்டு உன் புருஷனை மத்தியானம் பங்களாவுக்கு வரச்சொல்லு” என்று தெரிவித்துவிட்டு குந்தளம் சுந்தரத்துடன் பங்களாவுக்கு வந்துசேர்ந்தாள்.

பால்பட்டியில் செய்த சில சீர்திருத்தங்களை முனிசாமி கவனிக்கப்போனுன். பிற்பகலில் முனிசாமி சுந்தரத்தை

அழைத்துக்கொண்டுபோய் தச்சுவேலைகள் நடக்குமிடத்தையும் பள்ளிக்கூடத்தையும் சுற்றிக்காண்பித்தான். சுந்தரம் விரும்பியபடி அன்று பள்ளிக்கூடக்குழந்தைகளுக்கு வாழைப் பழமும் கற்கண்டும் விநியோகிக்கப்பட்டன.

மாலையில் சுந்தரமும் குந்தளமும் கிராம எல்லையிலுள்ள கோவிலுக்கு ஸ்வாமி தரிசனம் செய்யச்சென்றனர்.

ஸ்வாமியின் முன்னால் நின்றுகொண்டு 'இறைவா என்னை எப்பொழுதுமே இதுபோல சந்தோஷமாக வைத்திருக்கவேண்டும்!' என்றான் சுந்தரம்

அவன் சொல்லி முடித்ததும் 'வள்ளிமணாளா! என் அத்தானுக்கு சாந்தாவைவிட சிறந்த அறிவாளியாக ஒரு மனைவிவந்து, அவர்கள் பாலும் நீரும்போல ஒன்றிவாழ வேண்டும்!' என்று குவித்த கரங்களுடன் விக்ரகத்தைப் பார்த்துச் சொன்னாள் குந்தளம்.

சுந்:- வேண்டுமென்றே என் வாயைக் கிண்டுகிறாயில்லையா குந்தளம்? சாந்தாவை ஏன் இழுக்கிறாய் இங்கு?

குந்:- நான் இழுக்கவில்லை. இங்குதானே அவளும் இருக்கிறாள்! இல்லையென்று சொல்லுங்கள் பார்க்கலாம்!

சுந்:- இங்கிருக்கிறாளா? கனவுகாண்கிறாயா?

குந்:- நானில்லை! உங்கள் நெஞ்சிலிருப்பவர்களைக் கனவு காண்பது நீங்களா நானா?

சுந்:- குந்தளம்! என்னை இன்னும் நீ தெரிந்துகொள்ளவில்லை!

குந்:- இந்த வார்த்தையை உங்களுக்குச் சொல்லிக் காட்டவேண்டிய சந்தர்ப்பம் ஒன்று நிச்சயமாக வரும்.

அப்பொழுது சொல்லுகிறேன். இறைவா நான் நினைப்பது தவறுகாமல் கவனித்துக்கொள்வது உன் பாரம்!

'இந்த விஷயத்தில் தெய்வம் உன்னைக் கண்டிப்பாக கைவிடப்போகிறது!' என்று சொல்லிக்கொண்டு கர்ப்பக் கிரகத்திலிருந்து கோவில் பிரகாரத்துக்கு வந்தான் சுந்தரம்.

'ஏமாற்றம் என் ஜன்மத்தோடு கூடப்பிறந்தது. அதைச் சகித்துக்கொள்ளும் சக்தியும் சேர்ந்து பிறந்திருக்கிறது!' என்று அலட்சியமாக குந்தளம் பதிலளித்தபொழுது முனி சாமி அங்கு ஓடிவந்தான்.

பெரியம்மாளுக்கு நேற்று மத்தியானத்திலிருந்து உடம்பு சரியில்லையாம். கவலை ஒண்ணுமில்லை, சாதாரண ஜுரம்தா னென்று எசமான் சொல்லியனுப்பியிருக்காங்க! பழனி யாண்டி வந்து சொன்னன்' என்று தெரிவித்தான் முனி சாமி.

குந்தளம்:- ஏமாற்றம் என்கூடப்பிறந்ததென்று சொன் னது சரியாகிவிட்டது பார்த்தீர்களா? கிராமத்தில் ஒரு வாரம் தங்கியிருக்கலாமென்று நினைத்து வந்தேன். இரண்டே நாளில் புறப்படவேண்டியிருக்கிறது! முனிசாமி, இராச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு புறப்படலாம். கார் டிரை வரைத் தயாராக இருக்கச்சொல்லு!'

முனிசாமி:- 'ஏன் காலையிலே போகலாமே!'

குந்:- 'சாப்பாட்டுக்குப்பின் இரவே புறப்பட்டுவிடு வோம். நல்ல நிலவிருக்கிறது. பிரயாணத்தின் சிரமமும் தெரியாது.

இதை சுந்தரமும் ஆமோதித்தான். இராப்போஜனம் முடிந்ததும் அவர்கள் முனிசாமியுடன் காரில் கிளம்பினார்கள்.

## 8. உள்ளம் குமுறியது.

முனிசாமி முன் வீட்டில் டிரைவர் பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். பின்வீட்டில் சுந்தரமும் குந்தளமும் இருந்தார்கள். நிலவுவெளிச்சத்தில் பிரயாணம் சுகமாக இருந்தது. அவர்களுடைய சம்பாஷணையில் இடையிடையே முனிசாமியும் கலந்துகொண்டான். ஆனால் கொஞ்ச நேரத்தில் அவன் குரட்டைவிட ஆரம்பித்துவிட்டான். இரண்டுதினங்கள்வரையில் ஓய்வின்றி சுற்றியதால் குந்தளத்திற்கும் களைப்பாயிருந்தது. பேசிக்கொண்டே சுய நினைவை இழந்து அவளும் உறங்கிவிட்டாள். நான்கைந்து மைல்தூரம் சென்றபின் கார் ஒரு பள்ளத்தைத் தாண்டியபொழுது ஒரு குலுக்குக் குலுக்கியது. குந்தளம் சுந்தரத்தின் மடியில் சாய்ந்தாள். தூக்கத்தில் வீட்டிலே படுத்திருப்பதாக நினைத்தாளோ என்னவோ? தாராளமாகக் கால்களை நீட்டிக்கொண்டு தலையணையை உயர நகர்த்துவதுபோல சுந்தரத்தின் தொடைகளைத் தள்ளினாள். அவளுக்கு வசதியாக சுந்தரம் நகர்ந்துகொண்டான். காற்றில் மெல்லிய மேற்புடவை பறந்துவிழும் சுய நினைவுமில்லாமல் அவன் மடிமீது தலையை வைத்துக்கொண்டு சுகமாக உறங்கினாள்.

அவளுடைய ஸ்பரிசம் சுந்தரத்தின் ஒவ்வொரு நரம்புகளையும் உணர்ச்சி பரவசமாக்கியது. நிலவு வெளிச்சத்தில் நிஷ்களங்கமான அவளது முகத்தைப்பார்த்துக்கொண்டே இமைகொட்டாமல் விழித்திருந்தான் அவன். 'இதே நிலைமையில் யுகக்கணக்கில் வேண்டுமானாலும் உறக்கத்தைவிட்டொழித்து அசையாமல் அமர்ந்திருப்பேன். கள்ளம் கபடமற்ற இந்த அபலைப்பெண்ணை கைம்பெண்ணென்று ஒதுக்கி வைத்திருக்கிறதே சதிகாரச்சமூகம்!' என்று தனக்குள் அவன் சொல்லிக்கொண்டான். அவன் மனம் ஒருநிலையிலில்லையென்பதை வெளியிட்டது அடிக்கடி அவன் விட்ட நெடுமூச்சு.

ஊர் நெருங்கியதும் மெதுவாகக் குந்தளத்தை எழுப்பினான். அப்பொழுதுதான் அவ்வளவுநேரம்வரை அவன்

மடிமீது படுத்திருந்ததை உணர்ந்துகொண்டாள் அவள். லஜ்ஜையுடன் அவசரம் அவசரமாக எழுந்து புடவையைச் சரிப்படுத்திக்கொண்டு 'அத்தான் கண்ணயரவே இல்லை போலிருக்கிறது!' என்று தலைநிமிராமல் நாணம்தோய்ந்த தொனியில் கூறினாள்.

'நானும் கண்ணயர்ந்திருந்தால் என்ன ஆகியிருக்கும் தெரியுமல்லவா?' என்று சுந்தரம் பதில் சொன்னபொழுது 'பங்களா வாசலில் கார்போய் நிற்கும்வரையில் இருவரும் விழித்துக்கொண்டிருக்கமாட்டோம். ஒருவரையொருவர் தலையணையாக மதித்து தழுவியவண்ணம் உறங்கிக்கொண்டிருப்போம்' என்று சொல்லுவதைப்போலிருந்தது. 'என்ன பயித்தியக்காரத்தனம் செய்துவிட்டோம். முனிசாமி விழித்துக்கொண்டிருந்தால் எவ்வளவு மோசமாக நினைத்திருப்பான்? என் நடத்தைக்கு மனப்பூர்வமாக வருத்தப்படுகிறேன் அத்தான்! என்னை மன்னித்துவிடுங்கள்!' என்றாள் தாழ்ந்த குரலில். சுந்தரம் ஏதோ சொல்ல வாயெடுத்தான். அதற்குள் முனிசாமி விழித்துக்கொண்டுவிட்டான். அரை மணி நேரத்தில் கார் பங்களா வாசலில் வந்து நின்றது.

இரவிலேயே அவர்கள் கிராமத்திலிருந்து திரும்பிவிடுவார்களென்பதை எதிர்பார்த்ததைப்போல பங்களாவின் வாசற் கதவு திறந்திருந்தது. முன் வராந்தாவில் அரைத் தூக்கத்துடன் உட்கார்ந்துகொண்டிருந்தான் ஒரு வேலைக்காரன்.

'ஏன் கதவை மூடவில்லை? இரவே நாங்கள் வந்துவிடுவோமென்று அப்பா சொன்னாரோ?' என்று கேட்டாள் குந்தளம்.

'ஆமாங்க! பன்னிரண்டு மணிவரைக்கும் பார்த்துவிட்டுக் கதவைப் பூட்டச்சொன்னாருங்க!'

'அத்தைக்கு என்ன உடம்பு? டாக்டர் வந்து பார்த்தாரா?' என்று குந்தளம் மேலும் விசாரித்தாள்.

'ஒன்றுமில்லீங்களே! எப்பவும்போலத்தான் இருக்கிருங்க! இத்தனைநேரம் காற்றுக்காக அய்யாவும் அம்மாவும் வராந்தாவில் உட்கார்ந்து பேசிக்கிட்டு இருந்துவிட்டு இப்பதான் படுக்கப்போனுங்க!' என்று சொன்னுன் வேலைக்காரன்.

அவன் பதில் குந்தளத்துக்கும் சுந்தரத்துக்கும் திகைப்பாயிருந்தது. அம்புஜத்துக்கு அசௌக்கியம் ஒன்றுமில்லையென்றால் எதற்காக இவ்வளவு அவசரமாய்ச் செய்தியனுப்ப வேண்டும்? அவர்களுக்கு ஒன்றும் விளங்கவில்லை. உறங்கிக்கொண்டிருப்பவர்களை எழுப்பவேண்டாம்; காலையில் பார்த்துக்கொள்ளலாமென்று நினைத்து குந்தளமும் சுந்தரமும் மாடிக்குப் போய்விட்டனர்.

அய்யரின்போக்கு அவர்களுக்கு விசித்திரமாகத் தோன்றியது. மறுநாட்காலை, அய்யர் சொன்னுர் 'அம்புஜத்துக்குக் கடுமையான ஜுரமடித்தது. ஆகையால்தான் சொல்லி அனுப்பினேன்' என்று. அம்புஜமும் இதை ஆமோதித்தாள். ஆனல் அவளைப்பார்த்தபொழுது ஜுரமடித்தவளைப் போலத் தெரியவில்லை.

'உள்ளூர ஜுரமடித்ததோ என்னவோ! சாப்பாட்டிலும் நடமாட்டத்திலும் எவ்வித மாறுதலையும் நான் காணவில்லை. நீங்கள் கிராமத்துக்குப் போயிருந்தபொழுது சதாசிவ குருக்கள் வந்திருந்தார். அம்மாவும் அய்யரும் அவரோடு வெகுநேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். வேறு ஒரு விசேஷமும் நீ இல்லாதபொழுது நடக்கவில்லை!' என்று குந்தளம் விசாரித்தபொழுது சங்கரி தெரிவித்தாள்.

அந்தநாள்வரையில் அய்யருக்கும் குந்தளத்துக்குமிடையில் ஒரு ரகசியமும் இருந்தது கிடையாது. குந்தளத்தைக் கேளாமல் அய்யர் ஒன்றும் செய்வதுமில்லை. இப்பொழுது தன் தந்தையிடம் ஒரு புதிய மாறுதல் ஏற்பட்டிருப்பதைக் குந்தளம் தெரிந்துகொண்டாள். சதாசிவ குருக்கள் வந்ததற்கும் அம்புஜத்துக்குக் கடுமையான ஜுரமென்று செய்தியனுப்பி கிராமத்திலிருந்து தன்னைத் திரும்ப அழைத்ததற்கும் என்ன சம்பந்தமிருக்கமுடியுமென்று மணிக்

கணக்கில் யோசித்துப் பார்த்தாள். அவளுக்கு எல்லாம் ஒரு பெரிய மூடுமந்திரமாகவே தோன்றியது. அன்றிரவு நிகழ்ந்த மற்றொரு சம்பவம் குந்தளத்தை மேலும் குழப்ப ஆரம்பித்தது. பாஸ்கரய்யரும் சுந்தரமும் வெளி வராந்தாவில் உட்கார்ந்து வெகுநேரம் தாழ்ந்த குரலில் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய தொனியிலிருந்து ஏதோ ரொம்ப முக்கியமான விஷயத்தைப்பற்றி பேசுகிறார்களென்பதுமட்டும் தெரிந்தது. சுந்தரம் திரும்பி வரும்பொழுது கேட்கவேண்டுமென்பதற்காக படுக்கப்போகாமல் புத்தகசாலையிலேயே குந்தளம் உட்கார்ந்திருந்தாள்.

சுந்தரம் மாடிக்கு வந்தசமயம் இரவு 10-30 மணிக்கு மேலாகிவிட்டது. 'என்ன இத்தனை நேரம் காதைக் கடித்துக்கொண்டிருந்தீர்கள் மாமாவுடன்!' என்று ஆவலுடன் விசாரித்தாள் குந்தளம். அதற்குச் சுந்தரம் சரியான பதிலளிக்கவில்லை. 'விசேஷமாக ஒன்றுமில்லையே!' என்று சொல்லி மழுப்பிவிட்டு படுக்கப் போய்விட்டான். இது குந்தளத்தை மேலும் குழப்பத்துக்கு உள்ளாக்கியது. 'இந்த வீட்டில் நான் ஒருவள்தான் தனி ஆசாமியா? மற்றவர்கள் எல்லோரும் ஒன்று? வீட்டில் ஏதோ ரகசியமாக பேச்சுகள் நடப்பது நிச்சயமாகத் தெரிகிறது. அதை என்னிடமிருந்துமட்டும் மறைப்பானேன்?' என்று நினைத்தாள் குந்தளம். அவளுக்கு எதிராக உலகமே சதிசெய்ய ஆரம்பித்துவிட்டதைப்போலவும் பரந்த உலகத்தில் தான் ஒருவள் தனி ஆசாமியைப்போலவும் கற்பனை செய்து மனதை மேலும் வாட்டிக்கொண்டாள். அன்றிரவு முழுவதும் அவளுக்கு உறக்கம் வரவில்லை. அவளுடைய வாழ்நாளில் எந்த சந்தர்ப்பத்திலும் இவ்வளவு மனவேதனையை அனுபவித்தது கிடையாது.

இரண்டு தினங்களுக்குப்பிறகு சுந்தரிமூலமாகக் கிடைத்த வஸுமதியின் கடிதம் குந்தளத்தின் எல்லா சந்தேகங்களையும் நிவிர்த்திசெய்தது. மனதிலிருந்து பெரிய சுமை இறங்கியதைப்போல 'அப்பாடா! இதற்குத்தானா இவ்வ

ளவு ஆர்ப்பாட்டமும்!' என்று சொல்லிக்கொண்டு பெரு மூச்சு விட்டாள்.

கடிதத்தில் வஸுமதி பின்வருமாறு எழுதியிருந்தாள்:-

அன்புள்ள குந்தளம்,

வஸு நினைப்பது ஒருபோதும் தவறுவதில்லை. நீதான் எழுதினாய் அத்தை இப்படி, அத்தான் அப்படி என்றெல்லாம். அதைப்பார்த்துவிட்டு என் எஜமானர்கூடச் சொன்னார், 'வஸு நீ வீண் பீதி கொண்டிருக்கிறாய்!' என்று. ஆனால் நான் நினைத்தது நூற்றுக்கு நூறு சரியென்பதை உன் அப்பாவின் கடிதம் ருசுப்படுத்திவிட்டது. உன் அத்தான் சுந்தரத்துக்கு சாந்திக்கிறுக்குப் பிடித்திருக்கிறதாம். சாந்தியை அவருக்குக் கல்யாணம் செய்துவைத்துவிடலாமென்று உன் அப்பாவும் அத்தையும் நினைக்கிறார்கள். சாந்தி யார்? அவளுடைய பெற்றோர்களின் விலாசமென்ன? அந்தக் குடும்பம் எப்படி? என்றெல்லாம் விசாரித்து என் எஜமானருக்கு எழுதியிருக்கிறார் உன் அப்பா. அவருடைய கடிதத்திலிருந்து சில முக்கியமான வாக்கியங்களை அப்படியே எழுதுகிறேன் படித்துப்பார்:-

'காலேஜில் படித்துக்கொண்டிருந்த நாள்முதற்கொண்டே சாந்தியைப்பற்றி சுந்தரம் அடிக்கடி பேசுவானும். அவளைப்போல தமிழ்நடை எழுதக்கூடியவர் தமிழ்நாட்டிலேயே கிடையாதென்று வானளாவிப் புகழுவானும். சொப்பனத்தில்கூட சாந்தியின் பெயரை அடிக்கடி அவன் சொல்லுவதுண்டென்றும் ஆகையால் அந்தப் பெண்ணையே அவனுக்குக் கல்யாணம் செய்துவைத்துவிடுவதுதான் நல்லதென்றும் அம்புஜம் அபிப்பிராயப்படுகிறாள். சுந்தரம் அவளுடையபிள்ளை. அவள் அபிப்பிராயத்துக்கு மாறாக நான் ஒன்றும் சொல்லுவதற்கில்லை. புத்தகம் எழுதிப் பிரபல்யமடைய முன்வந்த ஒருபெண், அடக்க ஒடுக்கமாகக் குடும்பம் நடத்துவாளென்று எனக்குத் தோன்றவில்லையென்றாலும் என் அபிப்பிராயத்துக்கு இதில் இடம் கிடையாது.

சாந்தி யார்? பெண் எப்படி? அவளுடைய பெற்ருேர்களின் அந்தஸ்து எப்படி? இந்த விபரங்களையெல்லாம் விசாரித்து எழுதுங்கள். சாந்தியின் குடும்பம் நமது சம்பந்தத்துக்கு லாயக்கானதுதான் என்று உங்களுக்குத் தோன்றினுல் தயுவுசெய்து நீங்களே சாந்தியின் தகப்பனுரைச் சந்தித்து அவர் அபிப்பிராயத்தைக்கேட்டு எழுதுங்கள். அவசியமானுல் பிறகு நான் நேரில் வருகிறேன்.'

இப்படி எழுதியிருக்கிருர் உன் தகப்பனுர். அதைப் படித்ததுமுதல் எனக்கு மிகவும் வேதனையாயிருக்கிறது. நான் என்னென்னவோ கோட்டை கட்டிக்கொண்டிருந்தேன். எல்லாம் தகர்ந்துவிட்டது. உன் தகப்பனுரின் கடிதத்திலிருந்து உண்மையாகவே சுந்தரம் அத்தானுக்கு சாந்திப்பயித்தியம் பலமாகப் பிடித்திருக்கவேண்டுமென்று நினைக்கிறேன். உன் தகப்பனுருக்கு என்னுடைய எஜமானர் எழுதியிருக்கும் பதிலில் இரண்டு மூன்று வரிகளை மட்டும் இங்கு குறிப்பிடுகிறேன்:

'சாந்தாவைப்பற்றி நினைப்பதில் பிரயோஜனமில்லை. அவளுக்கு ஏற்கனவே கல்யாணமாகிவிட்டது. இதன்பிறகு அவளுடைய பூர்வோத்திரங்களை அறிய நீங்கள் விரும்ப மாட்டீர்களென்று நம்புகிறேன்.'

இந்தக்கடிதம் கிடைத்தபின் சாந்தாவைப்பற்றி யோசிப்பதை உன் அத்தையும் அப்பாவும் கைவிட்டுவிடுவார்கள். ஆனுல் வேறு பெண்ணைத்தேடும் யோசனையைக் கைவிடப் போவதில்லை. கல்யாணம் நிச்சயமானுல் அதற்கு எப்படியும் நாங்கள் வராமலிருக்க முடியாது. எங்களுக்கும் உன் குடும்பத்துக்குமுள்ள உறவை சுந்தரம் அப்பொழுது தெரிந்துகொண்டால் என்ன நினைப்பார்? அதுவேறு கவலையாயிருக்கிறது எனக்கு! உனக்கும் எனக்குமுள்ள தொடர்பு தெரியாமல் உன்னைப்பற்றி என் எஜமானரிடம் என்னவெல்லாம் உளறிக்கொட்டியிருக்கிருர் அந்தக்காலத்தில்!

இன்னொரு விஷயம் சாந்தாவின் நான்காவது புத்த கம் அச்சாகிவிட்டது நாளை பிரசுரமாகிறது. நாளைய தபா லில் உனக்கு ஒரு பிரதி அனுப்புகிறேன். உன் அத்தா னுக்கு வழக்கம்போல் ஒருபிரதி தபாலில் வரும்.'

உன் அன்புள்ள
வஸுமதி.

வஸுமதியின் இந்தக் கடிதம் குந்தளத்தை ஆழ்ந்த சிந்தனையில் வீழ்த்தியது. இரண்டு தினங்களுக்கு முன்னால் தன் தகப்பனாரும் சுந்தரமும் இரவு வெகுநேரம்வரை தனித் துப் பேசிக்கொண்டிருந்தது எதைப்பற்றியென்ற சந்தேகம் குந்தளத்திற்கு இனி இல்லை. ஆனால் வஸுவின் கடிதம் புதிய பல சந்தேகங்களைக் கிளப்பிவிட்டன. சாந்தாவிடம் அத்தானுக்கு உண்மையான பிரேமை இருப்பதாக அப்பா ஏன் எழுதினார்? அத்தான் சொல்லாமல் அவர் தானாகவே கேசவனுக்கு இப்படி எழுதுவாரா? கனவில்கூட அத்தா னுக்கு சாந்தாவின் ஞாபகம்தானென்று அத்தை சொல்லி யது பொய்யாயிருக்கமுடியுமா? இவைகளெல்லாம் நிஜ மென்றால் அன்று கிராமக் கோவிலிலே இறைவனின் சந்நி தானத்தின்முன்பு நின்றுகொண்டு 'உங்கள் நெஞ்சிலிருக்கும் சாந்தாவைக் கனவுகாண்பது நீங்களா அல்லது நானா?' என்று கேட்டபொழுது 'குந்தளம்! என்னை இன்னும் நீ தெரிந்துகொள்ளவில்லை!' என்றாரே அத்தான். அதன் பொருள் என்ன? இவ்வளவு கபடம் நிறைந்தவரா அத் தான்? இவைகளெல்லாம் ஒருபுறமிருக்க, கிராமத்துக்குச் சென்ற எங்களை அத்தைக்கு உடம்பு சரியில்லையென்று பொய்ச்செய்தியனுப்பி அவசரமாகத் திருப்பியழைப்பா னேன்? நானும் அத்தானும் சேர்ந்து போகக்கூடாதென்ற எண்ணமிருந்தால் கிராமத்துக்குப் போவதற்கு முன்பே தடைசெய்திருக்கலாமே! போகும்பொழுது ஒருவரும் ஆக்ஷேபனை சொல்லவில்லை. சதாசிவ குருக்கள் பங்களா விற்கு வந்துவிட்டுப் போனதற்கும், பிறகு நடந்த சம்பவங் களுக்கும் ஏதாவது சம்பந்தமிருக்கவேண்டும். மூலகார

ணம் குருக்களாகத்தான் இருக்கமுடியும். அவர் என்ன சொல்லியிருப்பார்?

இப்படி தனக்குள்ளாகவே அடுத்தடுத்து பல கேள்விகளைக் கேட்டுக்கொண்டாள் குந்தளம். ஆனால், கேள்விகளை எழுப்பிய மனதிற்கு அவற்றின் விடைகளைக் கண்டு பிடிக்க முடியவில்லை. உலகமே திடீரென்று மாறுபட்டு விட்டதைப்போல அவளுக்குத் தோன்றியது. தன்னிடமிருந்து தனது தகப்பனாரே சில விஷயங்களை மறைக்கிறாரென்ற எண்ணம்தான் குந்தளத்துக்கு அளவிடமுடியாத வேதனையை உண்டுபண்ணிற்று. அவர் ஒன்றையும் ஒளியாமல் சொல்லி 'இதுதான் நிலைமை குந்தளம்' என்று தெரிவித்திருந்தால் அவள் ஆறுதலடைந்திருப்பாள். தகப்பனாரிடம் ஏற்பட்ட திடீர் மாறுதலை அவளால் பொறுக்கவே முடியவில்லை.

இரண்டு தினங்களுக்குப்பிறகு நடந்த ஒரு சம்பவம் குந்தளத்திற்கு ஓரளவு மன நிம்மதியைக் கொடுத்தது. அவள் புத்தகசாலையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருக்கையில் அய்யர் அங்கு வந்து 'குந்தளம்! உன்னிடம் ஒரு விஷயமல்லவா சொல்லவேண்டும்!' என்று கூறிக்கொண்டே பக்கத்தில் ஒரு நாற்காலியை இழுத்துப்போட்டுக்கொண்டு உட்கார்ந்தார்.

'என்ன அப்பா?' என்று சாவதானமாக வினவினாள் புத்தகத்தை மூடிவிட்டு.

'உன் அத்தான் சுந்தரத்தின் கல்யாண விஷயம்தான். அம்புஜத்துக்கு உடம்பு வரவர துர்பலமாகிக்கொண்டிருக்கிறது. சீக்கிரத்தில் ஒரு கல்யாணத்தைச்செய்து பார்த்து விட வேண்டுமென்று ஆசைப்படுகிறாள்!' என்றார் அய்யர்.

'அத்தானுக்கும் வயதாகிவிட்டதில்லையா? காலாகாலத்தில் கல்யாணமும் நடக்கவேண்டியதுதானே?' என்றாள் குந்தளம் அமைதியான தொனியில்.

காலாகாலத்தில் என்று அவள் சொல்லியது அய்ய ருக்கு சுருக்கென்று தைத்தமாதிரி இருந்தது. சிறிதுநேரம் மௌனம் சாதித்துவிட்டு 'சாந்தாவென்று ஒரு பெண் புத்தகமெல்லாம் எழுதுகிறளே அவளிடம் சுந்தரத்துக்கு நாட்டமிருப்பதாகத் தெரிகிறதென்று அம்புஜம் சொன்னள். கேசவனுக்கு எழுதி விசாரித்தேன். சாந்தாவுக்கு ஏற்கனவே கல்யாணமாகிவிட்டதென்று பதில் வந்தது. மன்னர்குடி வக்கீல் ராஜகோபாலய்யருக்கு கல்யாணவயதில் ஒரு பெண் இருக்கிருளாம். அந்தப்பெண்ணின் ஜாதகம் சுந்தரம் ஜாதகத்துக்குப் பொருத்தமாயிருக்கிறது! இடமும் நல்ல இடம். அதை முடித்துவிடலாமென்று நினைத்துக்கொண்டிருக்கிறேன்' என்று மூச்சுவிடாமல் பேசினர்.

'பார்த்துச் செய்யுங்களேன் அப்பா! உங்களுக்குத் தெரியாத யோசனையா நான் சொல்லப்போகிறேன்' என்றுள் குந்தளம் தலை நிமிராமல் புத்தகத்தைத் திருப்பிக்கொண்டே. அவர் இவ்வளவுதூரம் சொல்லியதே குந்தளத்துக்குப் பெரிய கவலையை நீக்கியமாதிரி இருந்தது.

'கல்யாணத்தைப்பற்றி அத்தானைக் கலந்து பேசினீர்களா? அவர் என்ன அபிப்பிராயப்படுகிறர்? என்று கேட்க விரும்பினள். கிராமத்திலிருந்து எங்களை ஏன் திடீரென்று திருப்பி அழைத்தீர்கள்? என்று கேட்கவும் அவள் மனம் துடிதுடித்தது. ஆனல், அவராக வலுவில் சொல்லாத விஷயங்களை வற்புறுத்திக் கேட்கக்கூடாதென்று நினைத்து மௌனமாயிருந்துவிட்டாள்.

அன்றுமுதல் குந்தளத்தினிடம் ஒரு தெளிவான மாறுதல் காணப்பட்டது. சாப்பிடும் நேரம்தவிர மற்ற சமயங்களில் அவள் தன் அறையைவிட்டு வெளிவரவில்லை. புத்தகசாலையிலிருந்தால் சுந்தரத்தைத் தனிமையில் சந்திக்க நேர்ந்துவிடுமோ என்றெண்ணி புத்தகங்களின் திக்கையும் அவள் எட்டிப்பார்க்கவில்லை. இரண்டு மூன்று சந்தர்ப்பங்களில் அவளும் சுந்தரமும் தனிமையிலிருக்க நேரிட்டது. அப்பொழுது காரணமில்லாமல் முனிசாமியை அழைத்துக்கொண்டு

அவனிடம் பேசத்தொடங்கினுள் குந்தளம். அவளிடம் ஏற்பட்ட இந்த மாறுதல் சுந்தரத்துக்கு கண்ணைக்கட்டி காட்டில் விட்டமாதிரியிருந்தது. தன்னுடைய கல்யாண விஷயத்தைப்பற்றி அவளிடம் பாஸ்கரய்யர் ஒன்றும் சொல்லியிருக்கமாட்டாரென்றே அவன் நினைத்துக்கொண்டிருந்தான். ஆகையால்தான் எப்பொழுதும் கலகலப்பாகப் பேசும் குந்தளம் திடீரென்று மௌனப் பதுமையாகிவிட்டது அவனைத் திகைக்கச்செய்தது.

## 9. ஊருக்கு ஒரு முழுக்கு

இப்படியே இரண்டு வாரங்கள் கழிந்தன. மூன்ருவது வாரத்தில் நிலைமை உச்சஸ்தாயியை அடைந்தது. மன்னூர்குடிப் பெண்ணையே சுந்தரத்துக்குத் தீர்மானித்து முகூர்த்தத்துக்கும் நாள் குறிப்பிட்டாகிவிட்டது. கல்யாண ஏற்பாடுகளை அய்யரும் அம்புஜமும் கவனித்து வந்தார்கள். 'புடவைகள் எடுக்க நீதான் வரவேண்டும்! நல்லமாதிரிகள் உனக்குத்தான் தெரியும்!' என்று குந்தளத்தைக் கட்டாயப்படுத்தி கடைக்கு அழைத்துப்போனுள் அம்புஜம். அன்று சுமார் பத்தாயிரம் ரூபாய்க்கு வேஷ்டிகளும் புடவைகளும் வாங்கிவந்தார்கள். வீடு திரும்பியதும் அவற்றை ஒவ்வொன்ருக அத்தானுக்கு பிரித்துக்காட்டிக் கேலிசெய்தாள் குந்தளம். மூன்று வாரங்களாக மௌனம் சாதித்த குந்தளம் அன்று எல்லோர் முன்னிலையிலும் கலகலப்பாகப்பேசி கேலிசெய்தது சுந்தரத்துக்கு விசித்திரமாயிருந்தது.

'இன்று புதன்கிழமையில்லையா? இன்னும் நாற்பத்து எட்டு மணிநேரம்தான்! வெள்ளிக்கிழமை மாலை அத்தான் மதனியை அத்தான் பார்க்கலாம்!' என்ருள் கிண்டலாக குந்தளம்.

"நான் பார்ப்பதற்குமுன் நீதானே பார்க்கப்போகிருய்?' என்று வேண்டாவெறுப்புடன் பதில் சொன்னுன் சுந்தரம்.

கல்யாணம் திங்கட்கிழமை. வெள்ளிக்கிழமை விடியற்காலையிலேயே எல்லோரும் திருச்சினுப்பள்ளியிலிருந்து புறப்படுவதென்று ஏற்பாடாகியிருந்தது. வியாழக்கிழமை இரவு சுந்தரம் புத்தகசாலையில் உட்கார்ந்திருந்தான். குந்தளம் அவனிடம் போய் 'அத்தான், என்னைத் தவருக நினைக்காமலிருந்தால் உங்களிடம் ஒரேஒரு கேள்விகேட்க விரும்புகிறேன்!' என்ருள்.

'இன்னும் எவ்வளவு நேரத்துக்கு என்னுடன் பேசப் போகிறாய்? தாராளமாகக்கேள்' என்றான் சுந்தரம் தலை நிமிர்ந்து பார்க்காமலே.

குந்:- எத்தனை மணி நேரத்துக்கு என்றால் எனக்குப் புரியவில்லையே! அத்தான் மதனி வந்துவிட்டால் பிறகு என்னுடன் பேச அவகாசமிருக்காதென்கிறீர்களா? வாஸ்தவம்!

சுந்:- சரி, அப்படித்தான் வைத்துக்கொள்ளேன்.

குந்:- இல்லை! கல்யாணத்துக்குமுன் தம்பதிகள் பரஸ்பரம் ஒருவரையொருவர் நன்கு அறிந்திருக்கவேண்டும்; பரஸ்பரம் காதலித்து மணக்கவேண்டும்; கட்டாயமணம் வாழ்க்கையைக் குட்டிச்சுவராக்கிவிடும் என்றெல்லாம் உங்களுடைய கதைகளில் எழுதியிருக்கிறீர்களே. அப்படியிருந்தும் பெண்ணைப் பார்க்காமல் எப்படிக் கல்யாணத்துக்குச் சம்மதித்தீர்களென்றுதான் எனக்கு ஆச்சர்யமாயிருந்தது. கதைவேறு நிஜவாழ்க்கை வேறு! அப்படித்தானே அத்தான் தத்துவம்?

சுந்:- பெண்ணை நான் ஏன் பார்க்கவேண்டும்?

குந்:- நீங்கள் திருப்தியடைய!

சுந்:- என் அம்மாவும் உன் அப்பாவும் பார்த்துவிட்டுத்தானே தீர்மானித்திருக்கிறார்கள்? எனக்குத் தீமையான காரியத்தை அவர்கள் செய்யமாட்டார்களே! அவர்களுக்குத் திருப்தியென்றால் எனக்கும் பரம திருப்திதான்!

குந்:- அப்பாடா! இப்பொழுதுதான் என் மனதிலிருந்த பெரிய கவலை நீங்கியது. என் தகப்பனார் உங்களுக்குப் பிரியமில்லாமல் வலுக்கட்டாயமாக இந்தக் கல்யாணத்தை நடத்துகிறாரோ என்று பயந்துகொண்டிருந்தேன். அத்தானும் மனம் உவந்து சம்மதித்தே கல்யாணம் நடக்கிறதென்பதை உங்கள் வாயிலிருந்து கேட்க என்மனம் பூரிப்படைகிறது. அத்தான் மதனியைப் பார்க்காமலே அத்

தானுக்குத் திருப்தியேற்பட்டுவிட்டதென்றால் எனக்கும் திருப்திதான்.

சுந்தரம் இவ்வளவுக்கும் புத்தகத்தின்மீது வைத்திருந்த கண்களை எடுக்கவேயில்லை. சில விநாடி மௌனத்துக்குப் பின் ஏதோ சொல்வதற்கு நிமிர்ந்துபார்த்தாள். குந்தளம் அதற்குமுன்பே போய்விட்டாள். அங்கிருந்தால் சுந்தரத் தின் கண்கள் கண்ணீரைப் பெருக்கியது அவளுக்குத் தெரிந்திருக்கும்,

அன்றிரவு மீண்டும் குந்தளத்தைத் தனிமையில் சந் திக்க சுந்தரம் முயற்சித்தான். அவன் முயற்சி பலிக்க வில்லை. விடியற்காலை மூன்றுமணிவரையில் அவனுடைய அறையில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. பிறகு கீழே இறங்கிவந்து தோட்டத்துக்குச் சென்று அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்த முனிசாமியைச் சப்தம் செய்யாமல் எழுப்பினன் சுந்தரம்.

'சின்ன எசமாங்களா? இந்தநேரத்தில்!' என்று ஒன் றும் விளங்காமல் கலவரத்துடன் கேட்டுக்கொண்டு எழுந்து வந்தான் முனிசாமி!

'உஸ்! சப்தம் செய்யாதே! கொஞ்சம் இப்படி வா' என்று தாழ்ந்த குரலில் சொல்லி தோட்டத்தின் ஒரு மூலைக்கு முனிசாமியை சுந்தரம் அழைத்துக்கொண்டுபோய் காதோடுகாதாக ஏதோ தெரிவித்தான்.

வெள்ளிக்கிழமை காலை ஐந்துமணிக்கே எல்லோரும் எழுந்துவிட்டார்கள். அவசரம் அவசரமாகக் காப்பி பல காரங்கள் தயாரிப்பதை சங்கரி மேற்பார்வையிட்டுக்கொண் டிருந்தாள். வீட்டு வேலைக்காரர்களும் என்றுமில்லாத் சுறு சுறுப்புடன் அங்குமிங்கும் நடமாடிக்கொண்டிருந்தார்கள். வராந்தாவின் ஒரு மூலையில் முனிசாமி அமைதியாக உட் கார்ந்திருந்தான்.

அய்யர் ஈரத்துணியுடன் ஸ்நான அறையிலிருந்து வெளிவந்து 'முனிசாமி! அடே முனிசாமி! சுந்தரத்தை

எழுப்புடா! நேரமாகவில்லே!' என்று சப்தம் போட்டார்.

முனிசாமி மாடிக்குப்போய்விட்டுத் திரும்பிவந்து 'சின்ன எசமான் அறையிலே இல்லீங்களே!' என்முன் நிதானமாக.

'அறையில் இல்லேயென்முல் பின்கட்டுக்குப் போயிருக்கிருனே என்னவோ தேடிப்பார்த்து சீக்கிரம் ஸ்நானம் செய்யச்சொல்லு! நேரமாகிறது!' என்று சொல்லிவிட்டு அய்யர் உடுப்பு அணியப்போனுர்.

சிறிது நேரத்துக்குப்பிறகு அம்புஜமும் முனிசாமியும் அய்யரிடம் கலவரத்தோடு வந்து சுந்தரத்தை ஒரு இடத்திலும் காணவில்லே என்று சொன்னுர்கள். 'காணுமல் எங்கே போவான்! வெளியில் போயிருக்கிருனே என்னவோ! கொஞ்ச நேரத்தில் வந்துவிடுவான்! மற்றவேலேகளேப் பாருங்கள். குழந்தை குந்தளம் ஸ்நானம்பண்ணிவிட்டாளா? என்முர் அய்யர்.

'ஓ! நான் தயாராகிவிட்டேன். இப்படியே கிளம்பவும் ரெடி!' என்முள் குந்தளம் வராந்தாவிலே நின்றுகொண்டு. சிறு சந்தேகம் அவள் மனதில் ஊசலாடிக்கொண்டிருந்தது. முதல்நாள் இரவு 'இன்னும் எவ்வளவு நேரத்துக்கு என்னுடன் பேசப்போகிருய்?' என்று சுந்தரம் சொல்லியதற்கும் இப்பொழுது அவன் காணுமல் போயிருப்பதற்கும் ஏதாவது சம்பந்தமிருக்குமோ என்ற கவலே அவளிடம் ஏற்பட்டது. கொஞ்ச நேரத்திற்கெல்லாம் உண்மை அவர்களேத் தேடிவந்தது. ஒரு ஜட்காவண்டிக்காரன் பங்களாவுக்கு வந்து அய்யரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். 'எசமான் பத்திரமாய் ரயிலேறிப்போய்ட்டாரு! இந்தக் கடுதாசி தவறிப்போய் அவங்க பையிலிருந்திச்சாம்! உங்களிடம் கொடுத்துவிடச்சொன்னுரு!' என்று சொல்லிவிட்டுப் போனுன்.

பேயைக் கண்டவர்கள்மாதிரி எல்லோரும் அப்படியே பிரமித்து நின்முர்கள். குண்டூசி கீழே விழுந்தாலும் கிணீ

றென்று சப்தம் கேட்கும். அவ்வளவு நிசப்தம் குடிகொண்டிருந்தது. சில நிமிடங்களுக்கு முன்புவரையில் கலகலப்பாயிருந்த அம் மாளிகையில் ஏன் இந்த அலங்கோலம்? முனிசாமிமட்டும் இதையெல்லாம் எதிர்பார்த்தவன்போல அமைதியாக வேறு எங்கோ பார்த்துக்கொண்டு நின்றான்.

அதிர்ச்சி தெளிந்து அய்யர் கடிதத்தைப் பிரித்துப் படித்தார். அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

அன்புள்ள மாமா,

என் நடத்தையைக்கண்டு நீங்கள் கோபமடைவீர்கள். நன்றிகெட்டவனென்று சபிப்பீர்கள். ஆனால் நான் வேறு விதமாக நடந்துகொள்ளுவதற்கில்லை. சபிக்கப்பட்ட எனது வாழ்க்கையிலே உங்கள் சாபத்தையும்சேர்த்து கட்டிக்கொள்ளுவதென்று தீர்மானித்துவிட்டேன்.

என் மனநிலைமையை உங்களுக்கு நான் தெளிவாகச் சொல்லியிருக்கிறேன். நான் பிரம்மச்சாரியாக வாழ்நாளைக் கழிக்கவேண்டியதுதான் இறைவனின் திருவுள்ளமென்பதை உறுதியாக நம்புகிறேன். மனச்சாட்சியை வஞ்சித்து நடக்கும் துணிச்சல் எனக்கு ஏற்படவில்லை. நீங்கள் ஏற்பாடு செய்திருக்கும் கல்யாணத்தில் நான் சுகம்காண முடியாது. நான் விரும்பும் பெண்ணை மணம் செய்துகொள்ளவும் வழியில்லை. இந்தச் சங்கடமான நிலைமையில் உற்றார் உறவினர் எல்லோரையும் துறந்து கண்காணாத இடத்துக்குப் போய் ஒரு சந்நியாசியைப்போல ஏகாங்கியாக வாழ்நாளைக் கடத்துவதென்ற தீர்மானத்துடன் போகிறேன். என் வாழ்க்கைக்கு எங்கிருந்தாலும் ஒன்றுதான்.

என்னை நீங்கள் தேடுவதில் பிரயோசனமில்லை. சிரமப்படாதீர்கள். என் செலவுகளுக்கு சொற்ப ரூபாய் எடுத்துக்கொண்டு போகிறேன். பிழைப்புக்கு ஒரு வேலை கிடைத்ததும் கூடிய சீக்கிரம் இந்தப் பணத்தைத் திருப்பியனுப்பி விடுவேன்.

அம்மா மனம் உடைந்துபோவாள் அதுதான் எனக்குத் தீராக்கவலையாயிருக்கிறது. இருந்தாலும் என்ன செய்ய? எனக்கு வேறு வழியில்லை. அம்மாவுக்கு ஆறுதல் சொல்லி அவளை சம்ரக்ஷிக்குமாறு பணிவுடன் வேண்டுகிறேன். குந்தளத்துக்கு என் அன்பைத் தெரிவியுங்கள். நமஸ்காரம்.

உங்கள் அன்புள்ள

சுந்தரம்.

இப்படி வாசித்து முடித்ததும் அய்யருக்கு ஒருபக்கம் துக்கமும் இன்னொருபக்கம் கோபமும் ஏற்பட்டது. 'முகத்தில் கரியைப் பூசிவிட்டானே பாவி! என்னடா எழுதியிருக்கிறான் பாஸ்கரா! என்னவென்று சொல்லு!' என்று படபடப்புடன் கேட்டாள் சுந்தரத்தின் தாயார் அம்புஜம்.

'எல்லாம் அழகாய்த்தான் எழுதியிருக்கிறான். மாடிக்கு வா சொல்லுகிறேன்!' என்று கிணற்றுக்குள்ளிருந்து பேசுவதுபோல் ஹீனஸ்வரத்தில் சொல்லிவிட்டுத் தலை நிமிராமல் மாடிக்குப் போனார். அம்புஜமும் குந்தளமும் அவர் பின்னால் போனார்கள். புத்தகசாலையை அடைந்ததும் அய்யர் கடிதத்தை குந்தளத்திடம் கொடுத்து 'உன் அத்தான் அழகை அத்தைக்குப் படித்துக்காட்டு என்றார். குந்தளம் கடிதத்தை நிறுத்தி நிறுத்தி வாசித்துக் காண்பித்தாள் அம்புஜத்துக்கு.

'உன் பிள்ளையின் யோக்கியத்தைப் பார்த்தாயில்லையா? வெளியே தலைகாட்டமுடியாதபடி செய்துவிட்டான். மன்னார்குடிக்கு என்ன கடிதம் எழுதுவது? அவர்களும் கல்யாணத்துக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்திருக்கமாட்டார்களா? சுந்தரம் ஓடிப்போய்விட்டானென்று எழுதினால் அவர்கள் என்ன நினைப்பார்கள்? எனக்கு ஒன்றுமே புரியவில்லை!' என்றுசொல்லித் தலையில் கைவைத்துக்கொண்டு உட்கார்ந்தார் அய்யர்.

குந்:- 'என்மேல் கோபித்துக்கொள்ளாதீர்கள் அப்பா! மன்னார்குடிப்பெண் பிடிக்கவில்லை என்று சொன்னால் வேறு

பெண்ணைப் பார்த்திருக்கலாம். அத்தானுக்கு வாழ்க்கைப் பட நம் ஜாதியில் வேறு பெண்ணேயில்லையா?'

அய்யர்:- மன்னார்குடிப் பெண் வேண்டாமென்று அவன் சொல்லியதுபோலவும், முடியாது அவளைத்தான் கல்யாணம் செய்துகொள்ளவேண்டுமென்று கட்டாயப் படுத்தியதுபோலவும் பேசுகிறாயே! அந்தப்பெண் வேண்டா மென்று சொல்லியிருந்தால் நான் ஏன் இதில் தலையிடுகி றேன்?

குந்தளம்:- எனக்கு என்ன தெரியும்? வேறுயாரோ ஒரு பெண்ணை கல்யாணம் செய்துகொள்ள விரும்பியது போல அத்தான் எழுதியிருப்பதைப் பார்த்ததும் அந்தப் பெண்ணையே முடித்திருக்கப்படாதா என்று கேட்டேன்.

அம்புஜம்:- அவனுக்கு சாந்தா கிறுக்குப் பிடித்திருக் கிறது. அவளுக்குத்தான் ஏற்கெனவே கல்யாணமாகிவிட்ட தாமே! இனிமேல் என்ன செய்யமுடியும்? சாந்தாவுக்குக் கல்யாணமாகிவிட்டபடியால் இனி தான் கல்யாணமே செய்து கொள்ளக்கூடாதென்று தீர்மானித்திருக்கிறான் போலிருக்கி றது. இதுமாதிரிப் பயித்தியக்காரனைப் பார்த்ததேயில்லை. இவ்வளவுக்கும் காரணம் அவனைக் கண்டகதைப்புத்தகங் களை வாசிக்கவும் வாயில் வந்தபடி புத்தகம் எழுதவும் அனு மதித்ததுதான். அதன் பலனை இப்பொழுது அனுபவிக் கிறோம்.

குந்:- சாந்தாவாம் சாந்தா! நல்ல சாந்தா ஒருத்தி வந் தாள்! அத்தானுக்கு யாரோ மருந்து வைத்திருக்கவேண் டும்!

அய்யர் ஒன்றுமே பேசவில்லை. கல்யாணம் ரத்தாகி விட்டதாயும் சுந்தரம் காணமற் போய்விட்டதாயும் இத னால் ஏற்பட்ட அசௌகரியங்களுக்கு வருத்தப்படுவதாயும் மன்னார்குடிக்குப் பாஸ்கரய்யர் ஒரு தந்தியடித்துவிட்டு படுக்கையில்போய் படுத்துக்கொண்டார். இந்த விஷயங்கள் வெகு சீக்கிரத்தில் வெளியேபரவி வேலைக்காரர்களெல்லாம்

குசுகுசுவென்று பேசிக்கொண்டார்கள். அன்று முழுவதும் பாஸ்கரய்யர் வீட்டுக்கே 'சாந்தா பிசாசு' பிடித்தமாதிரி யிருந்தது.

மத்தியானம் ஒன்றரைமணியிருக்கும். அகோரமாக வெயிலடித்தது. அய்யர் படுத்து உறங்கிக்கொண்டிருந் தார். அம்புஜம் கவலையுடன் சங்கரியிடம் பேசிக்கொண்டி டிருந்தாள். முனிசாமி மெதுவாக மாடிக்குவந்து குந்தளத் திடம் ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தான். அதில் பின்வருமாறு எழுதப்பட்டுருந்தது:

அன்புள்ள குந்தளம்,

என்னுடன் இன்னும் சில மணி நேரம்தானே பேசப் போகிறாயென்று நேற்றிரவு நான் சொல்லியபொழுது என் னைக் கேலிசெய்தாய். அது எவ்வளவு பயங்கரமான பரி காசமென்பதை இதற்குள் தெரிந்துகொண்டிருப்பாய். உங் கள் எல்லோரையும் விட்டு பரந்த உலகிலே பரதேசியைப் போலக் கிளம்பிவிடுவதென்று இரண்டு மூன்று வாரங்க ளுக்கு முன்பே தீர்மானித்துவிட்டேன். ஒரு நாள் இரவு வெகுநேரம்வரையில் மாமாவிடம் பேசிவிட்டு வந்தபொழுது 'இவ்வளவுநேரம் என்ன பேசினீர்கள்?' என்று நீ என்னைக் கேட்டது ஞாபகமிருக்கும். அன்றிரவு மனதிலிருப்பதை ஒளிக்காமல் மாமாவிடம் சொன்னேன். அதற்கு மாறாக நடந்தால் எங்கேயாவது தலைமறைவாக நான் போய்விட வேண்டியிருக்குமென்பதையும் அவரிடம் தெளிவாகத் தெரி வித்தேன். ஆகையால் இன்று நான் வீட்டைவிட்டுப் போவது மாமாவுக்குக் கோபத்தைக் கொடுத்தாலும் அவர் எதிர்பாராததாயிருக்காது.

நாம் கிராமத்திலிருந்து ஊருக்குத் திரும்பிய நாள் முதல் நம் வீட்டில் நடக்கும் பேச்சுகளைப்பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது. தெரியாமலே இருக்கவேண்டுமென் பதுதான் என் ஆசையும். நான் திடீரென்று என் வீட்டை விட்டுப் போகவேண்டுமென்பது உனக்கு ஆச்சரியமாயிருக் கும். அதைத் தெரிந்துகொள்ளவோ அல்லது நான் இருக்

குமிடத்தைக் கண்டுபிடிக்கவோ நீ முயற்சி செய்யக்கூடா தென்று கேட்டுக்கொள்ளவே இந்தக் கடிதத்தை எழுதுகி றேன்.

நான் பெரிய துர் அதிர்ஷ்டசாலி. எனக்கு எங்கிருந் தாலும் ஒன்றுதான். என்னிடம் காட்டிய அன்பிற்கெல் லாம் எனது மனப்பூர்வமான நன்றியறிதலை ஏற்றுக்கொள். இந்தக் கடிதத்தை ஒருவருக்கும் தெரியாமல் உன்னிடம் சேர்ப்பித்துவிடும்படி முனிசாமியிடம் சொல்லியிருக்கிறேன். படித்தவுடன் கிழித்தெறிந்துவிடு. போய்வருகிறேன்.

உன் அன்புள்ள அத்தான்
சுந்தரம்.

இப்படிப் படித்து முடிந்ததும் 'இதை உன்னிடம் எப் பொழுது கொடுத்தார்? கொடுத்துவிட்டு எங்கு போவதா கச் சொல்லிவிட்டுப் போனார்?' என்று கேட்டாள் குந்தளம்.

முனிசாமி சிறிது தயங்கினன். பிறகு சொல்ல ஆரம் பித்து 'அவர் எங்குபோனாரென்பது எனக்குத் தெரியாது. போகுமிடத்தை என்னிடம் சொல்லவுமில்லை' என்றான்.

குந்:- கடிதத்தை எப்பொழுது கொடுத்தார்?

முனி:- நேற்றிரவு பிரயாணத்துக்கு மூட்டைகளெல் லாம் கட்டியபிறகு நான் தோட்டத்துக்குப்போய் குடிசை யில் படுத்துக்கொண்டேன். விடியற்காலை இரண்டரை அல் லது மூணுமணியிருக்கும். சின்ன எசமான் வந்து எழுப்பி வெளியே அழைத்துப்போனார். இந்தக்கடிதத்தைக் கொடுத்து 'ஒருவருக்கும் தெரியாமல் காலையில் குந்தளத்திடம் கொடுத் துவிடு. நான் நாலரைமணி வண்டியில் ஊரைவிட்டுப் போகி றேன்!' என்றார்.

'எங்கே போகிறீங்க! ஏன் போகிறீங்க!' என்று கேட் டேன்.

அதற்கு அவர் சொன்னார் 'அடே முனிசாமி, நீ குந் தளத்தின் அம்மா காலத்திலிருந்து இந்த வீட்டிலிருக்கிறாய்.

குந்தளத்தைச் சிறு வயதிலிருந்து நீதான் வளர்த்தாய். ஆகையால் அவளிடம் உனக்குப் பிரியம் உண்டா இல்லையா? பிரியம் உண்டென்ருல் நான் சொல்லுகிறபடிசெய். இதை காலையில் குந்தளத்திடம் கொடுத்துவிடு. எழுதக்கூடாத விஷயம் ஒன்றையும் கடிதத்தில் எழுதிவிடவில்லை. யோசனை செய்யாதே' என்ருர்.

'அது சரிதானுங்க, நீங்க ஏன் போறீங்க? அதை முதலில் சொல்லுங்க! என்று நான் விடாப்பிடியாகக் கேட்டேன்.

அதற்கு அவர் சொன்னுர். 'முனிசாமி! நம்ப குந்தளத்துக்கு வயது 21 ஆகிறது. நல்ல பருவ வயது. அவளுக்கு இப்பொழுது கல்யாணமானுல் எத்தனையோ சந்தோஷமாக இருக்கவேண்டியவள். சிறுவயதிலேயே அவள் தலையில் கல்லைத்தூக்கிப் போட்டுவிட்டார்கள். குந்தளத்தை நினைத்தால் என்மனம் வெடித்துவிடும்போலிருக்கிறது. சமூகத்தையும் தலைவிதியையும் மனதிற்குள் நொந்துகொண்டு குந்தளம் நரகலோகத்திலிருப்பதுபோல மனம் பொங்கிக்கொண்டிருக்கையில் நான்மட்டும் ஒரு கல்யாணம்செய்துகொண்டு இதே வீட்டில் அவள்முன்னிலையில் குடித்தனம் செய்தால் நன்ருயிருக்குமா? நீயே யோசித்துப்பார். வெளியில் சொல்லாவிட்டாலும் அவள் மனம் என்னபாடுபடும்? இதை நான் மாமாவிடம் சொன்னேன். எவர் என்ன சொன்னுலும் ஒன்றையும் லட்சியம் செய்யாமல் குந்தளத்துக்கு மறு கல்யாணம் செய்துவையுங்கள்; பிறகுதான் என் கல்யாணப்பேச்சை எடுக்கவேண்டும் என்று அவரிடம் எவ்வளவோ கண்டிப்பாகச் சொல்லிப்பார்த்தேன். மாமாவுக்கு ஓரளவு இஷ்டம்தான். ஆனுல் சமூகத்தைப் பகைத்துக்கொள்ள தைரியமில்லை. ஆகையால் என் பேச்சு அவர் காதில் ஏறவில்லை' என்று சொன்னுர்.

உடனே நான் கேட்டேன் 'எசமான் இஷ்டப்பட்டாலும் யாராவது ஒ'ரவர் துணிந்து குந்தளம் அம்மாளைக் கட்டிக்கிட முன்வரவேணுமே,'யென்று.

'என் மாமாவுக்கும் என் அம்மாவுக்கும் சம்மதமென்ருல் நானே கல்யாணம் செய்துகொள்ளுகிறேன். குந்தளத்தின் அறிவிற்கும் அழகிற்கும் குணத்துக்கும் அவள் புருஷனுயிருக்க பாக்கியம் செய்திருக்கவேண்டுமே!' என்ருர்.

'இதை எசமானிடமும் சொன்னீங்களா என்று கேட்டேன். சொன்னதாயும் ஆனுல் எசமானுக்கு இஷ்டமில்லையென்றும் சுந்தரம் எசமான் சொன்ஞரு. கடைசியில் சொன்ஞர்:- நான் போவதுதான் குந்தளத்துக்கு நல்லது. அவள் நன்மையை உத்தேசித்து நான் வெளியேறுகிறேன். குந்தளத்தினிடமும் அவள் தாயாரிடமும் உனக்கு உண்மையான விசுவாசமிருந்தால் நான் உன்னிடம் பேசியதைப் பற்றி ஆண்டவனறிய ஒருவரிடமும் ஒன்றும் சொல்லக் கூடாது. குந்தளம் கேட்டால்மட்டும் சொல்லு. அவளிடமும் நீயாக இதைச் சொல்லவேண்டாம். இந்தக் கடிதத்தை ஒருவருக்கும் தெரியாமல் குந்தளத்திடம் கொடுத்துவிடு. நாளைக்காலே என்னைக் காணுமென்று தேடுவார்கள். ஒன்றும் தெரியாதவனைப்போல் நீ நடந்துகொள்ளவேண்டும்' இப்படிச் சொல்லிவிட்டுப் போனுர்.

'இதைப்பற்றி அப்பாவிடமோ அல்லது அத்தையிடமோ ஏதாவது சொன்னுயா?' என்று கவலையுடன் கேட்டாள் குந்தளம்,

'எனக்கு என்ன பயித்தியமா குழந்தை! இது உன் சொந்தவிஷயமில்லை! என் நெஞ்சை அறுத்தாலும் ஒரு வார்த்தை வெளியேவருமா? சுந்தரம் எசமான் சொன்னது ரொம்ப நியாயமாய் இருந்திச்சு. இல்லாவிட்டால் இந்தக் கடுதாசியைக்கூட வாங்கியிருக்கமாட்டேன். பாவம்! நல்ல மனுஷன்!' என்று அனுதாபப்பட்டான் முனிசாமி.

'ஆமாம்! நல்ல மனஸு!' என்று குந்தளமும் ஆமோதித்தாள். சிறிது நேரத்துக்குப்பின் "இந்த விஷயங்களெல்லாம் உன் மனதுக்குள்ளேயே இருக்கட்டும் முனிசாமி" என்று சொல்லியனுப்பினுள்.

பிறகு உட்கார்ந்து வஸுமதிக்கு ஒரு விரிவான கடிதம் எழுதினாள். கடிதத்தில் ஒரு இடத்திலே 'வஸு நீ நினைத் தது மட்டுமல்ல, நான் நினைத்ததும் சுத்தத் தவறாகிவிட்டது. நிஷ்களங்கமான ஒரு மனிதருக்கு கெட்ட எண்ணங்களை நாம் கற்பித்துவந்திருக்கிறோம்' என்று எழுதியபொழுது குந்தளத்தின் கண்களிலிருந்து ஒருசொட்டு ஜலம் காகிதத் தின்மீது விழுந்து எழுத்தை அழித்தது!

திருச்சியிலிருந்து புறப்பட்ட சுந்தரம் நேராக மது ரைக்கு வந்துசேர்ந்தான். அவனுடன் பி. ஏ. வகுப்பில் சேர்ந்து படித்த மோஹன் மதுரை மாடவீதியில் எங்கோ இருக்கிறானென்பது அவனுக்குத்தெரியும். மோகன் தகப் பனார் ஒரு வைரவியாபாரி. எல்லோரையும்போல தன் பெயருக்குப்பின்னாலும் இரண்டு எழுத்தாவது இருக்கவேண் டுமென்பதற்காக காலேஜில் படித்தான் மோஹன். பி. ஏ. பரீட்சையில் மூன்றாவது வகுப்பில் தேறினான். எந்த வகுப்பானாலும் அவன் எண்ணம் ஈடேறிவிட்டது. எஸ். மோஹன் பி. ஏ. என்று லெட்டர் பேப்பர்களும் கவர்க ளும் விஸிட்டிங்கார்டுகளும் அச்சடித்துக்கொண்டு ஊரோடு ஊராகத்திரும்பி பரம்பரை வியாபாரத்தில் சிரத்தை செலுத்த ஆரம்பித்தான்.

காலேஜ் வாழ்க்கையில் அவனுக்கு நெருங்கிய நண்பன் சுந்தரம். சுந்தரத்தின் உதவியில்லாவிட்டால் மூன்றாவது வகுப்பில்கூட பி. ஏ. பாஸ்செய்திருக்க முடியாதென்பது மோஹனுக்குத்தெரியும். இதேபோல மோஹனுக்கும் சுந்த ரம் ஒருவகையில் கடமைப்பட்டிருக்கிறான். சுந்தரத்தின் கதை கட்டுரைகளை வானளாவிப்புகழ்ந்து மேலும் எழுத அவனை உத்சாகப்படுத்திவந்தது மோஹன்தான்.

ஒரு சமயம் குந்தளம் சொல்லியதைப்போல பெரும் பாலான எழுத்தாளர்களுக்கு ஓரிரண்டு கதை எழுதி நாலு பேர் புகழவும் ஆரம்பித்துவிட்டால் தலைதெரியாமல் போய் விடுவது இயற்கை. நாம் இல்லாவிட்டால் தமிழ் இலக்கி யமே நசித்து நாசமாய்போய்விடுமென்ற எண்ணம்கூட ஏற்

பட்டுவிடுகின்றது. இன்னொரு கோஷ்டியினர் இருக்கிறார்கள்; அவர்கள் அபாரமான எழுத்துவன்மையுடையவர்களாயிருந்தும் அவர்களுடைய சக்தியும் திறமையும் அவர்களுக்குத் தெரிவதில்லை. பிறருடைய புகழ்ச்சியும் இகழ்ச்சியும் அவர்களைப் பாதிப்பதில்லை. பக்கத்திலிருந்து எவராவது தூண்டிக்கொண்டேயிருந்தாலொழிய எழுதும் சிரத்தையும் இவர்களுக்கு ஏற்படுவதில்லை. இந்த இரண்டாவது கோஷ்டியைச் சேர்ந்தவன் சுந்தரம். அவனுக்கு தமிழ் இலக்கிய நூல்களில் ஒரு ஆசையும் புதிய நவீனங்களை எழுதுவதில் ஒரு சிரத்தையையும் கிளப்பிவிட்டது மோஹன்தான்.

மதுரையை அடைந்ததும் மோகன்வீட்டைக் கண்டுபிடிக்க சுந்தரத்துக்கு அதிகநேரம் பிடிக்கவில்லை. மோஹனுக்குக் கல்யாணம் நடந்து இரண்டுமாதங்கள்தானிருக்கும். அவன் மனைவியுடன் வீட்டின் முன்புறப் பூங்காவனத்திலே சிரித்துச் சிரித்துப் பேசிச் சீட்டாடிக்கொண்டிருக்கையில் அங்குவந்துசேர்ந்தான் சுந்தரம். அவன் தூரத்தில் வருவதை மோஹன்மனைவி முதலில் பார்த்தாள். வியாபார விஷயமாக யாரோ வருகிறார்களென்று நினைத்து சும்மா இருந்துவிட்டாள். பின்புறமாக வந்தவனை மோகன் கவனிக்கவில்லை. சுந்தரம் அருகில்வந்து 'மிஸ்டர் மோகன் இருக்கிறாரா?' என்று கேட்டபொழுதுதான் சுந்தரத்தை மோஹன் திரும்பிப்பார்த்தான்.

"ஐயையோ! சுந்தரமில்லையா! ஏன் இப்படி பெட்டியைத் தூக்கிக்கொண்டு நடந்து வருகிறாய்? ஒரு கார்ட்டு போட்டிருந்தால் ஸ்டேஷனுக்கு நானே கார் கொண்டுவந்திருக்க மாட்டேனா?' என்று சந்தோஷ மிகுதியால் தன் நண்பனைக் கட்டிக்கொண்டான் மோகன். வந்த மனிதர் வியாபாரியல்ல, தனது கணவரின் பால்ய நண்பரென்பது தெரிந்ததும் மோகன் மனைவி வெட்கத்துடன் உள்ளே ஓடிவிட்டாள்.

'மோஹன்! உன்னுடைய உதவியை நாடிவந்திருக்கிறேன். நான்கைந்துநாள் தங்கியிருக்க எனக்கு இடமளிக்க வேண்டும்!' என்றான் சுந்தரம்.

'நான்கைந்துநாளா? அதற்குள் உன்னை யார் விடப் போகிருர்கள்? நான்கைந்து வருஷம் வேண்டுமானுலும் என் னுடனேயே இரு! வா உள்ளே போவோம்! காப்பி சாப் பிட்டுவிட்டுப் பிறகு பேசலாம்!' என்றுசொல்லி வீட்டுக் குள் சுந்தரத்தை அழைத்துக்கொண்டு போனுன் மோஹன்.

வராந்தாவில் உட்கார்ந்திருந்த மோஹன் தகப்பனுர் 'இந்தப் பையன் யாரப்பா! எங்கேயோ பார்த்தமாதிரி யிருக்கே!' என்று விசாரித்தார்.

'நானும் இவனும் சேர்ந்திருக்கும் போட்டோவில் பார்த்திருப்பீர்கள் அப்பா. இவன்தான் மறுமலர்ச்சி எழுத் தாளன் சுந்தரம்! என் கிளாஸ்மேட்! இப்பொழுது பிரபல நாவலாசிரியராகிவிட்டான்' என்று தகப்பனுருக்கு நண் பனை அறிமுகப்படுத்திவைத்தான் மோஹன்.

'அடிக்கடி சுந்தரம், சுந்தரம் என்பாயே அந்தப் பையன் இவன்தானு? நான்கூட வாசித்திருக்கிறேன் சுந்தரம் உன் புத்தகங்களை! நன்ருக எழுதியிருக்கிருய்! அதேமாதிரி சரஸ் வதி எப்பொழுதும் உன் நாக்கில் இருக்கவேண்டும்!' என்று மரியாதைக்கு சில வார்த்தைகள் சொன்னுர் மோஹன் தகப்பனுர். சுந்தரம் மோஹனுடன் அவனுடைய அறைக் குப்போய் சட்டைகளைக் கழட்டிவிட்டு கைகால் கழுவி காப்பி குடித்தான். காலேஜ் படிப்பை முடித்துக்கொண்டு ஊர் திரும்பியதையும் தகப்பனுருக்கு வயதாகிவிட்டபடி யால் வியாபாரத்தைத்தானே நேரில் கவனித்து வருவதை யும் இரண்டு மாதங்களுக்கு முன் தனக்குக் கல்யாணம் நடந்ததையும் சவிஸ்தாரமாகச் சொன்னுன் மோஹன்.

'நீ வரும்பொழுது என்னுடனிருந்தாளே அவள்தான் என் மனைவி. காலேஜில்சேர்ந்து படிக்காவிட்டாலும் நல்ல அறிவாளி. என்னைப்போலவே அவளுக்கும் தமிழ் இலக் கியங்களென்ருல் உயிர்! தெய்வ சங்கல்பத்தினுல் மன வேறுபாடில்லாமல் எனக்குச் சகலவிதத்திலும் பிடித்த மனைவி கிடைத்தாளப்பா! அதுகிடக்கட்டும்! உன் விஷய

மென்ன? கல்யாணம் செய்துகொண்டாயா இல்லையா? என்று கேட்டான் மோஹன்.

சுந்தரம்:- நாளை பொழுதுவிடிந்தால் கல்யாணம் நடக்க வேண்டும்!

மோஹன்:- சபாஷ் அப்படிச்சொல்லுங்கோ புது மாப்பிள்ளை ஸார்! மதுரையில்தான் கல்யாணமா? நான் நினைத்தேன் எழுதாமல் சொல்லாமல் திடீரென்று இப்படி மதுரையில்வந்து குதித்தவுடன்! அம்மா மாமா எல்லோரும் எந்தத் தெருவில் இறங்கியிருக்கா?

சுந்:- 'கல்யாணம் மதுரையிலில்லையப்பா! மன்னார்குடியில்!' என்றான் ஒரு கோரப்புன்னகையுடன்.

மோஹ:- மன்னார்குடியில் விடிந்தால் கல்யாணமென்கிறாய். இப்பொழுது மதுரைக்கு வந்திருக்கிறாய்! எனக்கு ஒன்றும் புரியவில்லையே சுந்தரம்!

சுந்தரம் தன் வரலாற்றை விபரமாக எடுத்துச்சொன்னான். 'மேற்கொண்டு என்ன செய்வதென்று தோன்றவில்லை. ஊரைவிட்டு எங்கே போவதென்று யோசித்தபொழுது உன் ஞாபகம் வந்தது. உடனே மதுரைக்கு டிக்கெட் வாங்கிக்கொண்டு கிளம்பினேன்! பாக்கி விஷயங்களை இனிமேல்தான் யோசிக்கவேண்டும்!' என்று முடித்தான்.

'வேறு எங்கும் போய்விடாமல் என்னிடம் வந்தாயே அந்தமட்டும் சந்தோஷம். மனதை அலட்டிக்கொள்ளாமல் வாயை மூடிக்கொண்டு நிம்மதியாயிரு! என்ன செய்யவேண்டுமென்று பிறகு நான் சொல்லுகிறேன். இதோபார், சுந்தரம்! உன் அம்மாவையும் மாமாவையும் ஏமாற்றிவிட்டு வந்த மாதிரி என்னிடமும் சொல்லிக்கொள்ளாமல் திடீரென்று கிளம்பிவிடக்கூடாது! தெரியுமா? கொஞ்சம் சந்தேகத்துக்கு இடம் கொடுத்தாயோ உன்னைச்சுற்றி காவல் வைத்துவிடுவேன்!' என்று வழக்கமான அன்புடன் மோஹன் சொல்லியது புண்பட்ட சுந்தரத்தின் மனதிற்கு மிகுந்த ஆறுதலளித்தது.

இரண்டு தினங்களுக்குப்பிறகு மோகனிடம் கேட்டான் சுந்தரம் 'உன்சிற்றப்பா ஒருவர் இலங்கையிலிருப்பதாக எப்பொழுதோ நீ சொன்ன ஞாபகம். அவர் இன்னமும் கொழும்பில்தான் இருக்கிறாரா' என்று.

மோஹன்:- ஆமாம், ஏன் ?

சுந்:- அங்கு என்ன செய்கிறார் ?

மோஹன்:- ஒரு பெரிய அச்சாபீஸ் வைத்திருக்கிறார். தேவாஸ் பிரிண்டிங் ஒர்க்ஸ் என்றால் இலங்கையில் ரொம்ப பிரசித்தம். நாற்பது வருஷங்களுக்கு முன்னால் ஒரு செட்டி வீட்டுக் கணக்குப்பிள்ளையாக அவர் இலங்கைக்குப் போனாராம். இப்பொழுது ரொக்கமாக பத்துலட்சம் ரூபாய் சம்பாதித்துவிட்டார். அச்சாபீஸ்தவிர அவருக்கு இரண்டு பெரிய ஷாப்புக்கடைகளும், ரத்னபுரியில் ஒரு ரத்தினச் சுரங்கமும் இருக்கிறது. அவரிடமிருந்துதான் என் கடைக்கு நீலமும் முத்துக்களும் வருகின்றன. அவரைப்பற்றி இப்பொழுது என்ன ?

சுந்:- அவருக்கும் உனக்கும் விரோதம் ஒன்றுமில்லையே?

மோஹன்:- சிற்றப்பாவுடன் என்னப்பா விரோதம்? அவர் அப்படி கர்வம்பிடித்தவரில்லை. இரண்டு மாதத்துக்கு முன் என் கல்யாணத்துக்கு வந்தபொழுது ஒருதடவை இலங்கைக்கு வரவேண்டுமென்று சொல்லிவிட்டுப்போனார். கொழும்பைப்பற்றி வர்ணித்தார் வர்ணித்தார் அப்படி வர்ணித்தார். குபேரப்பட்டினமென்றால் அதுதான் குபேரப்பட்டினமாம். ரூபாய் நோட்டுக்கு அங்கு மதிப்பேயில்லையாம். ரிக்ஷா இழுப்பவன்கூட தினசரி ஏழெட்டு ரூபாய் சம்பாதிக்கிறானென்றால் பார்த்துக்கொள்ளேன்! இதெல்லாவற்றையும்விட இலங்கைப் பெண்களைப்பற்றி அவர் சொல்லியதுதான் எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

சுந்:- அப்படி என்ன சொன்னார் ?

மோஹ:- நகரங்களிலுள்ள பெண்களில் பெரும்பாலோர் காலேஜ்களில் படித்தவர்களாகவேயிருப்பார்களாம். ஆண் பெண் என்ற வேற்றுமையே இல்லாமல் சமூகத்தில் வெகு சகஜமாகப் பழகுவார்களாம். ஆங்கிலம் அவர்களுக்கு தண்ணீர் மாதிரி. யாழ்ப்பாணத்தவருக்கு தமிழ் தாய்ப்பாஷை. தமிழ்ப் பெரியார் நாவலர் பிறந்த புண்ணிய பூமி ஈழநாடு. அந்தநாட்டில் கொஞ்சம் பணக்காரர்களாயிருக்கும் ஒரு நண்பருடைய வீட்டுக்குப் போய்விட்டால் பிறந்த குழந்தைகள்முதல் கிழடுகள்வரையில் ஆங்கிலம் பேசுவதைத்தான் கேட்க முடியுமேதவிர நாம் தமிழ் பேசினாலும் அவர்களுக்கு விளங்காதாம். சிங்களவர்களின் விஷயமும் இதேமாதிரித்தான். கோட், ஸூட், கவுன் போட்டுக்கொண்டு தாய்ப் பாஷை தெரியாதவனைப்போல ஆங்கிலத்தில் பேசினால்தான் அங்கு மதிப்பு. என் சிற்றப்பாவின் சிநேகிதர் ஒருவருடைய பெண் ரஜாவை மதுரையில் கழிக்க வந்திருக்கிறாள். அவளைப் பார்த்தால் போதும் இலங்கையின் நாகரீகப் போக்கை படம் பிடித்தமாதிரி இருக்கும்!

சுந்:- இல்லை! நான் இலங்கைக்குப்போய் கொஞ்ச காலம் இருக்கலாமென்று நினைக்கிறேன்.

மோஹன்:- அங்குபோய் என்னசெய்ய உத்தேசம்?

சுந்:- போனபிறகு யோசித்துக்கொள்வது. எனக்கு ஒரு வேலை கிடைக்காதென்று நினைக்கிறாய்?

மோஹன்:- அப்படியொன்றுமில்லை சுந்தரம்! வேண்டுமானால் என் அப்பாவிடமிருந்து ஒரு கடிதம் வாங்கிக் கொடுக்கிறேன். இலங்கையில் என் சிற்றப்பா வீட்டிலேயே தங்கியிருந்துகொண்டு வேலைதேட சௌகர்யமாயிருக்கும். உனக்கு இஷ்டமானால் என் சிற்றப்பா அச்சாபீஸிலேயே இருந்துவிடலாம்.

சுந்:- உன் சிற்றப்பாவுக்கு ஒரு கடிதம் வாங்கிக்கொடு. ரொம்ப உதவியாயிருக்கும்.

இந்த சம்பாஷணை நடந்த மறுநாள் வண்டியிலே சுந்தரம் இலங்கைக்குப் புறப்பட்டுவிட்டான்.

## 10. மண்டபம் நரகம்

மண்டபம் கியாம்புக்கு வரும்வரையில் நாம் ஒரு அந்நிய தேசத்துக்குப் போகிறோமென்ற எண்ணம் அவனுக்குச் சிறிதுமில்லை. மண்டபத்தில் நடந்த தடபுடல்களையெல்லாம் பார்த்தபிறகுதான் இலங்கைக்குப் போவதென்றால் இவ்வளவு தொல்லைகளா என்று நினைத்து அவன் அயர்ந்து போனான்.

இந்தோ-சிலோன் மெயில் மண்டபம் கியாம்பில் வந்து நின்றவுடன் 'இலங்கைக்குப் போகிறவர்களெல்லாம் கீழே இறங்கலாம்!' என்று டவாலிபோட்டுக்கொண்டு ஒரு பியோன் கத்தினான். அதைக்கேட்டதும் சுந்தரம் தன் பெட்டி படுக்கைகளை எடுத்துக்கொண்டு கீழே இறங்க ஆரம்பித்தான்.

'நீங்கள் ஏன்ஸார் பெட்டியுடன் இறங்குகிறீர்கள்?' என்று கேட்டார் பக்கத்திலிருந்த ஒரு சகாபிரயாணி.

சுந்தரம்:- அதோ ஒரு பியோன் இறங்கவேண்டுமென்று கத்துகிறானே?'

பிரயாணி:- முதலாவது இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்கில்லை. மூன்றாவது வகுப்புப் பிரயாணிகள் மாத்திரம்தான் பெட்டி படுக்கைகளுடன் இறங்கி மண்டபம் கியாம்புக்குப்போய் பலவகையான அவஸ்தைகளுக்கு உட்பட்டுவிட்டு பிறகு பிரயாணத்தைத் தொடங்கவேண்டும்.

சுந்தரம்:- நாம் என்ன செய்யவேண்டுமோ?

பிரயாணி:- அதோ உட்கார்ந்திருக்கிறாரே, அந்த இலங்கை வைத்திய அதிகாரியிடம் போய் குவாரன்ண்டைன் பாஸைக்காட்டி 'பாஸ்' பண்ணிக்கொண்டு வரவேண்டும். அவ்வளவுதான். கியாம்புக்கு நாம் போகவேண்டியதில்லை.

சுந்தரம்:- அதேன் அப்படி ?

பிரயாணி:— இது இலங்கை ராஜாங்கத்தின் சட்டம். இந்தியாவிலிருந்து மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளின் மூலமாகத்தான் இலங்கைக்கு வியாதிகளெல்லாம் வருகிறதாம். இலங்கையில் எவ்வளவோ விசித்திரமான வியாதிகள் இருக்கின்றன. அதெல்லாம் ராஜாங்கத்தின் கண்களுக்குத் தெரியவில்லை. யாருக்காவது அம்மை போட்டினுல் அது எப்படி யார்மூலமாக வந்தது என்று தீவிரமாக ஆராய்ந்து கடைசியில் இந்தியாவிலிருந்து வந்த ஒரு பிரயாணியின் மூலமாகத்தான் வந்ததென்று முடிவுகட்டி விடுவார்கள். இந்தியா முழுவதும் தொத்துநோயாளர்கள் நிறைந்த தேசத்தைப்போல இலங்கை ராஜாங்கம் கருதிக் காரியங்களைச் செய்வது இந்தியாவுக்கே வெட்கமாயில்லையா பாருங்களேன்! இந்தியாவுக்குமட்டும் ரோஷமிருந்தால் முன்னெரு சமயம் ராஜாஜி சொல்லியதைப்போல மண்டபம் கியாம்ப் இந்திய மண்ணில் இருப்பதை இந்திய அரசாங்கம் ஒரு நிமிடமாவது அனுமதிக்குமா?

சுந்தரம்:- இந்திய அரசாங்கம் என்னசெய்யவேண்டுமென்பது இருக்கட்டும். இலங்கை அரசாங்கம் மண்டபத்தில் என்ன செய்கிறதென்பதை முதலில் சொல்லுங்கள்.

பிரயாணி:- சொல்லுவதா? அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறீர்கள்! இரண்டுமுறை மூன்ருவது வகுப்பில் வந்து அவஸ்தைப்பட்டு இனி எவ்வளவு கஷ்டமிருந்தாலும் மூன்ருவது வகுப்பில் பிரயாணம் செய்வதில்லையென்று சங்கல்பம் செய்துகொண்டு இரண்டாவது வகுப்பில் பிரயாணம் செய்கிறேன். மூன்ருவது வகுப்புப் பிரயாணிகள் கீழே இறங்கி கியாம்புக்குப் போய் விடவேண்டும். மறுநாள் காலை அவர்களுடைய உடுபுடவைகளையெல்லாம் கொண்டுபோய் கியாவில் போட்டு அவித்துக்கொடுப்பார்கள். பிரயாணிகள் உப்புத்தண்ணீர்க் குழாயில் குளித்து சர்க்கார் கொடுக்கும் இரண்டுகஜத் துண்டை உடுத்துக்கொண்டு வரிசையாக நிற்கவேண்டும். அவர்கள் கொஞ்சம் வரிசை தவறி நின்றுவிட்டால் கியாம்பிலிருக்கும் பியோன்மார்கள் போடும் சப்தத்தைப் பார்க்கவேண்டுமே! முப்பது நாற்பது ரூபாய் சம்ப

ளம்பெற்று கைகட்டிச் சேவகம்செய்யும் பியோன்மார்கள் பெரிய முதலாளிமார்களேயும் யாரென்று பாராமல், லட்சியம் செய்யாமல் 'அடே, வாடா போடா, நில்லுடா!' என்று ஏக வசனத்தில் பேசுவதைக் கேட்டால் பிரயாணிகளுக்கு ரத்தம் கொதிக்கும். இருந்தாலும் என்ன செய்ய? இலங்கைப் பிரயாணம் தடைப்பட்டு விடக்கூடாதேயென்பதற்காக இவ்வளவு அவமரியாதையையும் பிரயாணிகள் பொறுத்துக்கொள்ளவேண்டியிருக்கிறது. கியாம்பில் பிரயாணிகளின் சாப்பாட்டுக்காக கைநிறையக் காசுவாங்கிக் கொள்ளுகிறார்கள். ஆனல், படைபடைக்கும் வெய்யிலில் நல்ல உச்சி வேளேயில் பசி காதை அடைக்கும்பொழுது பிரயாணிகளுக்குக் கொடுக்கும் சாப்பாட்டின் கண்றாவியை வாயினல் வர்ணிக்க முடியாது. படைக்கும் சோறு விறைத்து குச்சிமாதிரியிருக்கும். அதற்கு ஊற்றும் சாம்பாரையும் துவையலேயும் பார்த்தாலே இல்லாத வியாதிகளெல்லாம் பிரயாணிகளிடம் வந்து ஒட்டிக்கொள்ளும். இந்த லட்சணத்தில்தான் பிரயாணிகளிடமுள்ள நோய்க் கிருமிகளே உப்புத்தண்ணீரில் குளிக்கவைத்து அம்மைப்பால் குத்தி உடுப்புகளேயும் அவித்து ஆளேச் சுத்தப்படுத்தி அனுப்புகிறார்களாம். இவ்வளவும் முடிந்தபின் பிரயாணிகள் பாதுகாப்பு முகாம்களுக்கு கைதிகள் அனுப்பப்படுவதுபோல் மூன்றாவது வகுப்பு வண்டிகளில் ஏற்றி வண்டிகளின் கதவுகளே இருபுறமும் பூட்டி போலிஸ் காவலுடன் தனுஷ்கோடி துறைமுகத்துக்கு அனுப்புகிறார்கள்.

சுந்தரம்:- இதெல்லாம் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு இல்லேயா?

பிரயாணி:- கிடையாது. நாம் கீழே இறங்கிப்போய் இலங்கை டாக்டரிடம் கைகாட்டவேண்டும். பிறகு இந்திய இமிகிரேஷன் அதிகாரியிடம் ஒப்பம் வாங்கிக்கொண்டு வரவேண்டும்.

சுந்தரம்:- இலங்கைக்குப் போகிறவர்களே இலங்கை அரசாங்கம்தான் சோதிக்கிறதென்றல் இந்திய சர்க்காரும் ஏன் சோதிக்கிறார்கள்?

பிரயாணி:- அது இன்னும் பெரிய கதை. கொஞ்ச காலத்துக்குமுன் இலங்கை அரசாங்கம் தனது சேவையிலிருந்த தினச்சம்பள இந்தியத்தொழிலாளரையெல்லாம் டிஸ்மிஸ் செய்து நாடுகடத்தியது. அப்படிச்செய்யக்கூடாதென்று இலங்கையுடன் ராஜிபேச பண்டித நேரு இலங்கைக்கு வந்தார். இரவு பகலாக இலங்கைத் தலைவர்களிடம் எவ்வளவோ வாதாடிப்பார்த்தார். ஆனால், இலங்கை அரசாங்கம் தனது பிடிவாதத்திலிருந்து சிறிதும் விட்டுக்கொடுப்பதாயில்லை. அதன்மீது சரீரஉழைப்புத் தொழிலாளர் இலங்கைக்குப் புதிதாகப் போவதை உடனே தடைசெய்யவேண்டுமென்று பண்டிதநேரு இந்தியா திரும்பியதும் இந்திய அரசாங்கத்துக்கு யோசனை கூறினார். அவருடைய யோசனையை இந்திய அரசாங்கமும் ஒப்புக்கொண்டு சரீர உழைப்புத் தொழிலாளர் எவரும் இனி இலங்கைக்குப் போகக்கூடாதென்று தடை விதித்தது. அந்தத் தடை உத்தரவை அமுல் நடத்தவே இந்திய எமிகிரேஷன் அதிகாரியென்று ஒருவரை இந்திய அரசாங்கம் மண்டபம் கியாம்பில் நியமித்திருக்கிறது. சரீர உழைப்புத் தொழிலாளர் யாரும் புதிதாக இலங்கைக்குப் போகாதபடி பார்த்துக்கொள்ளுவது அவருடைய பொறுப்பு. இதைத் தள்ளுங்கள், அவர் என்னவோ பாவம், ஆட்களுடைய முகத்தையும் தஸ்தாவேஜுகளையும் பார்த்துவிட்டு 'சரி போ' என்று பாஸ்செய்து அனுப்புகிறார். ஆனால், அவருக்கும் 'டிமிக்கி' கொடுத்துவிட்டுப் போகும் பேர்வழிகள் எவ்வளவுபேர்கள் இருக்கிறார்கள்?

சுந்தரம்:- ஆமாம், முதல் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகள் மூலம் இலங்கையில் நோய் பரவாதென்பது இலங்கை அரசாங்கத்தின் எண்ணமா?

பிரயாணி:- 'அதோ பாருங்களேன்! அந்த வீட்டிலிருக்கும் பிரயாணியின் உடுப்பைத் தொட்டாலே பிளேக் ஒட்டிக்கொள்ளும்போலிருக்கிறது. இருந்தாலும் அவர் இரண்டாவது வகுப்புப் பிரயாணி. அவரை யாரும் தடை செய்யமாட்டார்கள். மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளினால் மட்டும்தான் நோய் பரவுமென்று நினைத்து அவர்களை

மறித்துவைத்து அனுப்புவது அர்த்தமற்றது. முட்டாள் தனமும்கூட. சுருக்கமாகச் சொல்லப்போனால் அது ஏழ்மைக்கு விதிக்கும் ஒரு தண்டனை!' என்று ஒரு சிறிய பிரசங்கம் செய்தார் பக்கத்திலிருந்தவர். பிறகு 'வாருங்கள் குவாரண்டைன் பர்மிட்டைக்காட்டி பாஸ்செய்துகொண்டு வருவோம்! என்று சொல்லி அவர் எழுந்தார்.

'என்னிடம் பர்மிட் இல்லையே! பர்மிட் இல்லாமல் இலங்கைக்குப் போகமுடியாதா?' என்று கவலையுடன் கேட்டான் சுந்தரம். அவன் முகத்தில் கவலை பிரதிபலித்தது. மண்டபம் முகாமை அடைந்தவுடனேயே இலங்கைக்கு வந்து சேர்ந்துவிட்டதையும் ஒரு பெரிய வேலைபார்த்து அமர்ந்துவிட்டதையும்போல அவன் கனவு கண்டுகொண்டிருந்தான். குவாரன்டைன் பாஸ் இல்லையா என்று சகா பிரயாணி கேட்டது சுந்தரத்தின் கனவைக் கொடூரமாகச் சிதைத்துவிட்டது.

சுந்தரம் இலங்கைக்கு வந்தசமயம் இலங்கையில் சேனநாயகா அரசாங்கம் அதிகாரத்திலில்லை. குடியேற்ற வெளியேற்றச் சட்டமோ அல்லது அவ்வித சட்டமொன்றைக் கொண்டுவரும் உத்தேசமோ இலங்கை அரசாங்கத்துக்கு அப்பொழுது கிடையாது. இந்தியத்தொழிலாளரையும் பணம்படைத்த இந்திய முதலாளிகளையும் வெற்றிலை பாக்கு வைத்து வா, வா என்று அழைத்தகாலம் அது. மண்டபத்தில் அப்பொழுது இலங்கை அரசாங்க இமிகிரேஷன் அதிகாரியில்லை. இலங்கையில் குறைந்தது ஐந்து வருட காலம் வசித்ததை தஸ்தாவேஜு பூர்வமாக ருசுப்படுத்தினால்தான் இலங்கைக்குப் போகவிடுவேனென்று மண்டபத்தில் யாரும் அப்பொழுது மறிக்கவில்லை. இதற்கு மாறாக இந்தியர்கள் இலங்கைக்குவந்து காடுகளாகவும் மேடுகளாகவும் கிடந்த இடங்களை வளம்மிகுந்த தோட்டங்களாக்க அரசாங்கம் மட்டுமல்லாமல் பொதுஜனங்களும் ஊக்கமளித்த காலம் அது.

இவ்விதம் இந்தியர்களை இலங்கைக்கு வருமாறு அந்தக் காலத்திலிருந்த பிரிட்டிஷ் ஆட்சியே அழைத்ததென்

றும் அதற்கு தற்போதைய அரசாங்கம் ஜவாப்தாரியல்ல வென்றும் சிலர் விவாதிக்கலாம். ஆனல் பிரிட்டிஷ் ஆட்சி அன்று இந்தியர்களை வருந்தியழைத்தபொழுது அதை இலங்கையர்கள் ஆட்சேபித்ததாகவோ அல்லது எதிர்த்த தாகவோ சரித்திரத்தில் எவ்வித ஆதாரங்களையும் காணோம்.

நிற்க, குவாரன்டைன்பாஸ் இல்லாவிட்டால் இலங்கைக்குப்போக முடியாதா என்று சுந்தரம் கவலையுடன் கேட்கவும் 'இல்லையா? பாதகமில்லை. ஜாமீனுக்கு 25 ரூபாய் கட்டினல்போதும். ஆமாம், இலங்கையில் நீங்கள் எந்த ஊருக்குப் போகிறீர்கள்? யார் வீட்டுக்குப் போகிறீர்கள்?' என்று விசாரித்தார் சகாபிரயாணி.

'தேவாஸ் பிரிண்டிங் வொர்க்ஸ் முதலாளி சோமநாதர் வீட்டுக்குப்போகிறேன். கொழும்பில் எங்கோ வெள்ளவத்தையிலிருக்கிருராம்!' என்ருன் சுந்தரம்.

'சோமநாதர் வீட்டுக்கா! பிறகு ஏன் அய்யா கவலை? அவர் பெயரைச் சொன்னலே டாக்டர் பாஸ்செய்து விடுவார்! வாருங்கள்!' என்று சொல்லி அந்தப் பிரயாணி சுந்தரத்தை குவாரன்டைன் டாக்டரிடம் கைகாட்ட அழைத்துச்சென்ருர்.

அந்தப் பிரயாணி சொல்லியதில் தவறில்லை. சோமநாதர் பெயரைச் சொன்னவுடன் சுந்தரத்துக்கு டாக்டரே ஒரு பாஸ் எழுதிக்கொடுத்து 'அய்யாவை நான் ரொம்ப விசாரித்ததாகச் சொல்லுங்கள்!' என்று அன்புடன் சேதியும் சொல்லியனுப்பினர். சுந்தரத்திடம் அம்மை குத்திக்கொண்ட சர்டிபிகேட் இல்லை. அதையும் பொருட்படுத்தாமல் கொழும்புக்குப் போனபிறகு அங்கு அம்மை குத்திக்கொள்ள சுந்தரம் அனுமதிக்கப்பட்டான்.

கப்பல் பிரயாணம் சுந்தரத்துக்குப் புதிது. ஆகையால் பாக்ஸ்ஜலந்தியைத் தாண்டும்பொழுது கொஞ்சம் கிறுகிறுப்பாயிருந்தது. மேல்தளத்தில் பேசாமல் படுத்துக்கொண்டான். தலைமன்னரை அடைந்ததும் கப்பலிலிருந்து இறங்கி

இரண்டாவது வகுப்பு வண்டியில் ஏறிக்கொண்டான். அந்நியநாட்டில் கால் எடுத்து வைத்துவிட்டோமென்ற உணர்ச்சி அவன் உள்ளத்தில் வீசிய பெரும் புயலை அமைதியடையச் செய்ததைப்போலிருந்தது.

'என்னைப்பிடித்த சனியன் தனுஷ்கோடிக் கரையுடன் தீர்ந்துவிடட்டும். துறவியைப்போல ஏகாங்கியாகப் புதிய வாழ்க்கையை ஆரம்பிக்கிறேன். துர் அதிர்ஷ்டம் பிடித்த அந்த நாட்டையும் விதவைகளின் சாபத்திலே வெந்து மறைந்துகொண்டிருக்கும் அந்த பிராமண சமூகத்தையும் இனிக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. சுதேசம் திரும்பினால் குந்தளத்தின் திருமணத்துக்குப்போவது; இல்லாவிடில் மரண தேவதையை இலங்கையிலேயே வரவேற்பது; என்று சுந்தரம் தனக்குள் சபதம் செய்துகொண்டபொழுது அருகில் 'சோ! சோ!' என்று மோதும் அலைகள் அவனை ஆமோதிப்பதுபோலிருந்தன.

அன்று ரயிலில் ஏராளமான கூட்டம். இலங்கை ரயில் சம்பந்தப்பட்டவரையில் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளின் நிலைமை மூன்றும் வகுப்பைவிட மோசமானது. மண்டபத்தில் தாமதிக்காமலிருக்க வேண்டுமென்பதற்காக பெரும்பாலானவர்கள் இரண்டாவது வகுப்பு டிக்கட் எடுத்துவிடுவது வழக்கம். இலங்கை ரயிலிலோ இரண்டாவது வகுப்புப்பெட்டி இரண்டு மூன்றுதானிருக்கும். முன்னதாகவே 'பெர்த்' (உறங்கும் வசதியுடைய வண்டி) பதிவு செய்துகொண்டவர்கள் வசதியாகப் பிரயாணம் செய்யலாம். மற்றவர்கள் புளிமூட்டைமாதிரி அடைந்து ஒருவர் சுவாசத்தை மற்றொருவர் சுவாசித்துக்கொண்டும் இரவு விழித்துக்கொண்டும் நேரத்தைக்கழிப்பதைத்தவிரவேறுவழியில்லை. இலங்கை அரசாங்கத்துக்கு இந்த நிலைமை தெரிந்திருந்தும் இதைக்கவனிப்பதில்லை. தலைமன்னார் ரயிலில் பிரயாணம் செய்பவர்கள் பெரும்பாலும் இந்தியர்கள்தானே என்று நினைக்கிறது இந்தியர்களை மனிதப்பிறவிகளாக மதிக்காத இந்த இலங்கை ராஜாங்கம்.

கப்பலைவிட்டு முதலில் இறங்கியதால் சுந்தரத்துக்கு சௌகரியமான இடம் கிடைத்தது. பிறர் தொந்தரவில்லாமலிருக்க ஒரு மூலை ஸீட்டில் உட்கார்ந்து பக்கத்தில் பெட்டியையும் தூக்கிவைத்துக்கொண்டான். வண்டி புறப்படுவதற்கு சிறிது நேரத்துக்கு முன்னால் ஒரு இளம் பெண் வண்டியைத் திறந்துகொண்டு திடும்பிரவேசமாக உள்ளே நுழைந்து 'ஐபா! பெட்டியைக் கீழேவைத்துவிட்டு எனக்குக் கொஞ்சம் இடம் கொடுப்பீர்களா?' என்று கேட்டாள். அவள் ஏறிக்கொண்டால் இரவு முழுவதும் உட்கார்ந்து கொண்டுதான் பிரயாணம் செய்யவேண்டும். மரியாதையுடன் இடம் கொடுக்காவிட்டால் பெட்டியைக் கீழே தூக்கி எறிந்துவிட்டு அப்பெண்ணுக்கு இடம்கொடுப்பான் ரயில்வே கார்ட்டு. இதை அறிவான் சுந்தரம். எனவே கௌரவமாக அவனே பெட்டியைத்தூக்கி ஸீட்டின் அடியில் போட்டான். அந்தப்பெண் நன்றியறிதலுடன் 'தாங் யூ மிஸ்டர்!' என்று மரியாதைசெலுத்திவிட்டு அவன் பக்கத்தில் உட்கார்ந்தாள். அவளுடைய பெட்டிகளை போர்ட்டர் வண்டிக்குள் தள்ளிவிட்டு கதவைச் சாத்தினன். வண்டியும் கிளம்பியது.

'இந்த இலங்கை ரயிலில் பர்த் பதிவுசெய்யாவிட்டால் நரகாவஸ்தைதான்! பர்த் பதிவு செய்யும்படி அப்பாவுக்குத் தந்தி கொடுத்திருந்தேன். தந்தி கிடைக்கவில்லை போலிருக்கிறது!' என்று கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டு ஆயாசத்துடன் சொன்னாள் அப்பெண்.

சுந்தரம்:- உங்களுடைய சொந்தஊர் இலங்கைதானு?'

பெண்:- ஆமாம். என் சொந்தஊர் யாழ்ப்பாணம். ஆனல் நாங்கள் இருப்பது கொழும்பு. என் தகப்பனர் ஒரு பாரிஸ்டர். என் காலேஜ் விடுமுறைக்கு மூடியிருக்கிறார்கள். விடுமுறையின்பொழுது நான் இந்தியாவுக்கு வந்து பல ஊர்களையும் சுற்றிப் பார்த்துவிட்டுப் போவது வழக்கம்.

விடுமுறைக்கு வந்திருக்கிறேன் என்று அவள் சொன்னவுடன் மோஹன் சொல்லிய பெண் அவளாகத்தானிருக்

குமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது சுந்தரத்துக்கு. இந்தியாவில் எந்த ஊரிலிருந்து வருகிறீர்கள் இப்பொழுது?' என்று கேட்டான் சந்தேக நிவர்த்திக்காக.

பெண்:- சென்னைக்குப்போய் அங்கிருந்து மதுரை வந்து மதுரையில் ஒருவாரம் தங்கிவிட்டு ஊருக்குத் திரும்புகிறேன்:

இனி சுந்தரத்துக்கு சந்தேகமேயில்லை. மோஹன் சொல்லிய பெண்தான் அவள். 'நீங்கள் யாரோ என்றல்லவா இதுவரையில் நினைத்துக்கொண்டிருந்தேன். சோமநாதர் சிநேகிதருடைய பெண்ணு நீங்கள்?' என்றுன் சுந்தரம்.

'ஆமாம்! சோமநாதருடைய பங்களாவிற்கு அடுத்தது தான் எங்கள் பங்களா! நான் அவர் நண்பருடைய பெண்ணென்பது எப்படித்தெரியும் உங்களுக்கு?' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள் அந்தப்பெண்.

அவளைப்பற்றி ஏற்கனவே மோஹன் பிரஸ்தாபித்ததை சுந்தரம் தெரிவித்தான். மோஹனுக்கும் தனக்குமுள்ள உறவையும் மோஹன் தகப்பனுரின் கடிதத்தோடு சோமநாதர் வீட்டுக்குப் போவதையும் சுந்தரம் சொன்னுன்.

'அடடா! நீங்கள்தான் மிஸ்டர் சுந்தரமா? உங்களைப் பற்றி மிஸ்டர் மோஹன் அடிக்கடி சொல்லுவார். உங்கள் புத்தகங்களையெல்லாம் நான் படித்திருக்கிறேன். அவைகளின் ஆயிரக்கணக்கான ரஸிகர்களில் நானும் ஒருவள். என்பெயர் பிரேமா! உங்களைச் சந்தித்ததற்கு ரொம்ப சந்தோஷப்படுகிறேன்!' என்று சொல்லி சுந்தரத்தின் கைகளைப் பற்றி குலுக்கினுள் அப்பெண்.

அவளுடைய ஸ்பரிசம் சுந்தரத்துக்கு ரொம்ப லஜ்ஜையாயிருந்தது. ஆனுல் மேல்நாட்டுசம்பிரதாயப்படி கைகுலுக்க அவள் கையை நீட்டியபொழுது சுந்தரம் மரியாதைக்குறைவாக நடந்துகொள்ள விரும்பவில்லை.

பிரேமா ஜன்னல்வழியாக வெளியில் பார்த்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவ்ளை ஏற இறங்க கவனித்தான்

சுந்தரம். மெல்லிய வாயில் சேலையை இலங்கை நாகரிகத்தை அனுசரித்து ஒரு பாதிமார்பு தெரியும்படி அலக்ஷியமாக அணிந்திருந்தாள். வலது கையில் இரண்டு தங்கவளையல்கள்; இடதுகையில் விலையுயர்ந்த ஒரு சிறு கடிகாரம்; கழுத்தில் ஒரே ஒரு மெல்லிய நீண்ட முத்துச்சங்கிலி; காதில் ஒரு தொங்கட்டானும் சிறிய வைரத்தோடும்; இவைதான் பிரேமா அணிந்திருந்த ஆபரணங்கள். கட்டுமஸ்தான யௌவன சரீரத்துக்கு அவளுடைய மிருதுவான மெல்லிய ரவிக்கை எடுப்பாகத் தோன்றியதென்றாலும் பணம்படைத்த இலங்கை பெண்களின் நாகரீகப்போக்கை முதல் முதலாகப் பார்க்கும் தென்னிந்தியர்களுக்கு ஓரளவு அதிர்ச்சியை உண்டுபண்ணவேசெய்யும். இடையிடையே ஆங்கிலம் கலந்த மணிப்பிரவாளத்தில் பிரேமா பேசியது இலங்கையரின் ஆங்கில மோகத்தைப்பற்றி ஏற்கனவே மோஹன் சொல்லியவற்றை ஊர்ஜிதப்படுத்தியது. முன்பின் பரிச்சயமில்லாத ஒரு அழகிய யுவதியின் பக்கத்தில் உட்கார்ந்து பிரயாணம் செய்வது சுந்தரத்துக்கு முதலில் லஜ்ஜையாயிருந்தது. ஆனால் பிரேமாவின் நிஷ்களங்கமான முகமும் சௌஜன்யமான பேச்சும் அவனுடைய வெட்கத்துக்கு சீட்டுக்கொடுத்துவிட்டன.

## 11. இலங்கையில் இரு சுந்தரிகள்

காலை எட்டரைமணிக்கு வண்டி மருதானை ஷ்டேஷனுக்கு வந்துசேர்ந்தது. பிரேமா இறங்குவதற்குத் தயாரானாள். 'நீங்களும் என்னுடன் கொழும்பிற்கு வருவதாகச் சொன்னீர்களே!' என்று கேட்டான் சுந்தரம்.

'ஆமாம் மருதானையும் கொழும்பைச் சேர்ந்ததுதான். வெள்ளவத்தைக்குப்போக இங்கு இறங்குவதுதான் சௌகரியம். ஸ்டேஷனுக்கு என்னுடைய கார் வந்திருக்கும். வாருங்கள் உங்களை வீட்டிலேயே கொண்டுபோய் விட்டு விடுகிறேன்' என்று சொல்லிவிட்டு இறங்கினாள் பிரேமா. சுந்தரமும் அவளுடன் இறங்கினான். கூலியாள் பெட்டிகளைத் தூக்கிக்கொண்டுவந்து காரில் வைத்தான்.

'முதலில் கோட்டைக்கு ஓட்டிக்கொண்டுபோ!' என்று டிரைவரிடம் சொல்லிவிட்டு பிரேமா காரில் ஏறிக்கொண்டாள். மெஸ்மெரிஸத்தில் கட்டுண்டவன்மாதிரி சுந்தரமும் காரில் ஏறி அவள் பக்கத்தில் அமர்ந்துகொண்டான்.

'கோட்டைக்கு எதற்காகப் போகிறோம்?' என்று கேட்டான் கிறிதுநேரம் கழித்து.

'குவாரன்டைன் டாக்டரிடம் கைகாட்ட. பதினைந்து தினங்களுக்கு சுவாமிதரிசனம் செய்வதுபோல அந்த டாக்டரை தரிசித்துவிட்டு வரவேண்டும். இந்தியாவைச் சேர்ந்தவர்களுக்கும் இந்தியா மண்ணை மிதித்துவிட்டு வருகிறவர்களுக்கும் இலங்கை அரசாங்கம் விதிக்கும் தண்டனைகளில் இதுவும் ஒன்று. பாரதபூமியை மிதித்தால் பாபம் தொலையுமென்பார்கள். அதை மிதித்த பாபத்துக்கு 15 நாள் இங்கு பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டியிருக்கிறது! உங்களிடம் மண்டபம் டாக்டர் கொடுத்த குவாரன்டைன் சீட்டின் பின்பக்கத்தைப் பாருங்கள் அதில் எழுதியிருக்கும் விபரமாக!'

டாக்டரிடம் கைகாட்டிவிட்டு அவர்கள் வெள்ளவத்தைக்கு வந்துசேர்ந்தார்கள். பிரேமா முதலில் சோமநாதர் வீட்டுக்குவந்து சுந்தரத்தை அறிமுகம்செய்துவிட்டு பிறகு தன் வீட்டுக்குப் போனுள்.

சோமநாதர் சுந்தரத்தை பிரியமாக வரவேற்ருர்.

'அப்பா சுந்தரம்! உனக்கு நான் என்ன செய்யவேண்டுமோ அதை தாராளமாகச் சொல்லு! நீ வேறு நான் வேறு என்று நினைக்காதே. உன்னை அழைத்துவந்த பிரேமாவின் தகப்பனுர் பாரிஸ்டர் இளையதம்பி ஒரு பெரிய லக்ஷாதிபதி. அவருக்குத்தெரியாத பெரிய மனிதர்கள் ஒருவர்கூட இல்லை. அவரிடம் சொல்லி உனக்கு ஒரு நல்லவேலை தேடிக் கொடுக்கச் சொல்லுகிறேன். என் அச்சாபீஸிலேயே இருந்துவிடுவதென்ருலும் சம்மதம்தான். பெரியண்ணு அனுப்பிய மனிதருக்கு நான் உதவிசெய்யாமல் அலக்ஷியமாயிருந்துவிட்டேனென்ற பெயர்மட்டும் எனக்கு ஏற்படக்கூடாது' என்று சோமநாதர் உபசார வார்த்தைகள் சொல்லி வேலைக்காரனை அழைத்து சுந்தரத்துக்கு வேண்டிய சௌகரியங்களெல்லாம் செய்துகொடுக்க உத்தரவிட்டார்.

சோமநாதருக்கு வயது 55 இருக்கும். நீண்டகாலம் வரையில் குழந்தையில்லாமலிருந்து பிறகு ஒரு பெண் குழந்தை பிறந்தது. லீலா என்ற அப்பெண்ணிற்கு இப்பொழுது 18 வயதாகிறது. பிரேமாவையும் லீலாவையும் சேர்த்து பார்ப்பவர்கள் இவர்கள் இரட்டைக் குழந்தைகளோ என்று சந்தேகிப்பார்கள். அங்க அவயவங்களில் அவ்வளவு ஒற்றுமை. யாழ்ப்பாண பெண்களைப்போலவே லீலாவும் உடையணிந்திருந்தது இந்த உருவ ஒற்றுமையைப் பரிபூரணமாக்கியிருந்தது. லீலாவை தேவாஸ் பிரிண்டிங் ஒர்க்ஸின் நிர்வாகத்தைக் கவனித்துவந்த ஒரு யாழ்ப்பாண வாலிபனுக்கே மணம் செய்துகொடுக்க சோமநாதர் தீர்மானித்திருந்தார். லீலாவின் உடையலங்காரம் சுந்தரத்துக்கு முதலில் அருவருப்பாயிருந்ததென்ருலும் மேற்புடவையேயில்லாமல் வெறும் ரவிக்கையுடன் நூற்றுக்கணக்கான சிங்களப் பெண்கள் நடுத்தெருவில் நடமாடுவதைப்

பார்த்தபிறகு 'இது தேச சம்பிரதாயம். ஊருடன் ஒத்து வாழாதவனுக்கு பயித்தியக்காரனென்ற பட்டம்தான் கிடைக்கும்!' என்று நினைத்துக்கொண்டான். லீலாவின் பிரியமான பேச்சும், கல்வியறிவும் தமிழ் இலக்கிய ஞானமும் சுந்தரத்தின் மனதை விசேஷமாகக் கவர்ந்தன. லீலாவின் புத்தக சாலையை பார்த்தபிறகுதான் குந்தளத்தைப்போல புத்தகப் பூச்சிகள் உலகில் இன்னும் பலர் இருக்கிறார்களென்பதை அவன் தெரிந்துகொண்டான்.

அடுத்த இரண்டு வாரங்களுக்கு விசேஷ சம்பவம் எதுவும் நடக்கவில்லை. இரண்டு தினங்களுக்கு ஒருமுறை பிரேமா காருடன்வந்து சுந்தரத்தை குவாரன்டைன் ஆபீஸுக்கு அழைத்துக்கொண்டு போய்விட்டு வருவாள். பாக்கி நேரத்தை சுந்தரம் லீலாவின் புத்தகசாலையிலேயே கழிப்பான்.

'இந்தப் புத்தகங்களிடமே உங்களுக்கு இவ்வளவு ஆசையிருந்தால் பிரேமாவின் புத்தகசாலையைப் பார்த்தால் என்ன செய்வீர்களோ! சாப்பாடுகூட மறந்துபோய்விடும்!' என்றாள் லீலா ஒரு நாள்.

சுந்தரம்:- 'பிரேமாவிடம் தமிழ்ப்புத்தகங்கள் கூட இருக்கிறதா? இலங்கையர்கள் தமிழ்ப் படிப்பதையும் தமிழில் பேசுவதையும் 'அநாகரீகமென்று நினைப்பதாக அல்லவா நான் கேள்விப்பட்டேன்!'

லீலா:- நீங்கள் நினைப்பது தவறு. ஏழெட்டு வருடங்களுக்குமுன் அப்படிப் பொதுவாக எல்லோரும் நினைத்து வந்தார்கள். இப்பொழுது நிலைமை படிப்படியாக மாறிவருகிறது. தமிழ்-சிங்கள மறுமலர்ச்சி இயக்கங்கள் நாடெங்கும் தீவிரமாக வேலைசெய்து வருகின்றன. தேசீய பாஷைகளின் மதிப்பு சிறிதுசிறிதாக உயர்ந்து வருகிறது. சகல கல்வி ஸ்தாபனங்களிலும் தேசீய பாஷைகளின் மூலமாகவே கல்வி போதிக்கவேண்டுமென அரசாங்கத்தைப் பலர் தூண்டிக்கொண்டிருக்கிறார்கள். அடுத்த தலைமுறைக்குள் ஆங்கிலம் மதிப்பிழந்து கப்பலேறிவிடுவதை நாமே காணப்போகிறோம்!

சுந்தரம்:- அப்படியானுல் இலங்கை மேனுட்டு நாகரீகத்துக்கும் பாஷைக்கும் அடிமைப்பட்டிருக்கவில்லையென்கிருயா?

லீலா:- அந்த அடிமைத்தனத்திலிருந்து மீட்சிபெற வேண்டுமென்னும் எண்ணம் உதயமாகிவிட்டதென்றுதான் சொல்லுகிறேன். உதாரணமாக பிரேமாவை எடுத்துக் கொள்ளுங்கள். அவள் நன்ருக ஆங்கிலம் படித்திருக்கிருள். அதேசமயம் தமிழிலும் அவளுக்கு அளவுகடந்த ஆசையிருக்கிறது. தமிழில் சமீபகாலத்துக்கிடையே வெளியான சகல புத்தகங்களேயும் அவளிடம் பார்க்கலாம்.

"லீலா! என்ன என் தலையை உருட்டுகிருய்?' என்று கேட்டுக்கொண்டே பிரேமா அங்கு வந்துசேர்ந்தாள்.

சுந்தரம்:- இல்லை! உங்களுடைய புத்தகசாலையைப்பற்றி புகழ்ந்துகொண்டிருந்தாள் லீலா. புத்தகங்களென்ருல் எனக்கு உயிர்.

'வாருங்கள் என்வீட்டுக்குப்போய்ப் பார்க்கலாம். லீலா உன்னைத் தனியே விட்டுப்போகவில்லை. அதோபார் உன்னைத் தேடிக்கொண்டு வருகிருர் உன் பிரியர் நடராஜன்!' என்று கேலிச்சிரிப்புடன் வெளியே கையைக்காட்டிஞள் பிரேமா. லீலாவின் கணவராகப்போகும் நடராஜன் வெளியே காரிலிருந்து இறங்கிக்கொண்டிருந்தான். சுந்தரம் பிரேமாவின் காரில் ஏறிக்கொண்டு அவள் வீட்டுக்குப் போஞன்.

பிரேமா தனது புத்தகசாலையில் சாந்தாவின் புத்தகங்களைக்காட்டி 'இலங்கையில் சாந்தாவின் பெயருக்கே ஒரு தனி மதிப்பு. கமலாலயத்துக்கு சாந்தாவின் புத்தகங்கள் வந்தால் ஒரே நாளில் அவ்வளவும் விற்பனையாகிவிடும். உங்கள் புத்தகமும் அப்படித்தான்!' என்ருள்.

சுந்தரம்:- சென்னை கமலாலயத்தின் கிளை கொழும்பிலிருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர்களை உங்களுக்குத் தெரியுமோ?'

பிரேமா:- ஓ! நன்ருகத்தெரியும். அதன் சொந்தக்காரர் கேசவன் நான்கைந்து மாதங்களுக்கு முன்புகூட இலங்கைக்கு வந்திருந்தார்.

சுந்தரம் ஓரிரண்டு நிமிடம் மௌனமாக யோசித்துவிட்டு 'அப்படியானல் நீங்கள் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும். ஏன் என்று காரணம் கேட்கக்கூடாது!' என்ருன்.

பிரேமா:- நிச்சயம் செய்வேன் சொல்லுங்கள்.

சுந்தரம்:- எக்காரணத்தை முன்னிட்டும் கேசவனுக்கு நான் இலங்கை வந்திருப்பது தெரியக்கூடாது. இன்றுமுதல் என் பெயர் ரமணி. சுந்தரம் என்ற பெயரையே மறந்து விடுங்கள். லீலாவிடம் சொல்லிவிடுகிறேன். சுந்தரம் என்ற துரதிஷ்டப்பெயர் இந்தியாவோடு மறைந்துவிடட்டும்.

பிரேமா ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்தாள் 'வாழ்க்கையில் நீங்கள் வெறுப்படைந்து இலங்கை வந்திருப்பதைப் போலிருக்கிறது பேசுவதைப்பார்த்தால்!' என்ருள் பிறகு மெதுவாக.

தயவுசெய்து பழைய சம்பவங்களை எனக்கு ஞாபகப் படுத்தாதீர்கள். என் உறவினர்கள் நல்ல தனவந்தர்கள். செல்வமாய் வளர்ந்தேன். இன்று சகலரையும் துறந்து அஞ்ஞாதவாசம் செய்ய இலங்கைக்கு வந்திருக்கிறேன். பாக்கி வாழ்நாளை இங்கேயே கழித்துவிட உத்தேசம். நான் இலங்கையிலிருப்பது என் பந்துக்களுக்குத் தெரியக்கூடாது. புதிய பெயருடனேயே புதிய வாழ்க்கை நடக்கட்டும்' என்று துக்கம் தோய்ந்த தொனியில் சொன்னுன் சுந்தரம்.

'நீங்களாகத் தெரிவிக்காத குடும்ப விஷயங்களை நான் அறிந்துகொள்ள விரும்பவில்லை. உங்கள் நிலைமைக்கு உண்மையில் நான் அனுதாபப்படுகிறேன். உங்களை இலங்கையில் எவரும் நேரில் பார்த்ததில்லையாகையால் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. இன்றுமுதல் நீங்கள் மிஸ்டர் ரமணியாகிவிடுவது சுலபம்தான். ஆனல் மிஸ்டர் சுந்தரத்தின்

பழைய கீர்த்தியும் புகழும் உங்களுக்குப் பயன்படாமற் போய்விடுமே என்றுதான் பயப்படுகிறேன்' என்றாள் பிரேமா.

சுந்தரம்:- புகழும் கியாதியும் இனி எனக்கு வேண் டாம். அமைதியாக வாழ்க்கையை நடத்தவே இலங்கையை நாடிவந்தேன். புகழுக்காக அல்ல.

அன்று மாலை பிரேமா லீலாவிடம் சொன்னாள் 'ரமணி யின் வாழ்க்கையில் ஏதோ பெரிய கஷ்டமும் துக்கமும் ஏற்பட்டிருக்கவேண்டும்' என்று.

"கல்யாண விஷயமாகத்தானிருக்கும். தென்னிந்திய பிராமணக் குடும்பத்தின் சங்கதிதான் நமக்குத் தெரியுமே! பிள்ளையையும் பெண்ணையும் கேட்காமல்முடுச்சுப்போடுவதும் பிறகு தம்பதிகள் பொழுது விடிந்தால் மல்யுத்தம் செய்வ தும் அங்கு சகஜம்தானே! மிஸ்டர் ரமணி ஏதாவது ஒரு பெண்மீது கவனம் வைத்திருப்பார். அவருடைய் பெற் றோர்களுக்கு அது பிடித்திருக்காது. கோபித்துக்கொண்டு வீட்டைவிட்டுக் கிளம்பியிருப்பார்! ஆரம்பத்திலேயே இப்படி ஏதாவது இருக்கவேண்டுமென்று நினைத்தேன்!' என்று அலக்ஷியமாக பதில் சொன்னாள் லீலா.

'எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. அவரைப் பார்த்தால் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவராகத் தெரிகிற தேதவிர சம்பாதித்து வயிறுவளர்க்க வந்தவராய்த் தெரிய வில்லை!' என்றாள் பிரேமா.

'பிரேமா! எனக்குத் தெரிகிறது உன்மனம் எப்படி வேலைசெய்கிறதென்று!" என்றுசொல்லி பிரேமாவின் கன் னத்தை மெதுவாகக் கிள்ளினாள் லீலா. 'சீச்சி! ஏதாவது கண்டபடி உளராதே!' என்று வெட்கத்துடன் அவள் கையைப்பிடித்து நெறித்துவிட்டு ஓடினாள் பிரேமா.

ஒரு வாரம் கழித்து ஒருநாள் பிரேமா சொன்னாள். "இலங்கையில் உயர்ந்த தமிழ் வாரப் பத்திரிகை ஒன்றுகூட இல்லை. சிறந்த முறையில் ஆரம்பித்து நடத்தினால் செல் வாக்குடன் நடக்கும். தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்துக்கும்

பக்க பலமாயிருக்கும். உங்களுடைய அழகான வசன நடை பத்திரிகையை வெகுவிரைவில் முன்னுக்குக் கொண்டு வந்துவிடும்!' என்று.

ரமணி:- நல்ல யோசனைதான். ஆனால், ஒரு பத்திரிகை ஆரம்பிப்பதென்பது சுலபமாயிருக்கிறதா? குறைந்தது அரை லட்ச ரூபாயாவது மூலதனம் போட்டால்தான் நன்கு நடத்தமுடியும். ஆரம்பித்து இரண்டு மூன்று மாதங்களில் நிறுத்துவதில் பயனில்லை.

பிரேமா:- பத்திரிகை நன்றாக நடக்குமென்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. பணப்பொறுப்பை நான் ஏற்றுக்கொண்டால் பாக்கிப் பொறுப்புகளை நீங்கள் ஏற்று நடத்துவீர்களா?

ரமணி:- சந்தோஷமாக! இதை ஒரு பெரிய உதவியாகவும் மதிப்பேன்.

பிரேமா:- உதவி ஒன்றுமில்லை! பாங்கியில் கிடக்கும் பணத்தை பத்திரிகையில் போடுகிறோம். அவ்வளவுதான். என் தகப்பனாரிடம்பேசி இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்கிறேன்.

பிரேமா வெறும் பேச்சோடு நின்றுவிடவில்லை. சுந்தரத்துக்கு தமிழ் இலக்கிய உலகிலுள்ள மதிப்பையும் ரமணி என்ற மாறுபெயருடன் அவன் இலங்கையில் வந்திருக்கும் காரணங்களையும் பிரேமா தன் தகப்பனாரிடம் நயமாக எடுத்துச் சொன்னாள். ரமணியை ஆசிரியராகக்கொண்டு ஒரு வாரப்பதிப்பை ஆரம்பித்தால் நல்ல வருமானம் கிடைப்பதோடு, செல்வாக்கும் ஏற்படுமென்று தகப்பனாருக்கு நம்பிக்கையேற்படுமாறு விவாதித்தாள். பாரிஸ்டர் இளையதம்பிக்கு பிரேமா ஒரே பெண். அவள் விருப்பத்துக்கு மாறாக நடக்க ஒருபோதும் அவர் நினைப்பவரல்ல. ஆகையால், பிரேமாவின் நோக்கம் சுலபமாகக் கைகூடிவிட்டது. அடுத்த மாதத்திலிருந்தே தேவாஸ் பிரிண்டிங் ஒர்க்ஸில் பத்திரிகையை அச்சிட்டு வெளியிட ஏற்பாடுகளைச் செய்ய ஆரம்பித்தான் ரமணி.

ரமணியும், பிரேமாவும் லீலாவும் சேர்ந்து யோசித்து 'நவ லங்கா' என்று பத்திரிகைக்குப் பெயர் சூட்டினார்கள். எண்பது பக்கத்தில் மூவர்ண அட்டையுடன் பத்திரிகையை வெளியாக்குவதென்றும் முதல் நாற்பது பக்கத்தில் ரமணியின் தொடர் நாவலும், இருபது பக்கங்களில் சிறுகதை, கட்டுரை, விமரிசனங்கள் முதலியவற்றையும் வெளியிடுவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. விளம்பரங்களுக்கு 20 பக்கங்களை ஒதுக்கினார்கள். இளையதம்பியின் தயவு தேவைப்பட்ட பல வியாபாரிகள் விளம்பரம் கொடுத்து ஆதரிக்க முன்வந்தனர்.

கமலாலய முதலாளியுடன் நெருங்கிப் பழகிய ரமணிக்கு விளம்பரத்தின் மதிப்பு நன்றாகத் தெரியும். "நவ லங்கா" வெளிவர இருப்பதை இலங்கைப் பத்திரிகைகளிலெல்லாம் பிரபல்யமாக விளம்பரப்படுத்தினான். நான்கு வர்ண சுவரொட்டிகள் இலங்கையின் பல பாகங்களிலும் பாதசாரிகளின் கண்களில் பட்டுக்கொண்டேயிருந்தன. சினிமா தியேட்டர்களிலும் இந்த விளம்பரமே எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்தது. பிரேமாகூட நினைத்தாள், பத்திரிகை ஜனிப்பதற்குமுன் விளம்பரத்துக்காக இப்படிப் பணத்தை வாரி இறைக்கிறானே என்று. ஆனால் விளம்பரங்கள் வெளியான இரண்டு மூன்று வாரங்களுக்குள் ரமணியின் வர்த்தகத் தந்திரம் அவளுக்குத் தெரிந்துவிட்டது. இந்த விளம்பர யுகத்தில் கம்பனும் காளிதாசனும் மறுஜென்மமெடுத்து வந்தால்கூட ஓரளவு விளம்பரமில்லாவிட்டால் உலகம் அவர்களை மகாகவிகளென்று அங்கீகரிக்காதென்று ரமணி அடிக்கடி சொல்லுவான். "தமிழ் நாட்டையே எடுத்துக்கொள்ளுங்களேன்! இன்றும் நம்மிடையில் எவ்வளவு மகா கவிகள் இருக்கிறார்கள்? எவ்வளவு அற்புதமான கவிதாமாலைகளைப் புனைந்து தமிழ் மொழியை வளம்பெறச் செய்கிறார்கள்? அவர்களை நீங்களும் நானும் பெரிய கவிஞர்களென்று சொல்லிவிட்டால் உலகம் ஒப்புக்கொண்டுவிடுமா? அவர்கள் செத்துச் சாம்பலானபிறகு ஏதோ ஓரிரண்டு பத்திரிகைகள் அவர்களது பழைய கவிதை

களை ரவிசித்துவிட்டுப் புகழுகின்றன. உடனே ஒரேயடியாக மற்றப் பத்திரிகைகளும் இந்திரன், சந்திரன் என்று வான ளாவிப் புகழ்கின்றன. பிறகு மாண்ட கவிகளுக்கு ஞாப கச் சின்னமாக மண்டபம் கட்டுவோமா, ஸ்தூபி நிறுத்து வோமா என்று கூட்டம்போட்டுக் கூடி யோசிக்கிறார்கள். இந்த அறிவு அந்தக் கவிஞன் உயிருடனிருக்கும்பொழுதே ஏற்படுவதுதானே? வறுமையில் வயிற்றைச்சுருக்கி குடிக்கக் கூழுமில்லாமல் செத்து மடிகிறான் தற்காலக் கவிஞன். அவ னைப் போற்றி ஆதரிக்க ஆளில்லை. இதை எதற்குச் சொல் லுகிறேனென்றால் இன்று கன்னாபின்னா என்று ஏதோ எழு தித்தள்ளும் அரைகுறைப் பேர்வழிகளைக்கூட விளம்பரம் என்ற மகாசக்தி மகா மேதையாக்கி விடுகிறது. விளம்ப ரம்தான் இன்றைய வர்த்தகத்தின் உயிர்நாடி. நம் பத்தி ரிகை வெளியாவதற்குமுன் இப்படிப் பணத்தைவாரி இறைக் கிறேனே என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் இதன் பலனை வெகு சீக்கிரமே நீங்கள் தெரிந்துகொள்ளுவீர்கள்!' என்று ரமணி விளம்பரச் செலவைப்பற்றிப் பேசும்பொழுதெல்லாம் ஒரு குட்டிப்பிரசங்கம் செய்வான்.

அவன் பேச்சு உண்மையில் வரட்டு வேதாந்தமாயில்லை. இதன் உண்மையை பிரேமா பிரத்யட்சமாகவே தெரிந்து கொண்டாள்.

நவலங்கா வெளியாவதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்பே ஐயாயிரம் பிரதிகளுக்குமேல் ஆர்டர்கள் வந்து குவிந்தன. நாட்டின் பல பாகங்களிலிருந்தும் ஏஜன்ஸிக்கு முன்பணத்துடன் அநேகர் விண்ணப்பித்துக்கொண்டிருந் தார்கள். தீபாவளிப் பண்டிகையன்று ரமணியின் "குந்தளப் பிரேமா" தொடர் நாவலுடன் நவலங்காவின் முதல் இதழ் வெளியாயிற்று. மூவர்ண அட்டையும் உயர்ந்த கிளேஸ் காகிதத்தில் நேர்த்தியாக அச்சிடப்பட்டிருந்ததும் பொது ஜனங்களுக்கு ஒரு கவர்ச்சியைக் கொடுத்தன.

நான்கைந்து மலர்கள் வெளியானதும் நவலங்காவின் புகழ் மளமளவென்று ஓங்கியது. ஒவ்வொரு தமிழன் கையி

லும் ஒவ்வொரு பிரதி காணப்பட்டது. வாழ்க்கையின் இன்றியமையாத சாதனங்களிலே நவலங்காவும் ஒன்றெனக் கருதத் தலைப்பட்டனர் தமிழர்கள். தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் அந்த இயக்கத்துக்கு முதல் ஸ்தானம் கொடுத்து எழுதிய நவலங்காவை தலையில் தூக்கிவைத்துக் கொண்டு கொண்டாடினர். தமிழ்ப் படிப்பதைக் கேவலமென்று நினைத்த கலசம் அணிந்த துரைமார்கள்கூட பொது ஸ்தலங்களில் மற்றவர்களுடைய சம்பாஷணைகளிலே கலந்து கொள்ள இயலுவதற்காக நவலங்காவைப் படிக்க ஆரம்பித்தார்கள். குந்தளப்பிரேமா தமிழ் நவீனங்களிலே ஒரு பெரிய சூறுவளியைக் கிளப்பியது. உண்மையான வாழ்க்கையைத் தழுவி எழுதிய உருக்கமான சில கட்டங்கள் வாசகர்களைக் கண்ணீர் வடிக்கச்செய்தன. ஆனால் அந்தக்கதை நிஜக்கதையென்பதையோ அல்லது அதை எழுதியவரின் இருதயத் துடிப்பையோ யார் கண்டார்கள்?

ஒருநாள் லீலா சொன்னாள், "பிரேமா! குந்தளப் பிரேமாவின் போக்கு தெரிகிறதில்லையா? குந்தளத்தினிடமிருந்து கோபாலைப் பிரித்துக்கொண்டு போய்விட்டாள் அவன் தாயார்! அந்த கோபாலன்தான் பிரேமாவைத் தேடிக்கொண்டு பிறகு வரப்போகிறான் இலங்கைக்கு!" என்றாள்.

பிரேமா:- "குந்தளப்பிரேமா ரமணியின் சுய சரித்திரமாயிருக்குமென்று நினைக்கிறாயா?"

லீலா:- "சந்தேகமென்ன? அப்படித்தான் தோன்றுகிறது கதையின் போக்கைப் பார்த்தால்! சுந்தரம் என்ற பெயருக்குப் பதில் கோபால் என்று போட்டிருக்கிறார். குந்தளத்தின் கதி என்ன ஆகியதோ. அது தெரிந்தால் ரமணி இலங்கைக்கு வந்த காரணமும் தெரிந்துவிடும்!"

லீலா:- இன்னும் என்ன தெரியவேண்டியதிருக்கிறது?

பிரேமா:- இப்பொழுது பிரமாதமாக என்ன தெரிந்துவிட்டதென்கிறாய்?

லீலா:- சொல்லட்டுமா? அந்தக் குந்தளம் ஒன்றில் தூக்குப்போட்டுக்கொண்டு இறந்திருக்கவேண்டும். அல்லது துணிந்து இன்னொருவனைக் கல்யாணம் செய்துகொண்டிருக்கவேண்டும்.

பிரேமா:- நீ நினைப்பது தவறு. இன்னொருவனைக் கல்யாணம் செய்துகொள்வதாயின் அவள் கோபாலையே கல்யாணம் செய்துகொண்டிருக்கலாமே.

லீலா:- அதுதான் இல்லை. கோபால் குந்தளத்தைக் காதலிக்கிறனே தவிர குந்தளம் கோபாலைக் காதலிப்பதாகக் கதையில் இதுவரை நினைக்க இடமில்லாமலிருக்கிறது. தவிர குந்தளத்தை கோபால் கல்யாணம் செய்துகொள்ள முயற்சிப்பானே என்று நினைத்துத்தானே அவனை அவன் தாயார் பிரித்துக்கொண்டு போகிருள். பிறகு கோபாலை குந்தளம் நாட இடம் ஏது?

பிரேமா:- ஆமாம் லீலா! குந்தளம் என்ன கதியானலென்ன? குந்தளம் கோபாலுக்கு இல்லையென்பதும் இதைக் கோபால் நன்றாகத் தெரிந்துகொண்டுவிட்டானென்பதும் தெளிவாகிவிட்டது. இனி அவன் இலங்கைக்குவந்த காரணத்தைப்பற்றி நாம் மூளையைக் குழப்பவேண்டியதில்லை.

லீலா:- அடி அசடே! இனிமேல்தான் இருக்கிறது கோபால் வாழ்க்கையிலே முக்கியமான கட்டங்கள்! அவன் எதற்காக இலங்கைக்கு வந்திருக்கிருன் தெரியுமா?

பிரேமா:- எதற்காக?

லீலா:- இங்கு ஒரு பிரேமாவைத் தேடிக்கொண்டு........

பிரேமா:- உனக்கு எப்பொழுதும் கேலி செய்யத்தான் தெரியும்.

லீலா:- ஏன், நான் சொல்வது வேப்பங்காய்மாதிரி இருக்கிறதா? எங்கே, எங்கே இப்படி என் முகத்தைப்பார்த்துக் கொஞ்சம் சொல்லேன் பார்க்கலாம்!

பிரேமா லஜ்ஜையுடன் முகத்தை மூடிக்கொண்டாள். சங்கடமான நிலைமையிலிருந்து அவளை விடுவிக்க தபால் சேவகன் அந்தச் சமயம்பார்த்து வந்துசேர்ந்தான்.

லீலா:- நான் போகிறேனம்மா! நேருக்கு நேராகப் பேசமுடியாத விஷயங்களைப்பற்றி ரமணிதான் கடிதமூலம் எழுதியிருக்கிறாரோ என்னவோ! எனக்கேன் உங்கள்.......!

பிரேமா:- போதும், போதும்! அதோபார்! உன் ஆசைக் காதலர், வருகிறார்! போ, போ, சீக்கிரம்போ!

பிரேமா சொல்லியது பொய்யல்ல. உண்மையாகவே லீலாவை அழைத்துப்போக நடராஜன் அங்கு வந்தான். லீலா போனபிறகு பிரேமாவின் மூளை வேகமாக வேலை செய்ய ஆரம்பித்தது. லீலா சொல்லியது உண்மையாக இருக்குமா? ரமணிக்கு நிஜமாகவே என்மீது பாசம் ஏற்படுவது சாத்தியமா? சாத்தியமென்றால் அவர் மரக்கட்டைபோல உணர்ச்சியற்றவராக நடக்கக் காரணமென்ன? எவ்வளவு சந்தர்ப்பங்களில் அவருடன் நான் மிக மிக நெருங்கிப்பழக சந்தர்ப்பமேற்பட்டிருக்கிறது? அப்பொழுதெல்லாம் அவர் ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லிக்கொண்டு என்னிடமிருந்து விடுதலைபெற பயந்து ஓடுபவரைப்போலச் செல்லுவானேன்? ஒரு சமயம் நான் பணக்காரியாயிற்றே என்று அஞ்சுகிறாரா? தன்னையும்விட செல்வத்தில் மிஞ்சிய குடும்பப் பெண்ணிடம் கொள்ளும் காதல் முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்ட கதைமாதிரி முடிந்துவிடுமோ என்று நினைக்கிறாரா? ஏன் இப்படி இருக்கக்கூடாது? அவர் கதையில் வரும் குந்தளம் ஒரு பெரிய சீமானின் பெண்தானே? அந்தக் காரணத்தினாலேயே குந்தளத்தை மணக்கமுடியாமற் போய் மறுபடியும் ஒரு பணக்காரப்பெண்ணைக் காதலித்து ஏமாற்றத்துக்கு ஆளாகக்கூடாதென்று நினைக்கக்கூடாதா? அப்படியிருக்கலாம். என்னிடம் அவருக்குச் சிறிதுகூடப் பிரியமில்லையென்றால் அவருடைய நாவலின் பெயரில் என் பெயரையும் ஏன் சேர்க்கவேண்டும்? குந்தளப்பிரேமா என்று வைப்பதற்குப் பதிலாக வேறு பெயர் வைத்திருக்கலாமே! அழகு அழகாக இன்னும் எவ்வளவு பெயர்களில்லை?

இப்படி சிந்தனைசெய்யவாரம்பித்தாள் பிரேமா. அன்றிரவு முழுவதும் அவளுக்கு உறக்கமேயில்லை. சற்றுக் கண்ணயர்ந்தாலும் கனவிலும் அவள் மனம் இதே சர்ச்சையில் ஈடுபட்டிருந்தது. குந்தளப்பிரேமா நாவலுக்கு அந்தப் பெயர் வைத்ததின் காரணத்தை ரமணியின் வாயிலிருந்தே கேட்டுத் தெரிந்துகொண்டாலொழிய நெஞ்சு வெடித்து விடும்போலாகிவிட்டது பிரேமாவுக்கு.

"ஆமாம்! உங்கள் தொடர்கதைக்கு குந்தளப்பிரேமா என்று ஏன் தலைப்புக் கொடுத்தீர்கள்?" என்று ரமணியையே நேரில் கேட்டுவிட்டாள் ஒருநாள்.

ரமணி:- "ஏன் இப்படிக் கேட்கிறீர்கள்?"

பிரேமா:- தயவுசெய்து என்னைப் பன்மையில் அழைப்பதை விட்டுவிடுங்கள். உங்களைவிட நான் வயதில் ஏழெட்டு வயது சிறியவள்!

ரமணி சிறிது தயங்கினான். இதேபோல அடிக்கடி குந்தளம் அவனிடம் சொல்லியதும் விடாப்பிடியாக கடைசி வரையில் அவளைப் பன்மையிலேயே அழைத்து மனம் நோகச் செய்ததும், ரமணியின் ஞாபகத்துக்கு வந்தன. அவனை அறியாமலே அவனுடைய கண்களை கண்ணீர் கவிழ்ந்துகொண்டது அதைக்கண்டு பிரேமா திடுக்கிட்டாள்.

பிரேமா:- ஒன்றுமில்லையே உடம்புக்கு? ஏன் இப்படி திடீரென்று கண் கலங்குகிறது? நான் சொல்லியதில் வருத்தமா மிஸ்டர் ரமணி?

ரமணி:- ஒன்றுமில்லை பிரேமா! கண்ணில் ஒரு தூசி விழுந்துவிட்டது.

"எங்கே கண்ணைக் காட்டுங்கள்!" என்று சொல்லிக் கொண்டே மிருதுவான ஒரு கரத்தை அவன் முகவாய்க் கட்டையில்கொடுத்து மற்றொரு கையினால் அவன் தலையை உயர்த்தி நீர் நிறைந்துநின்ற கண்களின் அருகில் உதடுகளை வைத்து ஊதினாள். இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டே தற்செயலாக லீலாவும் நடராஜனும் அறையில் நுழைந்தனர்.

## 12. ஞானோதயம்

ரமணியை இலங்கையில்விட்டு குந்தளத்தைச் சிறிது கவனிப்போம். சுந்தரம் திடீரென்று திருச்சிக்கு வந்து திடீரென்று சொல்லிக்கொள்ளாமலே போனவனென்றாலும் அவன் தங்கியிருந்த மூன்று மாதங்கள் குந்தளத்தினிடம் எத்தனையோ மாறுதல்களைச் செய்திருந்தன. வாழ்க்கையிலே ஒரு ரஸனையை அவள் கண்டாள். சோபையற்றிருந்த வரண்ட நிலவுக்கு எப்படியோ திடீரென்று ஒரு மதிப்பு ஏற்பட்டது. வெறும் வர்ணப் புஷ்பங்களாயிருந்த மலர்ந்த ரோஜாவிலும் மல்லிகையிலும் மணமிருப்பது அப்பொழுதுதான் அவளுக்குத் தெரிந்தது. குந்தளத்துக்கு சுந்தரம் மறைந்ததும் வாழ்க்கை ரஸனையை இழந்துவிட்டதுபோலிருந்தது. மல்லிகையும் ரோஜாவும் மணமற்ற காட்டுப்பூக்களாயின. நிலவில் ஒரு சோபையில்லை. ஏன் சுந்தரம் வந்தான் என்றுகூடத் தோன்றியது குந்தளத்துக்கு.

தற்காலிகமாகத் தோன்றிவிட்டுப் போனவனைப்பற்றி ஏன் இவ்வளவு சிந்திக்கவேண்டுமென்று நினைத்தாள் சில சமயங்களில். சாந்தாவை ஜபித்துக்கொண்டிருப்பவன் எப்படிப்போனாலென்ன என்றுகூடத் தோன்றும் வேறுசில சமயங்களில். அவனுடைய கடைசிக்கடிதம் சாந்தாவைப் பற்றிய சந்தேகத்தை ஊர்ஜிதப்படுத்தியது.

குந்தளத்துக்கு மணமானபிறகுதான் நான் மணம் செய்துகொள்வேனென்று முனிசாமியிடம் சுந்தரம் சொல்வானேன்? என்னிடம்கொண்ட அனுதாபத்துக்கும் சாந்தாவிடம்கொண்ட காதலுக்கும் என்ன சம்பந்தம்? சாந்தா ஒரு விதவையென்று வஸுவின் கணவர் ஏதாவது சொல்லியிருப்பாரோ? எனக்கு முதலில் மறுமணம் நடந்துவிட்டால் பிறகு தனது மணத்தை எவரும் ஆட்சேபிக்கமாட்டார்களென்று நினைக்கிறாரா? என்னிடம் காட்டிய அனுதாபம் வெறும் சுயநலமா? அன்றொருநாள் கிராமக் கோவிலிலே

இறைவன் சந்நிதானத்தில் நின்று "உங்கள் நெஞ்சிலிருக்கிருள் சாந்தா!" என்று நான் சொல்லியபொழுது "நீ தவருக நினைக்கிருய் குந்தளம்!" என்றுரே அதன் பொருள் என்ன? சாந்தாவிடம் அவர் பித்துக்கொண்டிராவிட்டால் எனக்கு எழுதிய கடைசிக் கடிதத்திலாவது அதைத் தெளிவாகச் சொல்லியிருக்கலாமல்லவா?

இப்படி மனம் சென்றவாறு யோசித்தாள். ஆனல் இந்த யோசனைகளுக்கு அவளால் ஒரு முடிவுகாண இயலவில்லை. அய்யரும் அம்புஜமும் சுந்தரத்தைக் கண்டுபிடிக்க சாத்தியமான முயற்சிகளையெல்லாம் செய்துபார்த்தார்கள். இந்த ஏக்கத்தில் அம்புஜத்தின் வியாதி மேலும் சிக்கலடைந்தது.

நான்கு மாதங்களுக்குப்பின் ஒருநாள் அம்புஜத்தினிடம் அய்யர் சொன்னுர் "சுந்தரம் சௌக்கியமாயிருக்கிருன். கவலைப்படக் காரணமில்லை இனிமேல்!" என்று.

"எப்படித்தெரிகிறது?"

"இதோ அந்தப் பட்டணத்துப் பெண் சாந்தா எழுதிய புத்தகத்திலிருந்து தெரிகிறது. வஸூ அனுப்பியிருக்கிருள் குந்தளத்துக்கு இதை. காலை தபாலில் வந்தது. அட்டை காகிதமெல்லாம் அழகாயிருக்கிறதே படித்துப் பார்ப்போமென்று படிக்க ஆரம்பித்தேன். கதை முழுக்க முழுக்க சுந்தரத்தைப்பற்றித்தான். அவன் பிறந்துவளர்ந்து பட்டணத்துக்குப்போய் படித்ததுமுதல் கல்யாணம் செய்துகொள்ள மாட்டேனென்று சொல்லிவிட்டு ஓடிப்போய் யாருக்கும் சொல்லாமல் சாந்தாவைக் கல்யாணம் செய்துகொண்டது வரையில் எல்லாம் விபரமாக எழுதியிருக்கு இந்தப் புத்தகத்தில். அவன் சொல்லி சாந்தா எழுதியிருக்கவேண்டும் இந்தப் புத்தகத்தை. ஒவ்வொன்றும் அப்படி அப்படியே நடந்தமாதிரி எழுதியிருக்கு!" என்றுர் அய்யர்.

"வெறும் கதையோ என்னவோ! சுந்தரம் சொல்லித்தான் எழுதியிருப்பாளென்று எப்படி நிச்சயமாகத் தெரிகிறது!" என்று கேட்டாள் அம்புஜம்.

"சந்தேகமேயில்லை. கல்யாணத்தைப்பற்றி சுந்தரத்துடன் நான் பேசியபொழுது குந்தளத்துக்கு முதலில் கல்யாணம் பண்ணிவையுங்கள். பிறகு என் கல்யாணத்தைப் பற்றி பேசலாம் என்று சுந்தரம் விதண்டாவாதம் செய்தானென்று சொன்னேனில்லையா? அதுகூட அப்படியே எழுதியிருக்கு இந்தப் புத்தகத்தில். சுந்தரம் சொல்லாவிட்டால் எனக்கும் அவனுக்கும் அன்று நடந்த வாக்குவாதம் இந்தப் பெண் சாந்தாவுக்கு எப்படித் தெரியும்? குந்தளத்துக்கு கல்யாணம் செய்துவைக்க வேண்டுமென்று ஏன் அத்தனை அக்கறையோடு அவன் சண்டைபோட்டான் தெரியுமில்லையா? இப்படித்தான் அவன்சங்கதி ஒவ்வொன்றாக வெளிவருகிறது. சாந்தா என்ற பெண் பால்யத்திலேயே கல்யாணம் நடந்து புருஷனை இழந்தவளாம். அவளுக்கும் சுந்தரத்துக்கும் பட்டணத்திலிருக்கும் பொழுதே சிநேகமாம். ஒரு விதவைப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளணும் என்றால் நாம் சம்மதிக்கமாட்டோமென்று தெரியும். அதற்காகவே முதலில் குந்தளத்துக்குக் கல்யாணம் செய்துவைத்தால் பிறகு அவன் சாந்தாவைக் கல்யாணம் செய்துகொள்ள யாரும் தடைசொல்லமாட்டார்களென்று நினைத்திருக்கிறான். என்ன துணிச்சல் பார்த்தாயா அம்புஜம் உன் பிள்ளைக்கு? கல்யாணம் செய்துகொண்டதுமில்லாமல் புத்தகமும் எழுதச் சொல்லியிருக்கிறான் பார்?" என்றார் அய்யர்.

"அட பாவிப்பயலே! போயும் போயும் ஒரு விதவைப் பெண்ணையா கட்டிக்கணும்? அப்படியே ஜாதி மதத்தையெல்லாம் விட்டு ஊரெல்லாம் சிரிக்கும்படி விதியிருந்தால் அந்தப் பெண்ணை ஏன் கட்டிக்கணும்? மலைமாதிரிவளர்த்து கண்ணும் கண்ணீருமாய் நிறுத்திவைத்திருக்கிறோம் நம் குழந்தை குந்தளத்தை! அவளைக் கல்யாணம் செய்துகொண்டு அவளை சுகப்படுதினாலாவது மனம் கொஞ்சம் ஆறுதலாயிருக்குமே" என்றாள் அம்புஜம்.

"அம்புஜம்! குந்தளத்தின் பேச்சை எடுக்காதே. உன் பிள்ளை குந்தளத்தை கல்யாணம் செய்துகொண்டிருந்தால் நீ சும்மா இருந்திருப்பாயா? என் காலடியிலேயே நாக்கைப்

பிடுங்கிக்கொண்டு பிராணனை விட்டிருப்பாய். இப்பொழுது ஒப்புக்குப் பேசுகிறாய்! இப்படி சமயத்துக்கு ஒரு மாதிரி பேசுவது எனக்குப் பிடிக்காது!'' என்றார் அய்யர் சிறிது கடுமையாக.

“இதோ சாந்தாவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டான் சுந்தரம். அதற்கு என்ன செய்துவிட்டோம்? அவமானம் தாங்காமல் உயிரை விட்டுவிடவில்லையே! இப்படி ஏற்படும் அவமானம் குந்தளத்தைக் கல்யாணம் செய்து கொண்டு ஏற்பட்டாலாவது அவள் சுகப்படலாம். இதில் என்ன தவறு!'' என்றாள் அம்புஜம்.

“எனக்கு அந்த எண்ணம் ரொம்ப நாளாகவே இருந்தது. குழந்தைகளாயிருந்தபொழுது ஒரு நாள் இரவு சுந்தரத்தைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று குந்தளம் பிடிவாதம் பண்ணியதும் அவர்களுக்கு விளையாட்டாக மாலை மாற்றி கல்யாணம் செய்ததும் உனக்கு இப்பொழுது ஞாபகம் இருக்கிறதோ இல்லையோ! அப்பொழுதே நினைத்தேன் இவர்கள் இப்படியே தம்பதிகளாய் இருந்துவிடக்கூடாதா என்று. ஆனால் நீ இடம்கொடுக்கவில்லை. பிள்ளையைப் பட்டணத்துக்குப் பிரித்துக்கொண்டு போனாய். இதுமட்டுமா? உன் காரியங்கள் ஒவ்வொன்றையும் சொன்னால் உனக்கு ஆத்திரம்தான் வரும். சதாசிவகுருக்கள் இங்குவந்து என் குழந்தையைப்பற்றி ரசாபாசமாகப் பேசியதற்கு யார் காரணமென்பது எனக்குத் தெரியாதென்று நினைத்துக்கொண்டிருக்கிறாய்? அப்படித்தானே'' என்று கொஞ்சம் கோபத்துடன் கேட்டார் அய்யர்.

“நான்தான் வரச்சொன்னேன் என்று சொல்லிவிட்டேன்'' என்றாள் அம்புஜம்.

“உண்மையை மறைத்துவிட முடியாது அம்புஜம். என்றைக்காவது ஒரு நாள் அது வெளிவரத்தான் செய்யும். சுந்தரமும் குந்தளமும் தனியாக கிராமத்துக்குப் போவது பிடிக்கவில்லை யென்றால் ஆரம்பத்திலேயே நீ என்னிடம் அதைச்

சொல்லியிருக்கலாம். அவர்கள் போனபிறகு வீட்டு வேலைக்காரி என்னவோ உளறினாளென்பதை மனதில் வைத்துக் கொண்டு சதாசிவ குருக்களை கூப்பிட்டுவரச்சொன்னாய். குந்தளமும் சுந்தரமும் தனியாக கிராமத்துக்குப் போயிருப்பதைப்பற்றி ஊரெல்லாம் ரசாபாசமாய்ப் பேசுகிறார்களென்றும் சுந்தரத்துக்கு உடனே ஒரு கல்யாணம் செய்துவைக்காவிட்டால் மானம் போய்விடுமென்றும் என்னிடம் குருக்களை சொல்லச்சொன்னாய். இதெல்லாம் குருக்களே பிறகு என்னிடம் சொன்னார். பூனை கண்ணை மூடிக்கொண்டால் உலகமே அஸ்தமித்துவிட்டதென்று நினைத்துக்கொள்ளுமாம். அது மாதிரி எனக்கு ஒன்றுமே தெரியாதென்று நினைத்துவிட்டாய். வயதுகாலத்தில் உன்னிடம் சண்டைபோடுவானேன் என்று நினைத்து நான் வாயை மூடிக்கொண்டிருந்தால் காரணமில்லாமல் குந்தளத்தின் பெயரை ஏன் இழுக்கிறாய்? பாவம். எத்தனையோ சுகமாகவும் சந்தோஷமாகவும் இருக்க வேண்டிய குழந்தை சந்நியாஸிமாதிரி காலம் தள்ளுகிறது. சிறுவயதிலேயே அவள் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டமாதிரி வாழ்க்கையைக் குட்டிச்சுவர்பண்ணியதற்கு நான் எந்த நரகத்துக்குப் போகப்போகிறேனோ. குழந்தை வீட்டை விட்டு வெளியே போனதுண்டா இந்த ஊரில்? பெயருக்கு ஒரு நாள் சினிமா பார்த்திருப்பாளா? நம் வாழ்க்கை இவ்வளவுதானென்று நினைத்து கிராமத்தைக் கட்டிக்கொண்டு உயிரை விடுகிறாள். அவள்மீது ஊரில் அப்படிப்பேசுகிறார்கள் இப்படிப் பேசுகிறார்களென்று அபாண்டப் பழிகளை சுமத்தி என்னிடம் புகார் செய்யச் சொன்னாய் குருக்களிடம்;'' என்று மூச்சுவிடாமல் கோபத்தோடு சொன்னார் அய்யர்.

அம்புஜம்: ''எல்லாம் நல்லதற்குத்தான் சொன்னேன். இப்படி நடக்குமென்று யார் கண்டார்கள்! இப்பொழுது ராமாயணம், மகாபாரதம் மாதிரி கதை பேசுகிறாய். குந்தளத்துக்கும் சுந்தரத்துக்கும் கல்யாணம் செய்துவைக்க நீ சம்மதித்திருப்பாயா அப்பொழுது? கஷ்டம் வந்த பிறகு அப்படி நினைத்தேன் இப்படி நினைத்தேன் என்று சொல்வது சுலபம்!''

'நீ மட்டும் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், சமிக்ஞை யாகவேனும் ஆதரவு காட்டியிருந்தால் ஜாதி மதம், கட்டுப் பாடு எல்லாவற்றையும் மூட்டைகட்டிக் கடலில் போட்டு விட்டு கல்யாணத்தை நடத்தியிருப்பேன். யார் எவ்வளவு வேண்டுமானாலும் தூற்றட்டும். என் காலம் ஆகிவிட்டது. இன்னும் ஒரு வருஷமோ இரண்டு வருஷமோ! சமூகப் பிசாசுகளின் வசைமொழியை என்னால் சகித்துக்கொள்ள முடியும். குழந்தையின் நிலைமையைப் பார்க்கும் பொழுதுதான் ஒவ்வொரு நிமிஷமும் நெஞ்சு வெடித்துவிடும்போலிருக்கிறது. நான் என்னனவோ கோட்டைகளெல்லாம் கட்டினேன்!''

"அதற்கு ஒரு எமனாக நான் வாய்த்தேன். அப்படித் தான் சொல்லேன்! பாஸ்கரா! இதோபார் இப்பொழுது சொல்லுகிறேன். கடவுள் சாட்சியாக குந்தளத்துக்கு மறு கல்யாணம் செய்துவைக்க நீ ஆசைப்பட்டால் தாராளமாகச் செய். அதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. சுந்தரம் சாந்தா வைக் கல்யாணம் செய்துகொண்டு விட்டதற்காக நான் இப் படிச் சொல்வதாக நினைக்காதே. நம் குழந்தையின் சுகம்தான் நமக்குப் பிரதானம். சொத்து சுதந்திரம் எல்லாம் குந்தளத் தின் பெயரிலிருக்கிறது. நம்மைக் கேட்காமலே அவள் யாராவது ஒருவனை திடீரென்று கல்யாணம் செய்துகொண்டுவிட் டால் நாம் என்ன செய்ய முடியும்? சாந்தாவைப்போலில்லை குந்தளம் என்றாலும் மனித சுபாவம் ஒரேமாதிரி யிருக்காது எப்பொழுதும்! புத்திசாலித்தனமாக குந்தளத்துக்கு ஒரு கல்யாணத்தை நாமே செய்துவைத்து அதனால் வரும் லாப நஷ்டங்களைச் சகித்துக்கொள்ளுவதுதான் நல்லது சுந்தரம் விஷயம்மாதிரி நடப்பதைவிட! அந்தப் பாவிப்பயலுக்கே குந் தளத்தைக் கல்யாணம் செய்துவைத்திருந்தால் குடும்பத் தோடு குடும்பமாகியிருக்குமே!'' என்றாள் அம்புஜம்.

"அதுமட்டுமில்லை! சொத்து எல்லாம் சுந்தரத்துக் குக் கிடைத்திருக்கும்!'' என்று வெறுப்புடன் சொன்னார் அய்யர்.

பக்கத்து அறையிலிருந்து இந்த சம்பாஷணை முழுவதை யும் கேட்டுக்கொண்டிருந்த குந்தளம் அதற்கு மேல் அங்கி ருந்தால் தெரிந்துவிடுமென்று நினைத்து சந்தடி செய்யாமல் புத்தகசாலைக்குப் போனாள்.

அய்யருக்கும் அம்புஜத்துக்கும் நடந்த சம்பாஷணை குந் தளத்துக்கு ஞானோதயம் ஏற்பட்டதுபோலிருந்தது. ஒரு சமயம் விதவா விவாகத்தைப்பற்றி தன்னுடன் பிரமாதமாக சங்கரி தர்க்கம் செய்ததும்கூட தனது மனதை அறிய தகப்ப னாரினால் தூண்டப்பட்டிருக்குமோ என்று தோன்றியது இப்பொழுது. தகப்பனாரின் மனோபாவம் அவளுக்கு ஆச்ச ரியத்தை விளைவித்தது. தன் நிலைமைக்காக தகப்பனாரை ஒருகாலத்திலும் அவள் நொந்துகொண்டதில்லை. "அவர் என்ன செய்வார் பாவம்! இனஜனங்களின் பேச்சுக்குப் பயப் படுகிறார். வயது காலத்தில் குடும்பத்துக்கு கெட்டபெயர் ஏற்படக் கூடாதென்று அப்பா நினைப்பது இயற்கைதானே! என் தலைவிதிக்கு அவர் மீது குறை சொல்லி என்ன பயன்?" என்றெண்ணி குந்தளம் தன் வினைப்பயனையே நொந்துகொள் ளுவாள். அத்தை மட்டும் சிறிது ஆதரவு காட்டினால் சுந்த ரத்துக்கே தன்னை மணம் செய்து கொடுத்துவிட தகப்பனார் தயாராயிருந்தது குந்தளத்துக்கு எதிர்பாராத புதிய செய் தியாயிருந்தது.

"முனிசாமி சொன்னதின் உண்மை இப்பொழுதுதான் தெரிகிறது. வேண்டுமானால் குந்தளத்தை நானே மணந்து கொள்ளுகிறேன் என்று அத்தான் சொல்லியபொழுது அதற்கு அப்பா சம்மதிக்காத காரணம் இஷ்டமில்லாமலில்லை. அத்தைக்குப் பயந்துதான். என் சுகத்துக்காக உலகத் தையே பகைத்துக் சொள்ளவும் அப்பா தயங்காமலிருந்திருக் கிறார். அத்தையிடம் சற்று முன் அவர் பேசியது உண்மை யாயிருக்குமானால் இந்த நிமிடமே நான் விரும்பிச் சொன் னால் எனக்கு மறுமணம் செய்து வைக்க அப்பா பின் வாங்க மாட்டார்!" இப்படி குந்தளம் சிந்தனை செய்துகொண்டிருக் கையில் அய்யர் உள்ளே நுழைந்தார்.

அய்யர்:- என்னம்மா குந்தளம், இப்படி பிரமைபிடித்த மாதிரி உட்கார்ந்திருக்கிறாய்?

குந்:- ஒன்றுமில்லையப்பா! கைத்தறி வேஷ்டிகளுக்கு இப்ப நல்ல கிராக்கியிருக்கு. நம் கிராமத்தில் இன்னும் ஏழெட்டு புதிய தறிகளை வாங்கிவைக்கலாமா? என்று யோசனை செய்துகொண்டிருந்தேன்.

அய்யர்:- உனக்கு எப்பொழுதும் கிராம சிந்தனைதான். அது கிடக்கட்டும் குந்தளம். நான் ஒன்று சொன்னால் ஏன் என்று கேட்காமல் சரியென்று ஒப்புக்கொள்வாயா?

குந்:- என்றைக்காவது உங்கள் பேச்சுக்கு மறுபேச்சு பேசியதுண்டா அப்பா!

அய்யர்:- இதோ பார்! இது சாந்தா எழுதிய கடைசி புத்தகமாம்! வஸுவிடமிருந்து இன்று காலை வந்தது. இதை நீ படிக்கக்கூடாது.

குந்:- சரியப்பா! அது உங்களிடமே இருக்கட்டும்.

அய்யர்:- நான் ஏன் இப்படிச் சொல்கிறேன் தெரியுமா?

குந்:- அதைப்பற்றி எனக்குக் கவலையேயில்லை. நீங்கள் சொல்லிவிட்டால் அதன் அட்டையைக்கூட நான் பார்க்க மாட்டேன். உங்கள் பெண்ணிடத்தில் அவ்வளவு நம்பிக்கையில்லையா?

அய்யர் சிறிது நேரம் வேறு ஏதோ பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனார். குந்தளம் காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக்கொண்டு உட்கார்ந்தாள். அவளுக்கு மன நிம்மதி குலைந்தால் அதன் காரணங்களை உடனே எழுத்தில் கொட்டித்தள்ளிவிட வேண்டும். சொந்த விஷயங்களை அந்தரங்கமாக எழுதித் தீர்த்து ஆறுதலடைய வஸுமதியைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள் குந்தளத்துக்கு?

இப்படியே இரண்டு மாதங்கள் மேலும் கழிந்தன. ஒரு நாள் சங்கரி விதவா விவாக தர்க்கத்தை மறுப்படியும் கிளப்பி

ளுள் குந்தளத்தினிடம். அப்பொழுது சொன்னாள், "உன் விஷயத்தையே எடுத்துக்கொள் குந்தளம்! இந்த வயதில் நீ எப்படி இருக்கவேண்டியவள்? உலக சுகங்களிலிருந்து உன்னை ஒதுக்கிவைப்பது அநியாயமில்லையா?" என்று.

குந்:- "தாம்பத்திய வாழ்க்கையில்தான் உலக சுகம் முழுவதும் அடங்கியிருக்கிற தென்பது உங்கள் அபிப்பிராயமா?"

சங்கரி:- வேதாந்தி மாதிரி பேசாதே. நீ வேண்டுமானுல் மனதை அடக்கிக்கொண்டு மர உறி தரித்த சந்யாசி போலிருக்கலாம். எல்லாப் பெண்களும் அப்படியிருப்பார்களா? கௌரவமாக மறுமணம் செய்து வைக்காவிட்டால் பால்ய விதவைகள் ரகசியமாக விபசாரத்தில் ஈடுபட்டு கெட்டுப்போகிறுர்கள். அதுமட்டும் சமூகத்துக்கும் மதத்துக்கும் தெய்வத்துக்கும் சம்மதமானதா? இதோ பார் ஒரு இளம் விதவைப் பெண் தன் தகப்பனுருக்கு எழுதிய உருக்கமான கடிதத்தை. அதை வாசித்தால் கல் நெஞ்சமும் இளகிவிடும். இதைப் படித்துவிட்டுச் சொல்லு நியாயம் எவர் பக்கத்திலிருக்கிற தென்பதை!

ஏதோ ஒரு புத்தகத்திலிருந்து கிழித்த இரண்டு காகிதங்களை குந்தளத்தினிடம் கொடுத்தாள் சங்கரி. அதில் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது:

அன்புள்ள அப்பா!

நான் ஒரு பாபி; பெரிய துர்அதிர்ஷ்டசாலி. என்னுடைய துணிகரமான நடவடிக்கை உங்களைத் திடுக்கிடச் செய்யும். குடும்ப கௌரவத்தைச் சீர்குலைத்துவிட்ட துரோகியென்று என்னை சபிக்கவும் சபிப்பீர்கள்." எவனுடனே ஓடிவிட்டாளென்று என்னை நம் சமூகம் தூற்றும். அற்ப விஷயத்தை கதைபோல கை, கால், மூக்கு எல்லாம் வைத்துப் பிரசாரம் செய்வதிலே நமது பிராமண சமூகம் பெயர் போனது. அவர்கள் வம்பளப்பதற்கு நான் இடம் வைத்துவிட்டேனே என்று நீங்கள் துக்கப்படுவீர்கள். ஆயினும்

என்னுடைய தற்போதைய நிலைமையில் நான் வேறு விதமாக நடந்துகொள்ளுவதற்கில்லை.

பரிசுத்தமான தென்றும் ஆழ்ந்த தத்துவங்களை அடிப்படையாகக்கொண்டதென்றும் உலகெல்லாம் போற்றப்படும் இந்து சமுதாயத்திலே நான் பிறந்தேன். அதனிடம் நான் மிகுந்த பற்றுதலும் வைத்திருந்தேன். அந்த சமுதாயம் விதவையென்ற இழிய பெயரைச்சூட்டி பல வருடங்களுக்கு முன்னரே என்னை ஒதுக்கித் தள்ளிவிட்டது. என்னை ஒதுக்கிய சமுகத்தை நானும் ஒதுக்கிவிட்டு வெளியேறுவது தானே மரியாதை? வேண்டாம் போ என்று தள்ளுமிடத்தில் அட்டைபோல ஒட்டிக்கொண்டிருப்பது முறையல்லவே!

அப்பா! உங்களைவிட நான் அறிவாளியோ அல்லது உலக அனுபவம் உடையவளோ இரண்டுமில்லை. ஆனால், ஆண்டவன் கொடுத்த பகுத்தறிவைக்கொண்டு நான் எழுதும் விஷயங்களை பொறுமையுடன் படிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

தீண்டார்தார் என்று சொல்லி பல்லாயிரக்கணக்கான ஜனங்களை நமது சமூகம் ஏற்கனவே ஒதுக்கி வைத்திருக்கின்றது. அவர்கள் கூட்டம் கூட்டமாக பிறமதங்களில் சேர்ந்துகொள்ளுவதை பிரத்யக்ஷமாக நாம் பார்க்கிறோம். என்னைப்போன்ற இளம் விதவைகளும் இந்துமதத்தைத் திரஸ்கரிப்பதென்று ஏற்பட்டால் பழம் பெருமைவாய்ந்த நமது சமுதாயம் எவ்வளவு பயங்கரமான நிலமைக்கு வந்துவிடுமென்பதை கொஞ்சம் யோசித்துப்பாருங்கள். இந்த நிலமை ஏற்பட உடந்தையாயிருப்பவர்கள்தான் சனாதன தர்மகர்த்தாக்களா? வரட்டுவேதாந்தம் பேசுகிறவர்கள் இந்த உண்மையை ஏன் உணர மறுக்கின்றனர்?

பூவுலகிலுள்ள ஜீவராசிகளெல்லாம் ஒரே கடவுளால் படைக்கப்பட்டவை. பசி, தாகம், ஆசை, பாசம் முதலான உணர்ச்சிகளை சகலருக்கும் ஏற்படுத்தியிருக்கிறான் ஆண்டவன். மனித சஞ்சாரமற்ற வனாந்திரங்களிலே மரஉறி தரித்து

காய் கிழங்குகளைப் புசித்து உலகப் பற்றில்லாது துறவறத்தைக் கடைபிடிக்கும் முனீச்வரர்களே காமத்துக்குப் பலியாகி கருத்திழந்திருப்பதாய் இந்து சமுதாயப் புராண இதிகாசங்கள் கூறுகின்றன. மனதை கட்டுப்படுத்திய மகரிஷிகளின் நிலைமையே இதுவென்றால் பாலும் பழமும் அறுசுவை அன்னமும் புசித்து ஆயிரக்கணக்கான வாலிபர்களின் மத்தியில் வாழும் இளம் கைம்பெண்கள் ஐம்புலன்களையும் அடக்கி முனிவர்களுக்கு முன்மாதிரியாயிருப்பார்களென்று எதிர்பார்க்க முடியுமா? இப்படி எதிர்பார்ப்பது மனித அறிவிற்குப் பொருத்தமானதுதான் ஆகுமா?

அப்பா, பெண்கள் ஆண்களைவிட இளகிய மனதுடையவர்களென்றும் சபலசித்தம் கொண்டவர்களென்றும் சொல்கிறார்கள். காமமும் கஸ்தூரியும் கட்டுக்கடங்காதென்பதைப்போல இந்த இளம் பெண்கள் புத்திபேதலித்து ஒழுங்குதவறி நடந்துவிட்டால் அவர்கள் கதியென்ன? கர்ப்பிணியான கைம்பெண்கள் ஆற்றிலும் கிணற்றிலும் விழுந்து தற்கொலை செய்துகொண்டதாக பத்திரிகைகளில் அடிக்கடி நாம் படிக்கவில்லையா? நாட்டில் விபசாரம் பெருக ஊக்கமளிப்பது இளம் விதவைகளா அல்லது அவர்களை விதவைகளாக வைத்திருக்கும் கொடிய சமூக சம்பிரதாயங்களா? இவ்வித அனர்த்தங்களுக்கும் ஆபாசங்களுக்கும் இடமளிக்காமல் இளம் கைம்பெண்களுக்கு மறுமணம் செய்துவிட்டால் அவர்கள் கௌரவமாக வாழ்க்கையை நடத்தமாட்டார்களா? பழங்காலத்தைப்போல உடன்கட்டை ஏறிவிட்டாலாவது இந்தச் சடலம் நெருப்பில் சாம்பலாகிப் போகும்? உயிருடன் வைத்து வதைசெய்வது கொடுமையிலும் கொடுமை. உடன்கட்டையேறுவதைச் சட்டவிரோதமாக்கிய அரசாங்கத்துக்கு விதவை மணத்தைக் கட்டாயப்படுத்தக் கண்ணில்லாமல் போய்விட்டதே! இந்து சமுதாயம் எப்படி குட்டிச்சுவராய்ப் போனால்தானென்னவென்று நினைத்ததுபோலிருக்கிறது நம்மை அடக்கியாண்ட அந்நிய அரசாங்கம்!

அப்பா! அரசியல் விடுதலைக்குப் பேசுகிறார்கள் மேடைக்கு மேடை! ஜனத்தொகையிலே கிட்டத்தட்ட சரி பாதியினரான பெண்களை அடிமைப்படுத்தி வைத்திருக்கும் நம் ஆடவர்களுக்கு அந்நிய ஆதிக்கத்தைப்பற்றி பேச நாக்கு ஏது? வீட்டிலே அவர்கள் நடத்தும் கொடுங்கோலை நாட்டிலே இன்னொருவன் நடத்துகிறான். ஆயிரக்கணக்கான இளம் இந்து விதவைகளின் கொடிய சாபம்தான் நாட்டை நிரந்தர அடிமைத்தனத்தில் வைத்திருக்கிறது. பெண்களுக்கு விடுதலை கிடைக்கும்வரை, இளம் விதவைகளின் துயரம் நீங்கும்வரை, தேசத்துக்கும் விமோசனம் எப்படிக் கிடைக்கும்?

அப்பா! புரட்சிக்கவி பாரதிதாஸனை நீங்கள் படித்திருக்கமாட்டீர்கள். அவர் பாட்டு ஒன்றை இங்கு எழுதுகிறேன் பாருங்கள்:

பேடகன்ற அன்றிலைப்போல் மனைவி செத்தால்
 பெருங்கிழவன் காதல்செய்யப் பெண் கேட்கின்றான்
வாடாத பூப்போன்ற மங்கை நல்லாள்
 மணவாளன் இறந்தால்பின் மணத்தல் தீதோ?
பாடாத தேனீக்கள் உலவாத் தென்றல்
 பசியாத நல்வயிறு பார்த்ததுண்டோ?
இளமை தந்தாய், உணர்வு தந்தாய் இன்பங்காணும்
 இன்னுயிரும் தந்திட்டாய் இயற்கை தேவீ,
வளமையற்ற நெஞ்சுடையார் இந் நாட்டார்கள்
 மறுக்கின்றார் காதலினை கைம்மை கூறி.

இப்படி எழுதியவனை பயித்தியக்காரனென்றும் நாஸ்திகனென்றும் மதத் துரோகியென்றும் சபிப்பீர்கள். ஆனால் உங்கள் மதத்திற்கு நீங்களே உண்மையில் குழிதோண்டுகிறீர்களென்பதை உணரமாட்டீர்கள். அப்பா! என் மனச்சாட்சியை வஞ்சித்து நடக்க நான் தயாரில்லை. உலகமே எதிர்த்தாலும் அதை மதிக்காமல் என் மனச்சாட்சியின் படி நடக்க நான் தீர்மானித்துவிட்டேன். என்னை இனி எந்த சக்தியினாலும் தடைசெய்ய முடியாது. நான் செய்யும்

காரியம் என்னைப் படைத்து எனக்கு உணர்ச்சிகளையும் கொடுத்த தெய்வத்துக்கு பூரண சம்மதமானது என்ற நம்பிக்கையுடன் வீட்டைவிட்டு வெளியேறுகிறேன். போய்வருகிறேன். நமஸ்காரம்.

உங்கள் பெண்,
அபாக்கியவதி வனஜா.

இவ்வாறு அச்சிடப்பட்ட காகிதங்களை குந்தளம் படித்ததும் படிக்காததையும்போல் ஓட்டமாகப் பார்த்துவிட்டு சங்கரியிடம் கேட்டாள், "அம்மா! எனக்கு ஒன்றும் தெரியாதென்று நினைத்துவிடாதீர்கள். இது சாந்தா எழுதிய விதவை வனஜா என்ற புத்தகத்திலிருந்து கிழித்த பக்கங்களில்லையா? நடையைப் பார்த்தாலே சாந்தாவின் புத்தகமென்று அதன்மேல் எழுதி ஒட்டியிருக்கிறதே!" என்றாள்.

சங்கரி:- யார் எழுதியதானாலென்ன? கதை இதுதான். இப்படி எழுதிய வனஜா வீட்டைவிட்டு ஓடிவிட்டாள். அவள் விரும்பிய சேகரன் என்ற பையனும் அவனுக்கு ஏற்பாடுசெய்த கல்யாணத்துக்கு முதல்நாள் வீட்டைவிட்டு ஓடிவிடுகிறான். பிறகு சேகரும் வனஜாவும் கல்யாணம் செய்துகொள்ளுகிறார்கள். இது கதையாயிருந்தாலும் நிஜ வாழ்க்கைக்கு எவ்வளவு பொருத்தமாயிருக்கிறது பார்த்தாயா?

குந்தளம்:- அம்மா! என்னுடைய தாயாரை எனக்குத் தெரியாது. சொந்தத் தாயைவிட அருமையாக வளர்த்தவர்கள் நீங்கள். நான் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேன் உங்களுக்கு. என் மனதில் தோன்றுவதை உங்களிடமிருந்து மறைப்பானேன்? நீங்கள் என் வாயைக் கிண்டுவதின் அர்த்தம் எனக்குத் தெரியாமலில்லை. சாந்தாவின் புத்தகம் வந்தபொழுது அப்பா அதை என்னிடம் காட்டி நான் வாசிக்கக்கூடாதென்றார். அந்தக் கதையில் வனஜா செய்தமாதிரி நானும் எங்கேயாவது ஓடிப்போய்விடுவேனோ என்று அவர் பயப்படுகிறமாதிரி இருக்கிறது கொஞ்ச நாளாக எனக்கு ஏற்படுத்தியிருக்கும் கட்டும் காவலும்! இதெல்லாம் எனக்குத் தெரியாதென்று நினைத்துக்கொண்

டிருக்கிறீர்கள். சாந்தாவின் வனஜாமாதிரியில்லை இந்த குந்தளம்! என் மனதையறிய அப்பாவின் தூண்டுதலின்பேரிலேயே இப்படியெல்லாம் கேட்கிறீர்களென்பது எனக்குத் தெரியும்.

சங்கரி:- உன்னிடம் பொய்சொல்வானேன்! இந்தப் புத்தகம் வெளியானதுமுதல் உன் அப்பாவுக்கு மனநிம்மதியேயில்லை. நீ மறுமணம் செய்துகொள்ள விரும்பினுல் தடையில்லாமல் செய்துவைக்க அவர் தயாராயிருக்கிருர். எவர் என்ன சொன்னுலும் ஜாதியைவிட்டே தள்ளினுலும் அவர் கவலைப்படமாட்டார். நீ அப்பாவை இந்தத் தள்ளாத வயதில் விட்டுப் போய்விடுவாயோ என்பதுதான் பெரும் கவலையாயிருக்கிறது. இதை உன்னிடம் நேரில் சொல்லவும் அவருக்கு லஜ்ஜையாயிருக்கிறது.

குந்:- சரி! அப்பாமட்டும் இப்படி நினைத்தால் போதுமா? அத்தை?

சங்:- உன் விஷயத்தில் அத்தையும் குறுக்கே நிற்கமாட்டாள். என் சொந்த அபிப்பிராயத்தைக் கேட்டால் நீ கல்யாணம் செய்துகொள்வதுதான் நல்லது.

குந்:- அம்மா! நானும் அப்படி நினைத்ததுண்டு. உண்மையைச் சொல்லுகிறேன் சுந்தரம் அத்தானிடம் நான் உயிரையே வைத்திருந்தேன். அவர் போனபிறகு இந்த எண்ணமே எனக்குக் கிடையாது. என் வாழ்வில் மறுபடியும் மணம் என்ருல் அவர் ஒருவரைத்தான் ஹ்ருதயம் நாட முடியும். இல்லாவிடில் வாழ்நாள் முழுவதையும் தனிமையில் கழித்துவிட எனக்குச் சக்தியிருக்கிறது.

சங்:- அவனுக்குத்தான் கல்யாணமாகிவிட்டதே!

குந்:- அதெப்படித் தெரிகிறது?

சங்:- எப்படியோ தெரிகிறது. அவனை நினைப்பதில் இனிப் பிரயோசனமில்லை.

குந்:- அவருக்கு மணமாகியிருக்குமென்று என் மனம் நம்ப மறுக்கிறது. உண்மையில் அவருக்குக் கல்யாணமாகி யிருந்தால் அதன்பிறகு என்னைப்பற்றி யாருமே கவலைப்பட வேண்டியதில்லை. தெய்வசாட்சியாக மணமின்றி நான் தூய வாழ்க்கை நடத்துவேன்.

சங்:- அழகாயிருக்கிறது குந்தளம் நீ பேசுவது? சுந் தரத்தைவிட்டால் வேறுயாருமே இல்லையா இந்த உலகத்தில்?

குந்:- என் சம்பந்தப்பட்டவரையில் இல்லைதான். என் மனதை மாற்ற உலகத்தில் எந்த சக்தியினாலும் முடியாது. எனக்கு நீங்கள் ஒரேஒரு வாக்குறுதிமட்டும் கொடுங்கள். சுந்தரம் அத்தான் கல்யாணம் ஆகாமலிருந்து என்னை மணந்துகொள்ளவும் அவர் தயாராயிருந்தால் அப்பொழுது எங்கள் கல்யாணம் நடக்க உதவிசெய்வேனென்று உறுதி சொல்லுங்கள். எனக்கு அது போதும்.

சங்கரி:- நிச்சயமாக சந்தேகமேவேண்டாம். உன் அப் பாவே கல்யாணத்தை சிறப்பாக நடத்திவைப்பார் குந்தளம்.

# 13. மனம் திறந்தது

குந்தளத்துக்கு சங்கரி உறுதிகூறிய அதே சமயத்தில் "நிச்சயமாக! சந்தேகமே வேண்டாம்!" என்றார் வேறொரு வர் வேறொரு தேசத்தில்!

லீலாவுக்கும் நடராஜனுக்கும் இதற்குள் சிறப்பாகக் கல்யாணம் நடந்தேறிவிட்டது. கல்யாணத்துக்கு இந்தியா விலிருந்து மோகனும் வந்திருந்தான். அவனும் ரமணியும் போட்டி போட்டுக்கொண்டு விருந்தினர்களை உபசரித்தார் கள். ரமணியைப்போலவே பிரேமாவும் இந்தக் கல்யாணத் தில் விசேஷ ஊக்கம் காட்டினாள். அந்தக் கல்யாணம் சாதாரணக் கல்யாணமாயில்லை. ஒரு பெரிய கலைவிழாவைப் போலவேயிருந்தது. கல்யாணத்தின் முதல் நாளும் மறு நாளும் அருமையான கச்சேரிகளுக்கு ஏற்பாடாகியிருந்தது. தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தமிழ்மொழியில் மக்க ளுக்கு ஒரு புதிய பற்றுதலை உண்டுபண்ண ஒரு அற்புத மான கற்பனை நாடகத்தை எழுதி நடித்துக் காட்டினார்கள்.

இலங்கைப் பத்திரிகைகளெல்லாம் இக் கல்யாணத்தை யும் அத்துடன் நடந்த கலை விழாவையும்பற்றி பல பத்தி கள் எழுதியிருந்தன. நவலங்காவின் அட்டைப்படம் லீலா நடராஜன் படத்தைத் தாங்கிவந்தது.

கல்யாணத்துக்கு வந்திருந்தவர்களெல்லாம் நவலங்கா வையும் அதன் ஆசிரியர் ரமணியையும் வானளாவிப் புகழ்ந் தார்கள். இந்தப்புகழ்ச்சி சிலசமயங்களில் ரமணிக்கு மிகுந்தசங் கடமாகவுமிருந்தது. ரமணி நிற்குமிடங்களிலெல்லாம் பிரே மாவும் நின்ற பொழுது இருவரையும் சேர்ந்தாற்போல ஏற இறங்க சிலர் பார்த்ததோடு, ரமணி யாரென்பதை அறியாத ஒரு கிழவர் "இந்த தம்பதிகள் யார்?" என்றும் கேட்டுவிட் டார். அதைக்கேட்டு பிரேமா லஜ்ஜையுடன் அங்கிருந்து ஓட முயற்சித்தாள். ஆனால் பக்கத்தில் நின்ற லீலா அவளை விடவில்லை.

"என்னடி வெட்கம்?" என்றைக்காவது ஒரு நாள் ரமணியும், நீயும் அப்படி ஆகப்போகிறவர்கள்தானே! பெரியவர்கள் வாக்கு பலிக்குமென்பார்கள்! தாத்தா வாக்கு அப்படியே பலிக்கவேண்டும்!" என்று லீலா சொல்லியபொழுது பக்கத்திலிருந்தவர்கள் கொல்லென்று சிரித்துவிட்டார்கள். இது மாதிரிப் பல தர்மசங்கடமான கட்டங்களிலிருந்து ரமணி தப்பவேண்டியதாயிற்று.

உண்மையில் கல்யாணத்தின்பொழுது அவன் உடல்தான் சுறுசுறுப்பாக வேலைசெய்துகொண்டிருந்ததே தவிர அவன் மனம் முழுவதும் நூற்றுக்கணக்கான மைல்களுக்கப்பாலிருந்தது. மணப்பலகையில் உட்கார்ந்திருந்த லீலாவின் ஸ்தானத்தில் குந்தளத்தையும், நடராஜனின் ஸ்தானத்தில் தன்னையும், உட்காரவைத்து அவன் சிந்தித்தான். இந்தப் பாக்கியம் என்றைக்காவது ஒரு நாள் நமக்குக் கிட்டுமா என்று நினைத்தபொழுது ரமணிக்கு இதயமே வெடித்துவிடும் போலிருந்தது.

இரண்டு வாரங்கள் கழிந்தன. ஒரு நாள் லீலாவும் நடராஜனும் மாலை சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்த பொழுது அவர்களுடைய கல்யாணப்படத்தைத் தாங்கி வந்த நவலங்கா பத்திரிகை மேஜையின்மீது கிடந்தது லீலாவின் கவனத்தைக் கவர்ந்தது.

"இது மாதிரி பிரேமா-ரமணி படம் எப்பொழுதுதான் வெளிவரப்போகிறதோ?" என்றாள் லீலா.

"குந்தளப்பிரேமா கதையின் தலைப்பைப்பற்றி நான் நினைப்பது சரியாயிருந்தால் அதிசீக்கிரத்தில் அவர்களுடைய திருமணக்கோலப் படத்தையும் நவலங்காவில் பார்க்கலாம். நிச்சயமாக! சந்தேகமே வேண்டாம்!" என்றான் நடராஜன்.

"எனக்கு என்னவோ வரவர நம்பிக்கை குறைகிறது. பிரேமா, பாவம், ரமணியிடம் உயிரையே வைத்திருக்கிறாள். எப்பொழுதும் ரமணியைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தால்தான் அவள் மனம் சந்தோஷப்படுகிறது. அவள் புத்தகங்

களைப் படித்து எவ்வளவு மாதங்களாயிற்று தெரியுமா? ரமணியின் கதை தவிர வேறு எதையும் அவள் சமீபத்தில் படித்தது நான் பார்த்ததில்லை. ரமணி எழுதும் ஒவ்வொரு வார்த்தையும் அப்படியே மனப்பாடம் பண்ணிவைத்திருக்கிறாள். ஆனால்...........

நடராஜன்: ஆனால் என்ன?

லீலா:- ஆனால் பிரேமாவிடம் ரமணிக்கு கொஞ்சமும் நாட்டமிருப்பதாகத் தெரியவில்லை.

நடராஜன்:- பிரேமாவிடம் அவனுக்கு வெறுப்பு என்கிறாயா?

லீலா:- வெறுப்பு என்று சொல்லவில்லை. இருவரும் அந்நியோன்யமாகத்தானிருக்கிறார்கள். ஆனால் அந்த அந்நியோன்யம் சகோதரன் சகோதரிக்கிடையிலுள்ள அந்நியோன்யபாவமாயிருக்கிறதே தவிர காதலென்று கூறமுடியாது. ரமணி ஏதோ ஒரு பெரிய துறவி மாதிரி நடந்து கொள்ளுகிறான். எப்பொழுதாவது ரமணியும் பிரேமாவும் தனித்திருக்க வேண்டிய சந்தர்ப்பமேற்பட்டால் அவளுடன் தனித்திருக்க சங்கோஜமோ அல்லது வேறு என்ன காரணமோ கொண்டு அவசர வேலையிருப்பதாகச் சொல்லிவிட்டு நழுவிவிடுகிறானும்.

நடராஜன்:- அது உனக்கு எப்படித் தெரியும். பிரேமாசொன்னாளா?

லீலா:- ஆமாம்! வேறு யார் சொல்லுவார்கள்? அவளை நினைத்தால் என் மனம் எவ்வளவு சங்கடப்படுகிறது தெரியுமா? ரமணி ஏன் இப்படிப் பித்துப்பிடித்தமாதிரியிருக்கிறானென்பதுதான் பெரிய புதிர்மாதிரியிருக்கிறது.

நடராஜன்:- பிரேமாவுடன் தனித்திருக்க நேரிட்டால் ஓடிப்போய் விடுகிறானென்று சொல்கிறாய்? இருக்கட்டும் பார்க்கலாம். இதோ பார் லீலா! நான் சொல்லுகிறபடி செய்வாயா?

லீலா:- என்ன?

நடராஜன்:- இன்றிரவு நாம் லைலாமஜ்னு சினிமாவுக்குப் போகிறோம், என்ன? எப்படியாவது நீ பிரேமாவை அழைத்து வந்துவிட வேண்டும். ரமணி வருகிறானென்று சொல். கண்டிப்பாக அவளும் வருவாள். ரமணியை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.

அவ்வாறே அன்றிரவு சினிமாவுக்கு போவதென்று ஏற்பாடாயிற்று. நடராஜன் வற்புறுத்தியதின் பேரில் ரமணி படம் பார்ப்பதற்கு வரச் சம்மதித்தான். ரமணி வருகிறானென்றவுடன் பிரேமா தடையின்றி உடனே தானும் வர ஒப்புக்கொண்டாள். "பிரேமா! இன்று ஒரு பெரிய தமாஷ் நடக்கப்போகிறது? நல்ல உடையணிந்து வரவேண்டும் பார்த்துக்கொள். எல்லாம் உன்னுடைய நன்மைக்குத்தான் சொல்லுகிறேன்" என்றாள் லீலா

பிரேமா:- அப்படியென்ன தமாஷ்! அதற்கும் நான் நல்ல உடையணிந்து வருவதற்கும் என்ன சம்பந்தம்?

லீலா:- இப்பொழுது சொன்னால் ரஸனை போய்விடும்' நீயே நேரில் பாரேன்!

இரண்டு 'பாக்ஸ்' ஸீட்டுகளை நடராஜன் முன்னேற்பாடுகளுடன் அமர்த்திக்கொண்டு வந்தான்.

நால்வரும் சினிமாக் கொட்டகைக்குள் நுழைந்தவுடன் 'இதோபார் ரமணி! நாங்கள் புதுமணத்தம்பதிகள்! எங்களைப் பிரித்துவைத்தால் உனக்குத்தான் பெரிய பாவம்! லீலாவைத் தனியாகவிட்டு உன்னுடன் உட்காரமாட்டேனப்பா!' என்றான் நடராஜன்.

இது ரமணிக்குப் பெரிய அதிர்ச்சியாயிருந்தது. பிரேமாவையும் லீலாவையும் ஒரு 'பாக்ஸில்' உட்காரவைத்து தன்னுடன் நடராஜன் உட்காருவானென்று ரமணி எண்ணிக் கொண்டிருந்தான். எதிர்பாராமல் நடராஜன் திட்டம் வேறு விதமாயிருந்தது ரமணியைத் திகைக்கச் செய்ததுடன் தர்ம

சங்கடமான நிலைமையையும் உண்டுபண்ணியது. ரமணியின் பதிலை எதிர் பார்க்காமலே 'ஏன் நிற்கிறாய் லீலா! வா போவோம் நம் இடத்துக்கு!' என்று சொல்லி லீலாவை தன்னுடைய பாக்ஸிற்கு நடராஜன் அழைத்துக்கொண்டு போய் விட்டான்.

லீலா போகும்பொழுது 'பிரேமா! மிஸ்டர் ரமணியைப் பத்திரமாகப் பார்த்துக்கொள்! அடுத்த வாரம் நவலங்கா வர வேண்டும். அது மட்டுமில்லை! குந்தளப்பிரேமா கதையின் முடிவும் தெரியவேண்டும்!' என்று கிண்டலாகச் சொல்லிக் கடைக்கண்ணால் ஒரு தடவை ஏற இறங்கப் பார்த்துவிட்டுப் போனாள்.

தனித்துவிடப்பட்ட பிரேமாவுடன் உட்காரமறுத்தால் அவளை அவமதிப்பதாயிருக்குமென்று அஞ்சி நெருப்பின்மீது நடப்பதைப் போன்ற உணர்ச்சியுடன் பிரேமாவுடன் தன்னுடைய 'பாக்ஸிற்கு'ச் சென்று அதன் கதவை மூடிக்கொண்டான். சிறிதுநேரத்தில்விளக்குகளும் அணைக்கப்பட்டு, படம் ஆரம்பமாயிற்று.

சினிமாக் கொட்டகையில் விளக்குகளெல்லாம் அணைந்து படம் ஆரம்பமானவுடன் வெள்ளித்திரையைத் தவிர மற்ற இடம் முழுவதும் ஒரே இருள்மயமாயிருந்தது. கீழ்த் தளத்திலாவது வெள்ளித்திரையின் வெளிச்சம் சிறிது பிரதிபலித்தது. ஆனால் ரமணியும் பிரேமாவும் உட்கார்ந்திருந்த பெட்டி நாலாபுறமும் மூடப்பட்டு திரையைப் பார்ப்பதற்கு மட்டும் துவாரங்களுடையதா யிருந்தபடியினால் பெட்டிக்குள் மையிருட்டு நிலவியது.

ரமணியும் பிரேமாவும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ஒருவர் பக்கத்தில் ஒருவர் இருப்பது அவர்கள் விடும் சுவாசத்தில்தான் தெரிந்தது. ரமணி வெள்ளித் திரையைக் கவனமாகப் பார்த்துக்கொண்டிருந்தான். பிரேமா இமை கொட்டாமல் அவனிருந்த திசையையே பார்த்துக்கொண்டிருந்தாள். அப்பொழுது அவள் மனம் தீவிரமாக வேலைசெய்தது, இது மாதிரி இருவரும் தனித்திருக்கும் சந்தர்ப்பத்தை நானே ஏற்

பாடு செய்திருப்பேனென்று ரமணி நினைப்பானே என்றெண்ணியபொழுது அவளுக்கு மிகுந்த லஜ்ஜையாயிருந்தது! அரைமணிநேரமாகியும் இந்த மனிதன் ஒரு வார்த்தைகூடப் பேசாமலிருக்கிறானே என்று நினைத்தபொழுது அவளுக்கு ரமணியின் பேரில் கோபம் கோபமாக வந்தது. ஆனால் அந்தக் கோபத்தைக் காட்டிக்கொண்டால் காரியம் கெட்டுவிடுமென்பதும் அவளுக்குத் தெரியாமலில்லை.

உண்மையில் ரமணி படம்தான் பார்க்கிறானா? அல்லது அவனும் தன்னைப்போலவே சிந்தனை செய்துகொண்டிருக்கிறானா என்பதையறிய அவள் மிகவும் ஆவலுடையவளாயிருந்தாள். கடலுக்குள் நீர்மூழ்கிக் கப்பல்களிலே சஞ்சரிக்கவும், வானமண்டலத்தில் விமானங்களிலே ஊடுருவிப்பாயவும், பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கப்பால் பிறக்கும் சப்தத்தை ரேடியோ மூலம் பக்கத்தில் கொண்டு வரவும் அறிவுப்படைத்த மனித மூளைக்கு ஒருவர் மனதிலிருப்பதை மற்றொருவருக்குத் தெரியவைக்கும் சக்திமட்டும் இல்லாமற் போய்விட்டதே என்று அவள் வருந்தினாள். அடுத்த நிமிடம் ரமணிக்குத்தன்னிடம்பிரியமில்லையென்பதுதெரிந்துவிட்டால் மனம் எவ்வளவு வேதனைபடுமென்பதை எண்ணிப் பார்த்தபொழுது "இப்பொழுதாவது கனவு லோகத்தில் சஞ்சரித்துக் கோட்டைகளை கட்டிப்பார்த்துப் பூரித்துக்கொண்டிருக்கிறேன். ரமணிக்கு என்னிடம் சிறிதளவும் அன்பில்லாமலிருந்து, அது எனக்கும் தெரிந்து போய்விடுமானால் என் கனவுகளெல்லாம் குரூரமாகச் சிதைந்துவிடும். அவர் மனநிலைமை என் பக்கம் திரும்பும்வரை அவர்மனதில் என்ன இருக்கிறதென்பது எனக்குத் தெரியாமலிருந்தாலே நல்லது" என்று அவள் நினைத்தாள்.

இப்படிச் சிந்தித்தவள் சிறிது நகர்ந்து உட்கார்ந்தாள். அவளுடைய கால்கள் ரமணியின் கால்கள்மீது படவும் அவன் நெருப்பை மிதித்தவன் மாதிரி பட்டென்று காலை நகர்த்திக்கொண்டான்.

"மிஸ்டர் ரமணி! ஏன் இப்படி தூக்கிவாரிப்போட்டதுபோன்ற அதிர்ச்சி! இப்பொழுது கண்ணில் தூசி ஒன்றும் படவில்லையே!" என்று கேட்டாள் பிரேமா.

ரமணி:- ஒன்றுமில்லை பிரேமா! ஏதோ சிந்தனை செய்துகொண்டிருந்தேன். திடீரென்று சிதைந்துவிட்டது அந்த யோசனை.

பிரேமா:- அப்படியானால் கவனம் படத்திலில்லையென்று சொல்லுங்கள். நான் நினைத்தது சரியாகிவிட்டது.

ரமணி:- என்ன நினைத்தாய்? என்ன சரியாகிவிட்டது?

பிரேமா:- அதை நீங்களல்லவா சொல்லவேண்டும்.

ரமணி:- சொல்லும்படி அவ்வளவு பிரமாதமான விஷயம் ஒன்றுமில்லை.

பிரேமா:- பிரமாதமல்லவென்று நாம் நினைக்கும் விஷயங்களைக்கூட சில சமயங்களில் சொல்லுவதென்றால் வாய் வருவதில்லை!

இதற்கு ரமணி பதில் சொல்லவில்லை. சிறிதுநேரம் அந்த அறைக்குள் இருந்த அந்தகாரத்தோடு மௌனமும் போட்டிபோட்டது. சில நிமிடங்களுக்குப்பின் ரமணி கரம் தன்மீது பட்டதை உணர்ந்து பிரேமா புளகாங்கிதமடைந்தாள். இது ஒரு நொடிப்பொழுதுதான். அடுத்த வினாடியில் யுகயுகாந்திரமாக இன்பமனுபவிப்பதைப்போன்றிருந்த அவள் உணர்ச்சி திடீரென்று சிதைந்துபோயிற்று. ஆசையுடன் அவன் தன்னை அணைப்பதாக அவள் நினைத்தது சுத்தத் தவறென்பதை பிரேமா உணர்ந்துகொள்ள அதிகநேரம் பிடிக்கவில்லை.

"மன்னிக்கவேண்டும் பிரேமா! உன் பக்கமிருக்கும் ஸ்விட்சை கொஞ்சம் போடுகிறாயா?" என்று ரமணி கேட்கவே அவன் கரம் தேடியது மின்சார விளக்கின் ஸ்விட்சைத்தானென்பதைத் தெரிந்துகொண்டாள்.

"ஏன், இருட்டிலிருக்கப் பயமாயிருக்கிறதா? இங்கு வேறொருவருமில்லையே!" என்று சொல்லிக்கொண்டே பிரேமா ஸ்விட்சை அழுத்தவும் பெட்டிக்குள் மங்கலான சிறு வெளிச்சம் ஏற்பட்டது. அந்த வெளிச்சம் ஒருவர் முகம் மற்றொருவருக்குத் தெரிய போதுமானதாயிருந்தது. மங்கலான அந்த வெளிச்சத்தில் பிரேமா ஜகஜோதியாக விளங்கினாள். அவளுடைய ஒவ்வொரு அவயவத்திலும் அவற்றின் நெளிவிலும் அழகுக்களை சொட்டியது.

"மிஸ்டர் ரமணி! சென்றதை நினைத்து நினைத்து வருத்தப்பட்டால் அது வந்துவிடுமா? நான் தான்கேட்கிறேன்!" என்றாள் மேலும் சிறிது நேர மௌனத்துக்கு பிறகு.

ரமணி:- சென்றது எதை?

பிரேமா:-எது சென்றதோ அதை.

ரமணி:- நீ சொல்வது விளங்கவில்லை பிரேமா.

பிரேமா:- விளங்கக்கூடிய பாஷையில் பேசும் சந்தர்ப்பம் இன்னும் வரவில்லை. வரும்பொழுது விளங்கும்படி சொல்லுகிறேன். இதோ பாருங்கள் மிஸ்டர் ரமணி! இந்த இடத்தில் பூச்சிகள் இல்லை கண்ணில் வந்து விழுவதற்கு! விழுந்தால் நான்தான் வந்து விழவேண்டும்!! இப்பொழுதாவது சொல்லுவீர்களா நான் கேட்ட கேள்விக்கு விடை?

ரமணி:- கேள்வியே தெரியாமல் பதில் கேட்டால் என்ன சொல்ல?

பிரேமா:- அன்று நான் கேட்டேனே அதற்கு?

ரமணி:- அன்று என்ன கேட்டாய்?

பிரேமா:- உங்கள் கதைக்கு குந்தளப் பிரேமா என்று ஏன் பெயர் கொடுத்தீர்கள்?

ரமணி:- இதில் மர்மம் ஒன்று மில்லையே! கதாநாயகியின் பெயர் குந்தளம். அவளிடம் கோபால் வைத்திருந்த

பிரேமையின் அறிகுறியாக குந்தளப் பிரேமா என்று பெயர் வைத்தேன். .பெயரில் என்ன இருக்கிறது?

இந்த பதில் பிரேமாவின் தலையில் ஓராயிரம் செம்மட்டிகளைக்கொண்டு அடித்த மாதிரி இருந்தது. அவள் கட்டிய ஆசைக் கோட்டைகளெல்லாம் மணல் கோட்டைபோலப் பொலபொலவென்று உதிர்ந்து போய்விட்டதைப்போலவும் தோன்றியது.

"**குந்தளப்பிரேமா**" என்ற பெயருக்கு ரமணி கொடுக்கும் தாத்பரியம் இதுதானு? அந்தப் பெயருக்கும் எனக்கும் உண்மையில் எவ்வித சம்பந்தமும் கிடையாதா? பிரேமா என்பது குந்தளத்தின் பிரேமையைத்தான் குறிக்கிறதா? அது என்னைக்குறிப்பதாக இவ்வளவுகாலமும் அசைக்க முடியாத மனக்கோட்டை கட்டியதெல்லாம் பகற்கனவு தானு? என்று நினைத்தபொழுது பிரேமாவின் தலை கிறுவென்று சுற்றியது. வாய்விட்டு அழுதுவிடலாம்போலக் கூடத் தோன்றியது பிரேமாவுக்கு. ஆனுல் நாம் தியேட்டரில் ஆயிரக்கணக்கான ஜனங்களுடன் படம்பார்த்துக்கொண்டிருக்கிறோம் என்ற ஞாபகம் நல்லவேளையாக அவள் மனதிலிருந்தது.

"ஏன் பிரேமா! நான் சொல்லிய அர்த்தம் பொருத்தமில்லையென்று நினைக்கிருயா?" என்று ரமணி கேட்ட பொழுதுதான் பிரேமா கனவு உலகிலிருந்து கஷ்டமும் துன்பமும் ஏமாற்றமும் நிறைந்த இந்த மண்ணுலகத்தில் வந்து குதித்தாள்.

பிரேமா:- "இல்லை! குந்தளத்தின் காதலன் இலங்கைக்கு வரப்போகிருனு என்பது தெரிந்தால் கதையின்போக்கு ஒருவாறு புலப்படும்" என்ருள் சிறிதளவு நம்பிக்கையோடு.

ரமணி:- இந்தியாவைவிட்டு வெளியேறப்போகிருன். நீ விரும்பினுல் அவனை இலங்கைக்கே கொண்டுவந்துவிடுகிறேன். கதை தானே? நாம் இழுத்த இழுப்புக்கு வருகிறது?" என்று அலட்சியமாக பதில் சொல்லியது பிரேமா

வின் உள்ளத்தில் கூர்மையான முள் தைப்பதுபோல் இருந்தது. ஆயினும் அவன் மன நிலைமையைக் கடைசிவரை நன்கு தெரிந்துகொண்டுவிடவேண்டுமென்ற வைராக்கியம் அவளிடம் உதித்தது.

தண்ணீரில் மூழ்கியவனுக்கு ஜலத்தின்கீழ் ஒரு முழம் முழுகினாலென்ன? பத்து முழம் முழுகினாலென்ன? ரமணியின் உண்மையான மன நிலைமையை சந்தேகத்து இடமின்றி தெரிந்துகொண்டுவிடுவதுதான் நல்லது. அசட்டு நம்பிக்கை அனர்த்தத்தில்தான் முடியுமே தவிர அணுவளவும் உதவாது என்று அவள் நினைத்தாள்.

"ஆம்! அந்த பொல்லாத மனிதன் கோபாலை இலங்கைக்கு இழுத்துக்கொண்டு வந்துவிடுங்கள்! வந்தவுடன் இங்கு ஒரு பிரேமாவைச் சந்திக்கச் சொல்லுங்கள். அவனுக்காக இலங்கையில் ஒரு பிரேமா தவம் கிடக்கிறாளென்பதையும் அவனிடம் சொல்லிவையுங்கள். அப்பொழுதுதான் கதையின் தலைப்பு பொருத்தமாயிருக்கும். அடுத்த அத்தியாயம் எழுதும்பொழுது இதை தயவு செய்து எனக்காக ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருப்பீர்களா?" என்று கேட்டுவிட்டாள் பிரேமா தைரியத்தை வரவழைத்துக்கொண்டு

ரமணி:- நீ தவறாக நினைக்கிறாய் பிரேமா. நான் எழுதுவது சுய சரிதையாயிருக்குமோ என்று சந்தேகிக்கிறாய் போலிருக்கிறது.

பிரேமா:- சந்தேகிக்கவில்லை. உண்மையென்று உறுதியாகவே நம்புகிறேன். ஒரு சமயம் எல்லா தெய்வங்களும் சேர்ந்து சதிசெய்ய நினைத்தால் தயவுசெய்து நான் நினைப்பதை உண்மையாக்கவேண்டுமென்று அத் தெய்வங்களின் கால்களைப் பிடித்துக்கொண்டு மன்றாடுவேன்.

இப்படி பிரேமா சொல்லியபொழுது அவளுடைய குரல் தழுதழுத்தது. முத்துப்போல ஓரிரண்டு சொட்டு கண்ணீர் அவளுடைய பிரகாசமான கண்களிலேதத்தளித்துக்கொண்டு நின்றது. அந்த மங்கலான வெளிச்சத்தில் அது ரமணிக்குத்

தெரியாமல் போய்விடுமோ என்று தியேட்டரிலிருந்த விளக்கு களெல்லாம் திடீரென்று பற்றிக்கொண்டன. படக்காட்சி யும் முடிந்துவிட்டது.

பிரேமா மேற்புடவையினுல் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுவதற்குமுன் மளமளவென்று வழிந்த கண்ணீர் அவ ளுடைய கண்ணுடிக் கன்னங்களின் வழியாக வழிந்து மெல் லிய நீலப் புடவையை நனைத்துவிட்டது.

"ஏன் வீட்டுக்குப் போகவேண்டாமா? என்று கேட்டுக் கொண்டே 'பெட்டி'யின் கதவைத் தட்டினுள் லீலா.

ரமணி 'பாக்ஸி'ன் கதவைத் திறந்தான். ரமணியோ அல்லது பிரேமாவோ ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. எல் லோரும் காரில் போய் உட்கார்ந்துகொண்டார்கள். முதலில் ரமணி, அடுத்தபடியாக பிரேமா, பிறகு லீலா, கடைசியில் நடராஜன் இப்படி நால்வருமாகப் பின் ஸீட்டில் உட்கார்ந்த உடன் கார் கிளம்பியது.

சில நிமிட நேரம் காரில் மௌனம் நிலவியது. யார் முதலில் பேசுவது? என்ன பேசுவது? இது எல்லோருக்கும் பெரிய பிரச்னையாயிருந்தது. ரமணியும், பிரேமாவும் நடந்து கொண்ட முறையிலிருந்து அவர்கள் படம் பார்த்துக்கொண் டிருக்கையில் அவர்கள் நடந்துகொண்டிருக்கக்கூடிய முறை யைப்பற்றி நடராஜனே அல்லது லீலாவோ இருவருமே ஒன்றும் கிரகிக்கமுடியவில்லை.

இந்த மௌனத்தைத் தகர்க்க நடராஜன் ஒரு உபாயம் செய்தான். படக்காட்சியில் வந்த ஒரு கட்டத்தைக் குறிப் பிட்டு "அது எப்படியிருந்தது ரமணி! எனக்கு அது ரசிக்க வில்லை. ஆனுல் லீலாதான் சொல்லுகிறுள் அந்த இடத்தில் கதாநாயகி லைலாவின் நடிப்பு அற்புதமாயிருந்ததென்று! கலை வாணன் ரமணியைக் கேட்டு அவன் தீர்ப்பை இருவரும் ஒப் புக்கொள்வதென்று எங்களுக்குள் முடிவுசெய்துகொண் டோம்! நீ என்ன சொல்லுகிறுய்?" என்று கேட்டான்.

ஆனால் ரமணிக்கு பதில்சொல்ல முடியவில்லை. நடரா ஜன் குறிப்பிட்ட கட்டத்தை அவன் கவனிக்கவுமில்லை. "அந்த இடத்தை நான் பார்க்கவில்லை" என்று கௌரவமாக ஒப்புக்கொள்வதைத்தவிர ரமணிக்கு வேறு வழியில்லாமற் போய்விட்டது.

"அப்படியா? பிரேமா நீதான் சொல்லு! அந்த இடத்தில் லைலா கடைக்கண்ணால் காதலனைப் பார்த்துவிட்டு புன்னகை செய்தது அழகு சொட்டுகிற மாதிரி இருந்ததா? இல்லையா?" என்று கேட்டாள் லீலா.

"ஆமாம்! அப்படித்தானிருந்தது!" என்று தன் நிலை மையைக் காப்பாற்றிக்கொள்ள பிரேமா ஒரு அசட்டுச் சிரிப் புடன் பதில் சொன்னாள்.

"லீலா எந்த இடத்தைப்பற்றி கேட்கிறாளென்பது தெ ரிந்துதான் சொல்லுகிறாயா பிரேமா! லீலா சொல்லுகிறபடி எந்த இடத்தில் கதாநாயகி லைலா எப்படிச் சிரித்தாளென்று சொல்லு பார்க்கலாம்!" என்று விடாப்பிடியாகக் கேட்டான் நடராஜன்.

இக்கேள்வி பிரேமாவுக்கு தர்மசங்கடமான நிலைமையை உண்டு பண்ணிவிட்டது. பதில் சொல்லத்தெரியாமல் ஏதோ உளரவாரம்பித்தாள்.

"அவர்கள் படம் பார்த்திருந்தாலல்லவா ஒவ்வொரு கட்டத்திலும் என்ன வந்தது? யார் எப்படி நின்றார்கள்? எப்படிச் சிரித்தார்கள்? என்பதெல்லாம் தெரியும்? பாவம் மூன்று மணி நேரம் கனவு உலகத்தில் சஞ்சரித்தவர்களிடம் படம் பார்த்ததைப்பற்றிக் கேட்டால் எப்படி பதில் சொல்ல முடியும்?" என்று லீலா கிண்டலாகச் சொன்னாள்.

நடரா:- "ஆனால் அவர்கள் படம் பார்க்கவில்லை என் கிறாயா?"

லீலா:- இல்லவேயில்லை. ஏதோ ஓரிரண்டு காட்சிகள் தவறிப்போய் அவர்கள் கண்களில் பட்டிருந்தால் அதுவும் அவர்கள் குற்றமில்லை!

நடரா:- படம்பார்க்காமல் மூன்று மணி நேரம் கதவை யும் சாத்திக்கொண்டு பாக்ஸ் வீட்டுக்குள் என்ன செய்தார்க ளாம்?

லீலா:- அதை என்னிடம் கேட்டால்? அவர்களிடமில் லையா கேட்கவேண்டும்?

நடரா: கேட்டால் பதில் சொன்னால்தானே?

லீலா:- பதில் சொல்லும்படியாக இல்லாமலிருந்தால்? சிலவிஷயங்களைத்தானே வாயினால் பேசமுடியும்? பேசமுடி யாத விஷயங்களும் சில உண்டல்லவா?

நடரா:- அப்படியானால் அவர்கள் படம்பார்க்கவில்லை யென்றும் படம் பார்க்காமல் என்ன செய்துகொண்டிருந் தார்களென்பது சொல்லக்கூடியதில்லையென்றும் நீ சொல்லு கிறாய்? அப்படித்தானா? இதை அவர்கள் வாயினால் சொல் லிவிட்டால் நான் ஏன் இப்படித் திருப்பித்திருப்பிக் கேட் கிறேன்.

இவ்விதம் நடராஜனும், லீலாவும் கிண்டலாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் சொல்லிய ஒவ்வொரு வார்த்தையும் பிரேமாவுக்கும் ரமணிக்கும் கூர்மையான ஈட்டிகொண்டு இதயத்தை பிளப்பதுபோலிருந்தது. ஆயி னும் அவர்கள் இருவராலுமே ஒருவார்த்தைகூடப் பதில் பேச முடியவில்லை. அவர்களுடைய மன நிலைமையில் வாயி லிருந்து வார்த்தைகள் வெளிவருவதாயுமில்லை. இந்த மௌனம் நடராஜனும் லீலாவும்கொண்ட சந்தேகத்தை மேலும் பலப்படுத்தி அவர்களுடைய கேலிப்பேச்சுக்கு ஊக்கமளிப்பதாயிருந்தது.

நடராஜன் ஏதோ ஹாஸ்யமாகச் சொல்லிக்கொண்டு லீலாமீது மோதவும், லீலா பிரேமாவை நெருக்க பிரேமா ரமணியின் மடிமீது சாய்ந்தாள். இந்த நிலைமையில் அபாண் டமான கேலிப் பேச்சுகளிலிருந்து பிரேமாவையும் ரமணி யையும் காப்பாற்ற கடவுள் நினைத்தார்போலிருக்கிறது. கார் பங்களா வாசலில் வந்துநின்றது.

எல்லோரும் கீழே இறங்கினுர்கள். நடராஜனும் ரமணியும் முன்னுல் இறங்கிச் சென்றபிறகு பிரேமா சொன்னுள்: 'லீலா! நாளேக்காலே என் அறைக்கு வா! உன்னிடம் தனியாகப் பேசவேண்டும்!' என்று.

'தனியாகப் பேசுவதெல்லாம் இருக்கட்டும்! காரியம் காயா பழமா? அதை முதலில் சொல்லு!'' என்ருள் லீலா.

பிரேமாவினுல் இதற்குமேல் துக்கத்தை அடக்கிக்கொண்டிருக்க முடியவில்லே. லீலாவின் மார்பில் முகத்தைப் புதைத்துக்கொண்டு சிறு குழந்தைமாதிரி விம்மி விம்மி அழ ஆரம்பித்துவிட்டாள்.

'பிரேமா! அசடுமாதிரி அழாதே! யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்? ஊம், கண்ணேத் துடைத்துக்கொள்! காலேயில் எல்லாம் பேசிக்கொள்ளலாம். கடவுளிடம் நம்பிக்கை வைத்தால் எல்லாம் உன் இஷ்டப்படியே நடக்கும். ஒருநாளும் உன்னேத் தெய்வம் கைவிடாது. உன் அன்பு பரிசுத்தமானது. உன்னே மனைவியாக அடைய ரமணி எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும்! கனியாத பழத்தைக் கனியவைக்க கொஞ்சம் பொறுத்திருக்க வேண்டும். அவ்வளவுதான். ஆனுல், பழம் நிச்சயம் கனிந்துவிடும். நம்பிக்கையைமட்டும் கைவிட்டுவிடாதே!''

இவ்வாறு லீலா சொல்லி பிரேமாவைத் தேற்றுவது பிரம்மப்பிரயத்தனமாகிவிட்டது.

மறுநாட்காலே லீலா வந்தபொழுது முதல்நாளிரவு சினிமாக்கொட்டகையில் தனக்கும் ரமணிக்குமிடையில் நடந்த சம்பாஷணேயை விவரமாக எடுத்துச்சொல்லி 'குந்தளப்பிரேமா என்ருல் குந்தளத்தின் பிரேமையைக் குறிக்கிறதாம் அந்தப் பெயருக்கும் என் பெயருக்கும் சம்பந்தமில்லேயாம்!' என்று சொல்லியபொழுது அவள் கண்களிலிருந்து கண்ணீர் மளமளவென்று வழிந்தோடியது.

லீலா:- இருக்கட்டுமே! அதனுல் என்ன தலேமுழுகிவிட்டது? நாவலுக்கு அந்தப் பெயர் வைத்தபொழுது

அதற்கும் உன் பெயருக்கும் சம்பந்தமில்லாமலிருக்கலாம். இப்பொழுதும் சம்பந்தமில்லாமலிருக்கக்கூடும். ஆனால், ஆரம்பத்தில் எண்ணியிருக்காத சம்பந்தம் இனி ஏன் ஏற்படக்கூடாது?

பிரேமா:- அவர் போக்கைக் கவனித்தால் எனக்கு நம்பிக்கையில்லையடி லீலா!

லீலா:- இப்படி அதைரியப்படுவதுதான் தவறு. உலகமே நம்பிக்கையில்தான் வாழுகிறதென்பதை நீ மறந்து பேசுகிறாய். நம்பிக்கை மாத்திரம் இல்லாவிட்டால் மனித ஜாதி ஒரு நிமிஷம்கூட உயிர் வாழமுடியாது. நான் கேட்கிறேன், இதற்குமுன் வேறு எப்பொழுதாவது இவ்வளவு தெளிவாக உன் மனதை ரமணிக்கு நீ திறந்துகாட்டியிருக்கிறாயா? இல்லையல்லவா? உன் அந்தரங்க எண்ணத்தை இப்பொழுதுதான் முதன்முறையாக அவர் நன்கு தெரிந்துகொண்டிருக்கிறார். இனி அவர் மனதில் இது எப்படி வேலைசெய்கிறதென்பதை நம்பிக்கையுடன் காத்திருந்து பார்ப்போம். நேற்றிரவு ரமணி தியேட்டரிலிருந்து வந்த பிறகு என்ன செய்தார்? உடனே படுக்கப் போய்விட்டாரா?

பிரேமா:- இல்லை, வெகுநேரம்வரையில் அவர் அறையில் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. இன்று தொடர் நாவலின் அடுத்த அத்தியாயத்தை அச்சுக்குக் கொடுக்க வேண்டுமல்லவா? தியேட்டரிலிருந்து வந்தவுடன் உட்கார்ந்து எழுத ஆரம்பித்திருப்பாரென்று நினைக்கிறேன் எப்படியும் சாயங்காலம் 5 மணிக்குள் அடுத்த அத்தியாயம் அச்சுக்கோர்த்து 'புரூப்' வந்துவிடும். வந்தவுடன் உனக்கும் ஒரு புரூப் அனுப்புகிறேன்.

குந்தளப்பிரேமா நாவல் நவலங்காவில் பிரசுரமாகும் வரையில் பிரேமாவும் லீலாவும் காத்திருப்பதில்லை. ரமணியின் கையைவிட்டு எழுத்துப்பிரதி அச்சுக்கோப்பவர்களின் கைக்குப் போனவுடனேயே அதைவாங்கி இருவரும் வாசித்துப்பார்த்துவிடுவார்கள். இல்லாவிடில் அச்சுக்கோர்த்தவுடன்

முதலாவது புரூப் அவர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டு விடும். அதை வாசித்தபின் அதைப்பற்றியும் அடுத்த அத்தியாயம் எப்படியிருக்கமுடியுமென்பதையும்பற்றி அவர்கள் சிலமணிநேரம் விவாதிப்பது வழக்கம்.

இதுமாதிரி விவாதங்கள் நடக்கும்பொழுது தற்செயலாக ரமணி அங்கு வந்துசேர்ந்தால் அவனையும் அவர்கள் விடுவதில்லை. அடுத்தபடியாக என்ன வரப்போகிறதென்பதை அறியவேண்டுமென்ற ஆவலில் அவனுக்குச் சரமாரியான கேள்விகளைப் போடுவார்கள். நேரடியாக அவன் பதில்சொல்ல மறுத்தால் சுற்றிவளைத்து எப்படியாவது கதையின் போக்கை அவனிடமிருந்து கிரகித்துக் கொள்ள சாத்தியமான முயற்சிகளையெல்லாம் அவர்கள் செய்துபார்ப்பார்கள். ஆனால் எல்லாவற்றிற்கும் ரமணி அர்த்தமில்லாத ஒரு அசட்டுச்சிரிப்புச்சிரித்து மழுப்புவானே தவிர அவர்கள் எதிர்பார்க்கும் பதில்மட்டும் வெளி வராது. நிலைமை ரொம்ப மிஞ்சிப்போய்விட்டால், 'என்னை இப்படி வற்புறுத்தினால் நான் என்ன செய்ய? திட்டம் போட்டு கதை எழுத ஆரம்பித்திருந்தால் நீங்கள் கேட்கும் கேள்விகளுக்கு உடனுக்குடன் பதில் கொடுத்துவிடுவேன். கதையின் போக்கை அடுத்தவாரம் எப்படிக் கொண்டுபோகவேண்டுமென்பதை இனித்தான் யோசிக்க வேண்டும். ஏன், நீங்கள்தான் சொல்லுங்களேன், அடுத்த அத்தியாயம் எப்படியிருக்கவேண்டுமென்று! உங்கள் இஷ்டப்படி எழுதிவிடுகிறேன்' என்று ஒரு பெரிய போடு போடுவான்.

இதற்குமேல் பிரேமாவோ அல்லது லீலாவோ ஒன்றும் சொல்லமுடியாமற்போய்விடும். ஆனால் திட்டம் போட்டுக்கொண்டு கதை எழுதவில்லையென்றும் ஒவ்வொரு வாரமும் யோசித்துத்தான் எழுதுவதாயும் ரமணி சொல்லுவது முழுப்பூசினிக்காயை சோற்றில் மறைப்பதைப்போன்றதென்பதை இருவரும் நன்கறிந்திருந்தார்கள்.

## 14. கிணறு வெட்டப் பூதம்!

தியேட்டருக்குப் போய்விட்டு வந்த மறுநாள் மாலை பிரேமா பரபரப்புடன் லீலாவின் வீட்டுக்கு வந்து 'இதோ பார்த்தாயா லீலா! நாம் நினைத்ததெல்லாம் பொய்யாகி விட்டதடி! கிணறுவெட்டப் பூதம் கிளம்பிய கதையைப் போலாகிவிட்டது காரியம். இனி, என்கதி என்ன?' என்று கேட்டுக்கொண்டே லீலாவின் அறையில் நுழைந்தாள்.

'கொஞ்ச நாட்களாக உனக்கு ஏன் இவ்வளவு படபடப்பு! நிதானமாகச் சொல்லு! என்ன விசேஷம்?' என்று வினவினாள் லீலா.

பிரேமா:- குந்தளப்பிரேமாவின் அடுத்த அத்தியாயத்தை வாசித்தாயில்லையா? ரமணியின் வாழ்க்கையில் ஒரு சாந்தா எங்கிருந்து வந்து முளைத்தாள்? சாந்தாவின் கடைசிப் புத்தகமான வனஜாவை நீயும் படித்திருக்கிறாயல்லவா? அந்தக் கதையில் வனஜாவின் வாழ்க்கையைப்பற்றி சாந்தா எழுதியிருப்பதும் குந்தளத்தின் வாழ்க்கையைப்பற்றி ரமணி எழுதியிருப்பதும் ஆரம்ப அத்தியாயங்களில் கிட்டத்தட்ட ஒரே மாதிரியாயிருப்பதைப் பார்த்து அப்பொழுதே நான் கொஞ்சம் சந்தேகப்பட்டேன். இன்று குந்தளத்தின் கிராமப் புனருத்தாரண இயக்கத்தைப்பற்றி ரமணி எழுதியிருக்கும் அதே விஷயங்கள் சாந்தாவின் வனஜா புத்தகத்திலும் அடங்கியிருப்பதைப் பார்த்தால்...................

லீலா:- எனக்கு ஒன்றுமே புரியவில்லை பிரேமா. குந்தளப்பிரேமாவின் இந்த அத்தியாயம் சாந்தாவின் புத்தகத்திலிருப்பதைப் போலவே எழுத்துக்கு எழுத்து சரியாயிருக்கிறது. கிட்டத்தட்ட ஆடையலங்கார வர்ணனைகள்கூட மாறுபடாமலிருக்கின்றன. கிராமத்தின் ஆற்றோரத்தில் வனஜா மெல்லிய நீலநிறப் புடவையணிந்து நிலவு வெளிச்

சத்தில் ஜகஜோதியாக உட்கார்ந்திருந்ததாயும் காற்றில் பறந்த முன்பக்கத்துக் கூந்தல் நெற்றியில் விழுந்து விளையாடியது பூரண மதியை கருமேகம் திரையிட்டு மறைப்பது போலிருந்ததென்றும் சாந்தா தனது புத்தகத்தில் வர்ணிக்கிருள். அதே வர்ணனையை எழுத்துப் பிசகாமல் ரமணியும் இந்த அத்தியாயத்தில் கொடுத்திருக்கிருர். ரமணி எழுதியிருக்கும் இவ்வாரக்கதை உண்மையில் நீ சொல்லுவதைப்போல கிணறுவெட்ட பூதம் கிளம்பிய கதைமாதிரித்தானிருக்கிறது.

பிரேமா:- இதிலிருந்து பிரபல நாவலாசிரியை சாந்தாவுக்கும் நமது ரமணிக்கும் ஏதோ சம்பந்தமிருந்துதான் தீரவேண்டும். இல்லாவிட்டால் இருவர் கதையிலும் இவ்வளவுதூரம் கரு



த்து ஒற்றுமை ஏற்பட்டிருக்கவே முடியாது. இவர் வாழ்க்கையில் குந்தளம் ஒருவள் குறுக்கிட்டிருப்பது போதாதென்று சாந்தாவேறு எப்படி வந்து முளைத்தாள்?

லீலா:- எனக்கு ஒரே ஒரு யோசனைதான் சரியாகப் படுகிறது. சாந்தாவின் வனஜா புத்தகத்தை ரமணியும் படித்திருந்து அந்தக் கதையையே அடிப்படையாக வைத்து குந்தளப்பிரேமாவை எழுதிவரக்கூடாதா? அப்படியும் இருக்கலாமல்லவா? இந்தக்காலத்தில் எந்த ஆசிரியனைத்தான் நம்பமுடிகிறது? ஆங்கிலக்கதைகளை ஊரையும் பெயரையும் ஓரிரண்டு இடங்களில் கருத்தையும் மாற்றி உருவம் தெரியாமல்செய்து சொந்தக் கற்பனை என்று சொல்லிக்கொள்ளும் எவ்வளவு ஆசிரியர்களை நாம் பார்க்கிறோம்?

பிரேமா:- அப்படி ஒருபோதும் இருக்காது லீலா! அச்சில் வெளிவந்த ஒரு புத்தகத்தை அவர் இவ்வளவு தைரியமாகக் காப்பியடிப்பாரென்று நான் நம்பமாட்டேன். தவிர இன்னொரு முக்கியமான விஷயத்தையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். சாந்தாவின் புத்தகம் அச்சாகி இலங்கைக்கு வருவதின் முன்பாகவே நவலங்காவில் குந்தளப்பிரேமா ஆரம்பமாகிவிட்டது. போனவாரம் தானே வனஜா புத்தகம் இலங்கைக்கு வந்தது? அதைப் பார்த்து ரமணி எப்படிக் காப்பியடிப்பது சாத்தியம்? இன்று அச்சாகியுள்ள அத்தியாயம் காப்பியடிக்கப்பட்டிருந்தாலும் வனஜாவின் முற்பகுதியும் குந்தளப்பிரேமாவின் முற்பகுதியும் ஒரேமாதிரியிருப்பது எப்படிச் சாத்தியம்?

லீலா:- கமலாலயத்துக்குத் தெரியக்கூடாதென்று சுந்தரம் என்ற பெயரை ரமணி என்று மாற்றிவைத்துக்கொண்டாரில்லையா?

பிரேமா:- ஆமாம், அதற்கும் இதற்கும் என்ன?

லீலா:- கமலாலயத்தின் சொந்தக்காரர்கள் ரமணிக்குத் தெரிந்தவர்களாயிருக்கவேண்டும். ரமணி சென்னையிலிருக்கையில் கமலாலயத்தில் அச்சுக்குவந்த வனஜா எழுத்

துப் பிரதிகளை அவர் முன்னதாகவே வாசித்திருக்கலாம். அந்தக் கதையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு இப்பொழுது குந்தளப்பிரேமாவை அவர் எழுதலாம். குந்தளப் பிரேமா முடிவதற்குள் வனஜா வெளிவந்துவிட்டதுதான் அனர்த்தமாகிவிட்டது!

பிரேமா:- நீ நினைப்பதுபோலிருந்தால் குந்தளப்பிரேமா வெறும் கட்டுக்கதையா? குந்தளம் என்று ஒருவள் உண்மையில் இருக்கமாட்டாளென்று நினைக்கிறாயா? ஒருக்காலும் இப்படியிருக்காது. சாந்தாவும் ரமணியும் நண்பர்களாயிருந்து இருவரும் சேர்ந்து இந்தக் கதைக்குத் திட்டமிட்டிருக்கக்கூடாதா? சாந்தாவுக்கும் ரமணிக்கும் ஏதோ சம்பந்தமிருக்கவேண்டுமென்றுதான் என் மனம் நினைக்கிறது லீலா.

லீலா:- இதைக் கண்டுபிடிக்க நான் ஒரு வழி சொல்லுகிறேன். சாந்தாவின் வனஜா புத்தகத்தை ரமணியிடம் வாசிக்கக்கொடு. அவர் புத்தகத்தை வாசித்தபிறகு என்ன சொல்லுகிறாரென்று பார்க்கலாம்.

பிரேமா வீட்டுக்குத் திரும்பியபொழுது வழியில் அச்சாபீஸிலே நுழைந்தாள். ரமணி விளக்கு வைத்துக்கொண்டு கடிதங்களை வாசித்துக்கொண்டிருந்தான். பிரேமாவைக் கண்டதும் 'யார், பிரேமாவா? வா! அடுத்த அத்தியாயத்தை 'புரூப்'பில் வாசித்து முடித்தாகிவிட்டது போலிருக்கிறது. அதைப்பற்றி கேட்கத்தானே வந்திருக்கிறாய்?' என்று வழக்கம்போன்ற சுமுகமான தொனியில் கேட்டான்.

பிரேமா:- இல்லை, அதற்காக வரவில்லை. காரியமொன்றுமில்லாவிட்டால் உங்களுடன் பேசுவதற்கு வரக்கூடாதா? வரும்பொழுதெல்லாம் ஏதாவது ஒரு காரியத்தோடுதான் வரவேண்டும்போலிருக்கிறது!

ரமணி:- நான் அப்படிச் சொல்லவில்லை பிரேமா! அடுத்த அத்தியாயத்தின் 'புரூப்' திருத்தம் போடுவதற்கு வந்தது. ஆகையால் அதை நீயும் படித்துவிட்டு வந்திருப்பாயென்று நினைத்துக்கொண்டு கேட்டேன்.

பிரேமா:- ஆமாம், படித்தாகிவிட்டது. இந்த அத்தியாயம் ரொம்ப நன்றாயிருக்கிறது. நீங்கள் வர்ணித்திருக்கும் காந்தீயத் திட்டத்தின்படி இலங்கையிலும் கிராமப் புனருத்தாரண இயக்கம் நடக்குமானால் அரிசிக் கப்பல்களை நம்பிக் கொண்டு உயிர் வாழும் கேவலமான நிலைமை நாட்டுக்கு நிச்சயம் ஏற்படாது. ஆனால் எழுத்து என்பது ஒன்று; நடைமுறை என்பது முற்றிலும் வேறொன்று! ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவாதென்ற பழமொழியைக் கேட்டிருக்கிறீர்களில்லையா?

ரமணி:- அப்படிப் பொதுப்படையாகச் சொல்லிவிடாதே. நான் எழுதியிருப்பதைப்போன்ற கிராமத்திட்டம் நடைமுறையில் அனுஷ்டிக்கப்படுவதை விளநகர் கிராமத்தில் நானே நேரில் பார்த்திருக்கிறேன்.

விளநகர் கிராமத்தின் பெயரைச் சொல்லியவுடன் ரமணிக்கு அவனை அறியாமல் ஒரு அதிர்ச்சியேற்பட்டது. வெளியிடக்கூடாதென்று இவ்வளவு காலமும் மறைத்து வைத்திருந்த ஒரு பெரிய ரகசியத்தைத் தன்னையுமறியாமல் வெளியிட்டுவிட்டோமென்ற ஒரு உணர்ச்சி அவனைத் தாக்கியது. விளநகர் கிராமம் யாருடையது? அதன் சொந்தக்காரருக்கும் உங்களுக்கும் என்ன சம்பந்தம்? குந்தளம் விளநகர் கிராமத்தில் அற்புதமான கிராமத் திட்டத்தை நடத்துவதாகக் கதையில் எழுதியிருக்கிறீர்களே, அந்தக் குந்தளம் கற்பனைப் பெயரில்லையா? உண்மையிலேயே குந்தளம் என்று ஒரு பெண் இருக்கிறாளா? அவளுடைய கிராமத்தைப் பார்த்துவிட்டுத்தான் காந்தீயத் திட்டத்தைப்பற்றி எழுதியிருக்கிறீர்களா? அப்படியானால் இது கற்பனைக் கதையென்றும் யாரையும் குறிப்பதல்லவென்றும் சொன்னீர்களே? அது பொய்யா? இப்படியெல்லாம் பிரேமா கேட்க வாரம்பித்தால் என்ன செய்வதென்று ரமணி நினைத்தான். ஏதோ ஒருபெரிய குற்றம் செய்துவிட்டதைப் போன்ற உணர்ச்சி அவன் நெஞ்சத்தைப் பிடித்து அழுத்தியது.

விளநகர் கிராமத்தின் பெயரை ரமணி சொல்லியவுடன் பிரேமாவுக்கும் அதிர்ச்சியேற்படாமலில்லை. ஒரு நொடியில் குந்தளப்பிரேமா கதை உண்மைச் சம்பவங்களை அடிப்படையாகக்கொண்டதே தவிர கட்டுக்கதையல்லவென்பதை அவளுக்கு இது ஊர்ஜிதப்படுத்திவிட்டது. உண்மைக் கதையாகத்தானிருக்கவேண்டுமென்பதை எந்த சந்தர்ப்பத்திலும் அவள் சந்தேகித்ததில்லையென்றாலும் ரமணியின் வாயிலிருந்தே இது ஊர்ஜிதமானதில் தனக்கு ஒரு பெரிய வெற்றியேற்பட்டுவிட்டதாக அவள் நினைத்தாள். ஆனால் இந்த வெற்றி சந்தோஷத்துக்குப் பதிலாக அவளுக்குத் துக்கத்தையே கொடுத்தது. சாந்தா வர்ணிக்கும் கிராமத்துக்கும் இதே பெயர் கொடுக்கப்பட்டிருப்பது சாந்தாவுக்கும் ரமணிக்கும் நிச்சயம் சம்பந்தமிருந்தே தீரவேண்டுமென்பதையும் உறுதிப்படுத்துவதைப் போலிருந்தது.

சில நிமிடங்கள்வரை இருவரும் மௌனம் சாதித்தனர். இந்த மௌனம் இருவருக்கும் வேதனை கொடுப்பதாயிருந்ததென்பதைச் சொல்லத் தேவையில்லை.

“சாந்தாவின் கடைசிப் புத்தகத்தை வாசித்தீர்களா? போனவாரம்தான் வனஜா இலங்கைக்கு வந்தது. முதல் பதிப்பு பத்தாயிரம் அடித்து அவ்வளவும் விற்றுவிட்டதாம். இரண்டாவது 'பதிப்புதான் இலங்கைக்கு வந்திருக்கிறது!' என்று சொல்லி வனஜா புத்தகத்தை ரமணியிடம் நீட்டினாள் பிரேமா.

ரமணி:- சாந்தாவின் புத்தகத்தை நான் படிப்பதற்கில்லை பிரேமா! தயவுசெய்து ஏன் என்று கேட்காதே!

பிரேமா:- விசித்திரமாயிருக்கிறதே உங்கள் வைராக்கியம்! புத்தகங்களைப் படிப்பதில் என்ன தவறு?

ரமணி:- அது எனக்குத் தெரியாது. சாந்தாவின் புத்தகங்களைப் படிப்பதில்லையென்றும் அவளைப்பற்றிப் பேசுவதில்லையென்றும் நான் விரதம் கொண்டிருக்கிறேன். அது தான் சொல்லலாம்.

பிரேமா:- அப்படியானால் சாந்தாவை உங்களுக்குத் தெரியுமா?

ரமணி:- தெரியாது. சத்தியமாகச் சொல்லுகிறேன் அவளை நான் பார்த்ததில்லை. அவளுடைய சரித்திரத்தையும் நான் அறியமாட்டேன். அவளைப்பற்றி தெரிந்து கொள்ள நான் தயாராகவுமில்லை.

பிரேமா:- அப்படியிருந்தும் அவள் புத்தகத்தின் மீது வெறுப்புக்கொண்டிருப்பது ஆச்சரியமாயிருக்கிறது!

ரமணி:- ஆமாம். மற்றவர்களுக்கு இது ஒரு பெரிய புதிர்மாதிரித்தானிருக்கும். தயவுசெய்து இதைப்பற்றி என்னிடம் ஒன்றும் கேட்காதே!

அஃதற்குமேல் பிரேமா வற்புறுத்தி ஒன்றும் கேட்க முடியவில்லை. ஆனால் ரமணி எழுதிய அடுத்த அத்தியாயம் பல புதிர்களுக்குச் சுலபமாகப் பதிலளித்துவிட்டது.

குந்தளப்பிரேமாவின் பத்தாவது அத்தியாயம் கம்போஸிட்டர்களிடம் அச்சுக்கோர்க்க வந்தவுடனேயே லீலா அதைத் தருவித்துப் படித்துவிட்டு அவசரமாக பிரேமாவை அழைத்துவர வேலையாளை அனுப்பினாள்.

பிரேமா வந்தவுடன் சாந்தாவுக்கும் ரமணிக்கும் என்ன சம்பந்தமிருக்குமென்று கேட்டாயே, இதோபார், குந்தளப் பிரேமாவின் பத்தாவது அத்தியாயம் அந்த சம்பந்தத்தைத் தெளிவுபடுத்துகிறது. சாந்தா என்பதற்கு பதிலாக காந்தா என்ற ஒரு கதாசிரியையைத் தோற்றுவித்திருக்கிறார் ரமணி. கிராமக் கோவிலில் இறைவன் சந்நிதியின்முன்பு கோபாலும் குந்தளமும் நின்று பிரார்த்திக்கையில் காந்தாவிடம் கோபால் காதல்கொண்டிருப்பதைப்போல இடித்துக் காட்டுகிறாள் குந்தளம். அவள் நினைப்பது தவறென்கிறான் கோபால். அதுமுதல் காந்தாவிடமும் அவளுடைய புத்தகங்களிடமும் கோபாலுக்கு தன்னையறியாமல் ஒரு வெறுப்பு ஏற்படுகிறது. காந்தாவின் பெயரை யாராவது சொன்னால் கூட அவனுக்கு ஆத்திரம் ஆத்திரமாக வருகிறது. கோபா

லுக்குக் கல்யாணம் செய்துவைக்க அவனுடைய பெற்ருேர்கள் திட்டமிடுகிருர்கள். குந்தளத்தைத்தவிர வேறு எவரையும் மணக்க விரும்பாத கோபால் ஊரைவிட்டு ஒருவருக்கும் சொல்லிக்கொள்ளாமல் வெளியேறுகிருன். இதுதான் 10-வது அத்தியாயத்தின் சாராம்சம். சாந்தா எழுதிய வனஜா கதையில் வஜ்ரமீளா என்ற ஒரு கதாசிரியையை அவள் சிருஷ்டித்திருக்கிருள். ரமணியோ காந்தா என்ற கதாசிரியை சிருஷ்டித்திருக்கிருர். இதிலிருந்து ஒரு விஷயம் வெளியாகிறது. கதாசிரியை சாந்தாவிடம் ரமணி காதல் கொண்டிருப்பதாக குந்தளம் நினைத்திருக்கவேண்டும். அதன் காரணமாகவே சாந்தாவின் புத்தகங்களில் ரமணிக்கு வெறுப்பு ஏற்பட்டிருக்கவேண்டும். ஆகையால் இனி சாந்தாவைப் பற்றி நீ கவலைப்படவேண்டியதில்லை. அவளுக்கும் ரமணிகரும் சிநேகம் சிறிதளவுமில்லையென்பது குந்தளப்பிரேமாவின் பத்தாவது அத்தியாயத்திலிருந்து ருசுவாகிவிட்டது.

பிரேமா:- அதிலிருந்து எனக்குத் தோன்றுவது என்ன தெரியுமா? குந்தளத்தின் சரித்திரம் ரமணிக்கு தெரிந்திருப்பதுபோல சாந்தாவுக்கும் தெரிந்திருக்கவேண்டும். இருவரும் ஒரே நபரின் சரித்திரத்தை எழுதுவதிஞல்தான் கதை நிகழ்ச்சிகளெல்லாம் இவ்வளவு ஒற்றுமையுடனிருக்கின்றன.

லீலா:- எப்படியாஞலென்ன? இரு கதைகளும் குந்தளம் என்ற ஒரு பெயரில் மறைந்திருக்கும் ஒரு இளம் விதவைப்பெண்ணின் சரித்திரமென்பதில் சந்தேகமில்லை. அவளிடம் கொண்ட காதலுக்காக உலக சுகங்களையெல்லாம் தியாகம்செய்து எவருக்கும் தெரியாமல் துறவியைப்போல வாழ்க்கையை நடத்த கோபால் விரதம்பூண்டிருக்கிருன். அந்தக் கோபால் நாம் நினைப்பதைப்போல ரமணியாயிருக்குமாஞல் அவருடைய மனதை மாற்றுவது அவ்வளவு சுலபமாயிருக்குமென்று எனக்குத் தோன்றவில்லை. தெய்வம் உன்பக்கத்திலிருந்து உதவி புரிவதாயிருந்தாலொழிய ரமணி வெளி உலகத்துக்கு உணர்ச்சியற்ற மரக்கட்டையைப்போலத்தான். உண்மையில் ரமணி நமது பூரண அனுதாபத்துக்கும் உரியவர். இந்த இளம் வயதிலேயே அவர் வாழ்க்கை கசந்து

போகும்படி அவ்வளவு கஷ்டப்பட்டிருக்கிருரென்று தோன்றுகிறது. ஒரு விதவைக்காக ஊரையும், சொந்த தேசத்தையும் வயோதிகத் தாயையும் செல்வத்தையும் தியாகம்செய்து அயல் நாட்டில் அஞ்ஞாதவாசம் செய்வதென்ருல் அவருடைய வைராக்கியம் பாராட்டத்தக்கதுதான். நாவலாசிரியர் சுந்தரம் என்ற பெயருக்கு எவ்வளவு செல்வாக்கும் கீர்த்தியும் தமிழ் நாட்டிலிருக்கிறது? அந்தப் புகழைக்கூடவல்லவா துறந்து பெயரையே மாற்றிவைத்துக்கொண்டிருக்கிருர் மனுஷன்!

பிரேமாவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. தலை சுழலவாரம்பித்தது. தனது மனக்கோட்டைகளெல்லாம் ஒரு நிமிடத்தில் தகர்ந்துபோய்விட்டதைப்போன்ற உணர்ச்சியேற்பட்டது அவளுக்கு. நாவலுக்குக் குந்தளப்பிரேமா என்று தலைப்புக் கொடுத்ததின் அர்த்தத்தை இப்பொழுது தான் நன்கு தெரிந்துகொண்டாள். 'அப்படியாஞல் கதையின் தலைப்பில் வரும் பிரேமாவுக்கும் எனக்கும் உண்மையாகவே சம்பந்தமில்லையா? அட பாழும் தெய்வமே! கடைசியில் சதிசெய்துவிட்டாயே!' என்று கடவுளை மனதுக்குள் சபித்துக்கொண்டாள்.

இந்த மனக்கொந்தளிப்பு அடங்குவதற்குள் அடுத்த வாரம் இன்னொரு விசேஷமான சம்பவம் நிகழ்ந்தது.

நான்கு வருடங்களுக்கு முன்னர் சீமைக்குச் சென்றிருந்த பிரேமாவின் அத்தைமகன் தன்பையா பாரிஸ்டர் பட்டம்பெற்றுக்கொண்டு இலங்கைக்குத் திரும்பி வந்துசேர்ந்தான். அவனுக்கு பிரேமாவை மணமுடித்துவைக்கவேண்டுமென்பது பாரிஸ்டர் இளையதம்பியின் பழைய திட்டம். இதற்காகவே அவர் தம்முடைய சொந்தச் செலவில் தம்பையாவைச் சீதமக்கு அனுப்பிவைத்திருந்தார். இதன்பின் பிரேமாவுக்கும் ரமணிக்குமிடையில் நேசம் வளர்ந்ததுபற்றி பாரிஸ்டர் இளையதம்பிக்கு ஒன்றும் தெரியாது. ரமணி என்ன இருந்தாலும் தங்களுடைய தயவிலிருப்பவனுகையிஞல் அவனிடம் பிரேமா காதல்கொள்ளுவது சாத்தியமென்

றும் இளையதம்பி எதிர்பார்கவில்லை. ஆகையினால் அவர் தமது பழைய திட்டத்தின்படியே காரியங்களைச் செய்ய லானார். தம்பையா திரும்பியதுமுதல் பிரேமாவின் மனம் ஒரு நிலைமையிலில்லை. தம்பையாவை எதற்காக தனது தகப்பனார் சீமைக்கு அனுப்பினாரென்பது அவளுக்கு நன்கு தெரியும். அவனிடம் தன்மனம் நாடவில்லையென்றும் அவள் சொல்லிவிடுதற்கில்லை. அவளுடைய வாழ்க்கையில் ரமணி குறுக்கிடும்வரை தம்பையாவையே அவள் தனது கணவனாக மதித்துவந்தாள். அவனுக்கும் தனக்கும் நடந்த கடிதப் போக்குவரத்துகளிலும் சந்தேகத்துக்கு இடம் கொடுக்குமாறு அவள் சிறிதும் நடந்துகொள்ளவில்லை. ரமணி எங்கிருந்தோ திடீரென்று முளைத்து ஒருசில மாதங்களுக்குள் அவளுடைய வாழ்க்கைப் போக்கையே மாற்றிவிட்டான்

ரமணிக்காவது தன்னிடம் வாஞ்சையிருக்குமானால் நிலைமையை ஒருவாறு பிரேமா சமாளித்துக்கொண்டுவிடுவாள். அழுது சாகசம்செய்தேனும் ரமணியை மணந்துகொள்ள அவள் முயற்சிப்பாள். ஆனால் துரதிர்ஷ்டவசமாக ரமணியின் மனநிலைமை அவளுக்குச் சந்தேகத்துக்கு இடமின்றி இப்பொழுது நன்கு தெரிந்துவிட்டது. அவனிடம் காட்டும் அன்பெல்லாம் பாலைவனத்தில் இறைத்த நீர் போலத்தான் என்பதை உணர்ந்தபின் தம்பையாவிடம் அன்புக் குறைவாக நடந்துகொள்ள அவள் மனம் இடந்தரவில்லை. அதேசமயம் ஆவலோடு காத்திருந்த காதலன் நான்குவருடகாலப் பிரிவுக்குப்பின் வரும்பொழுது காதலியின் மனம் எவ்வளவுதூரம் குதூகலிக்குமோ அவ்விதக் குதூகலமும் அவளிடம் தோன்றவில்லை.

பிரேமாவின்போக்கை தம்பையா கவனித்தான். ஆனால் 'பிரேமா, முன்போல இன்னும் சிறியபெண்ணா? பருவமடைந்தவள்! இதோ சில வாரங்களில் மணமகளாகப்போகிறவள்! என்னுடன் முன்மாதிரி சகஜமாகப் பழகுவதற்கு வெட்கப்படுவது இயற்கைதானே!' என்று நினைத்துத் தன்னைத் தேற்றிக்கொண்டான் தம்பையா.

தம்பையா ஊர் திரும்பியதும் அவனுக்கு நண்பர்களும் உறவினர்களும் ஏக தடபுடலாக விருந்து வைபவங்களை நடத்தினார்கள். அவைகளுக்கெல்லாம் பிரேமாவும் தன்னுடைய தகப்பனாருடன் செல்லவேண்டியதாயிற்று. நடராஜனும் லீலாவும் ரமணியையும் விடவில்லை. எல்லா விருந்துகளுக்கும் ரமணியையும் அவர்கள் இழுத்துச்சென்றார்கள்.

'பிரேமாவுக்கும் ரமணிக்குமிடையில் காதலை வளர்க்க எவ்விதம் அந்த நாட்களில் நாம் உடந்தையாகவும் உதவியாகவுமிருந்தோமோ அதேபோல ரமணியிடம் பிரேமா கொண்ட காதலைத் தகர்க்கவும் இப்பொழுது நாம்தான் கட்டுப்பாடாக ஏதாவது செய்யவேண்டும். பிரேமாவை ரமணி கல்யாணம் செய்துகொள்ளமாட்டாரென்பது நிச்சயமாகத் தெரிந்துவிட்டது. கிழக்கில் உதிக்கும் சூரியன் மேற்கில் உதித்தாலும் ரமணி இந்த ஜன்மத்தில் இனி மண வாழ்க்கையில் ஈடுபடமாட்டார். எப்படியாவது அவரிடம் பிரேமாகொண்ட காதலை வெறுப்பாக மாற்றாமல் அனுதாபத்துடன்கூடிய சிநேகமாக மாற்றவேண்டும். பிரேமாவுக்காகப் பிறந்தவன் தம்பையாதான். தம்பையாவுக்கும் ரமணிக்கும் நெருங்கிய நட்பை உண்டுபண்ணினால் நம்முடைய எண்ணம் கைகூடுமென்று நிச்சயமாக நினைக்கிறேன்' என்று ஒருநாள் லீலா தனது கணவன் நடராஜனிடம் சொன்னாள்.

அவளுடைய திட்டத்தின்படியே ரமணியும் தம்பையாவும் அடிக்கடி சந்திக்க நடராஜன் ஏற்பாடுகள் செய்தான். ரமணியின் அடக்கமான சுபாவமும் நல்ல குணமும் நாட்டில் அவனுக்கிருந்த புகழும் வெகு விரைவில் தம்பையாவுக்கு கவர்ச்சியைக் கொடுத்தன. சீமைக்குச்சென்று உயர்தரப்படிப்புப் படித்துவிட்டு வந்திருந்தும் சிறிதுகூட கர்வமில்லாமல் தம்பையா நடந்துகொண்டது ரமணிக்கு ஆச்சர்யமாயிருந்தது. அவர்கள் அத்யந்த நண்பர்களாக அதிக நாள் பிடிக்கவில்லை. அவர்கள் நெருங்கிய நண்பர்களாகியது பாரிஸ்டர் இளையதம்பிக்கும் உண்மையில் மிகுந்த சந்தோஷத்தையே கொடுத்தது.

ஒருநாள் தம்பையா, பிரேமா, பாரிஸ்டர் இளையதம்பி, ரமணி, நடராஜன், லீலா எல்லோருமாகச் சேர்ந்து உட்கார்ந்து சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது தம்பையா வேடிக்கையாகச் சொன்னான், 'மிஸ்டர் ரமணி! நம் நடராஜன் கல்யாணத்தின்பொழுது நவலங்காவில் ஒருவிசேஷ மலர் போட்டிருந்தீர்களாமே? அதுமாதிரி என் கல்யாணத்தின்பொழுதும் ஞாபகமிருக்குமில்லையா?' என்றான்.

'சந்தேகமென்ன? பிரேமா கல்யாணத்துக்கு நவலங்கா இதழ் முழுவதும் ஆர்ட் பேப்பரிலேயே அச்சிட்டு வெளியிடப்படும்! அட்டைப்படம் மூன்று கலரில் இருக்கவேண்டும் மிஸ்டர் ரமணி!' என்றாள் லீலா.

'இவ்வளவுதூரம் நீங்கள் சொல்லவேண்டியதேயில்லை. நவலங்காவின் எஜமானியம்மாள் பிரேமா! அவள் கல்யாணத்துக்கு மலர் வெளியிடப்போகிறோமா என்ற கேள்விக்கே இடமில்லையே! ஏற்பாடுகள் ஏற்கனவே ஆரம்பமாகிவிட்டன. தம்பையாவையும் பிரேமாவையும் சேர்த்துப் படங்கள் பிடிக்க வேண்டியதுதான் பாக்கி! படமெடுக்கவும் வேறு யாரையும் அமர்த்தப்போவதில்லை. நானே படம்பிடித்துவிடுவதென்று உத்தேசம்!' என்றான் ரமணி.

'சபாஷ் மிஸ்டர் ரமணி! சபாஷ்! மாப்பிள்ளைத் தோழனென்றால் உங்களைப்போலல்லவா இருக்கவேண்டும்!' என்றான் தம்பையா.

இந்தக் கேலிப்பேச்சுகள் பிரேமாவுக்குச் சிறிதும் ரஸிக்கவில்லை. ஆனால், தம்பையாவும் ரமணியும் அந்நியோன்னியமாயிருப்பது ஏனோ அவளுக்குத் தெரியாமலே அவள் மனதுக்கு ஒரு ஆறுதலையும் சாந்தியையும் அளித்துவந்தது.

அடுத்த இரண்டு வாரங்கள்வரை நவலங்காவில் குந்தளப்பிரேமா வெளியாகவில்லை. சில அசந்தர்ப்பங்களினால் தொடர் நாவல் இரண்டு வாரங்களுக்குத் தற்காலிகமாக நின்றிருப்பதாய் ரமணி அறிவித்திருந்தான் ஆயினும் கதையை எப்படி முடிப்பதென்று அவன் மனதில் கடுமையான போராட்டம் நடந்துகொண்டிருப்பதுதான் இதற்குக் காரணமென்பதை பிரேமாவும் லீலாவும் சுலபமாக ஊகித்துக்கொண்டார்கள்.

# 15. மின்னலின்றி கோடையிடி!

மின்னலின்றி கோடையிடி இடிப்பதைப்போல மறு வாரம் பாரிஸ்டர் இளையதம்பிக்கு வந்த ஒரு கடிதம் எல் லோருக்கும் பாரதூரமான அதிர்ச்சியை உண்டுபண்ணியது

அன்று வெள்ளிக்கிழமை. பிரேமா செட்டியார் தெரு வுக்கு சுவாமி தரிசனம்செய்யப் போயிருந்தாள். வீட்டுக்குத் திரும்பியவுடன் அவளுக்கு ஒருபெரிய அதிர்ச்சி காத்திருந் தது.

'எஜமான் என்னமோ ரொம்பக் கோபமாயிருக்கிறுங்க! வந்தவுடனேயே உங்களை மாடிக்கு வரச்சொன்னுங்க' என் ருள் வேலைக்காரி.

நான் கோவிலுக்குப் போயிருந்தபொழுது வீட்டில் என்ன நடந்தது? யாராவது வந்துவிட்டுப் போனுர்களா?' என்று நிதானமாகக் கேட்டாள் பிரேமா.

'தபால்காரன் வந்துவிட்டுப் போனுன். கொஞ்சநேரம் கழித்து அச்சாபீஸ் மானேஜரை எஜமான் அழைத்துவரச் சொன்னுரு. அவரிடம் எஜமான் பிரமாதமாய்ச் சப்தம் போட்டு பேசிக்கொண்டிருந்தார். வேறு ஒருவரும் வீட் டுக்கு வரவில்லை!' என்ருள் வேலைக்காரப்பெண்.

நவலங்கா சம்பந்தமாகத்தான் ஏதாவது தகராறு ஏற் பட்டிருக்கவேண்டுமென்று பிரேமா நினைத்துக்கொண்டு தன் தகப்பனுர் அறைக்குச் சென்ருள்.

பிரேமா:- என்ன அப்பா, என்னை அழைத்தீர்களாமே!

இளையதம்பி:- ரமணி என்ன செய்திருக்கிறுன் பார்த் தாயா? அவனை நம்பி ஏராளமான பணத்தை முதலீடுசெய்ய வேண்டுமென்று நீ சொன்னபொழுதே இதுமாதிரித் தொழி லெல்லாம் நமக்கு சரிப்பட்டுவராதென்று நான் ஆட்சேபித்

தேன். என் வார்த்தையை நீ கேட்பதாயில்லை. ரமணி உல கப் பிரசித்திபெற்ற எழுத்தாளனென்றும் ஆகாயத்தை வில் லாய் வளைத்துவிடுவான், மணலைக் கயிருய்த் திரித்துவிடு வான் அப்படி, இப்படி என்று வானளாவிப் புகழ்ந்து நவ லங்காவை ஆரம்பிக்கச் சொன்னுய். இப்பொழுது அவன் செய்திருக்கும் அயோக்கியத்தனத்தைப் பார்த்தாயில்லையா?

பிரேமா:- ஏன் அப்பா இப்படிப் படபடப்பாக பேசு கிறீர்கள்? அவர் என்ன செய்தார்? விஷயத்தைச் சொல் லாமல் கோபித்துக்கொண்டீர்களானுல் என்ன செய்வது?

இளையதம்பி:- இன்னும் என்ன செய்யவேண்டும்? இதோ இந்தக் கடிதத்தைப் படித்துப்பார்.

இளையதம்பி கொடுத்த கடிதத்தை பிரேமா படிக்க வாரம்பித்தாள். அதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது:-

நவலங்கா முதலாளியவர்களுக்கு,
கொழும்பு.

அன்புள்ள ஐயா,

ஸ்ரீமதி சாந்தா அம்மையாரினுல் எழுதப்பட்ட வனஜா என்ற நாவலை தங்கள் பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ ரமணி காப்பியடித்து தம்முடைய பெயரிலேயே நவலங்காவில் பிர சுரம் செய்துவருவதாக எங்கள் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டது. அதன்மீது நவலங்காவின் பழைய பிரதிகளைத் தருவித்துப் பார்த்ததில் அதில் பிரசுரமாகும் குந்தளப் பிரேமாகதை எமது கட்சிக்காரராகிய ஸ்ரீமதி சாந்தா அம் மையாரினுல் எழுதப்பட்ட வனஜா புத்தகத்தை வைத்துக் கொண்டு பெயர்களை மட்டும் மாற்றிவைத்து எழுதப்பட்ட தென்பது ருசுவாகியிருக்கிறது. நவலங்கா பத்திரிகை ஆரம் பிக்கப்படுவதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னரே வனஜா புத்தகம் பிரசுரமாகி மார்க்கெட்டில் விற்பனைக்கு இருந்த தென்பதை குறிப்பிட விரும்புகிறேம்.

இந்தியாவில் வனஜா புத்தகம் இரண்டு பதிப்புகள் அச் சிட்டு எண்பதினுயிரம் புத்தகங்கள் விற்பனையாகியிருக்கின்

றன. இலங்கையில் குறைந்தபட்சம் ஐம்பதினுயிரம் பிரதி களேனும் சுலபமாக விற்பனையாகவேண்டும். இப் புத்தகத்தி லிருந்து காப்பியடித்து குந்தளப்பிரேமா என்ற பெயருடன் அதே கதையை தங்கள் பத்திரிகை பிரசுரித்து வருவதினுல் எமது கட்சிக்காரருக்கு நஷ்டமேற்பட்டிருக்கிறது.

ஆகையால் இந்த நஷ்டத்துக்கு தாங்கள் ரூபா 50,000 ஈடு செலுத்த வேண்டுமென்றும் இல்லாதபட்சத்தில் நஷ்டஈடு தொகையை வசூலிக்க கோர்ட்டில் வழக்குத் தொடரப்படு மென்றும் இதனுல் தெரிவித்துக்கொள்ளுகிறேம்.

இப்படிக்கு

எஸ். குணரத்ன,

கமலாலயம்,

கொழும்பு கிளேக் காரியாலயம்.

இந்தக் கடிதத்தை பிரேமா படித்து முடித்தவுடன் சிறிதுநேரம் மௌனம் சாதித்தாள். இளேயதம்பி ஆத்திரம் அடங்காதவராய்ப் பேசவாரம்பித்து 'படித்துப்பார்த்தாயல் லவா கடிதத்தை! ரமணியின் அயோக்கியத்தனத்துக்கு இன்னும் என்ன அத்தாட்சி வேண்டும்? நாம் பத்திரிகை நடத்தும் யோக்கியதையைப் பார்த்து ஊரே சிரிக்கிறது. இவ்வளவுகாலம் நமக்கு ஒன்றுமே தெரியாமலிருந்திருக்கி றது. பி சுரமான ஒரு புத்தகத்தைக் காப்பியடித்து சொந் தக் கதைமாதிரி பத்திரிகையில் போட வெட்கமில்லேயா என்று கேட்டு நூற்றுக்கணக்கான கடிதங்கள் பத்திரிகால லயத்துக்கு வந்திருக்கின்றனவாம். அவ்வளவு கடிதங்களே யும் மானேஜர் ரகசியமாக வைத்துக்கொண்டு ஒன்றுமே சொல்லாமலிருந்திருக்கிருர். இந்தக் கடிதம் வந்தபிறகு அழைத்து விசாரித்தபொழுதுதான் குந்தளப்பிரேமாவைப் பற்றி புகார்செய்து நூற்றுக்கணக்கான கடிதங்கள் காரியா லயத்துக்கு வந்திருக்கிறதென்று சொல்லுகிருன் அந்த முழு முட்டாள்!' என்ருர்.

பிரேமா:- இந்த நஷ்டஈடு கோரிக்கைக் கடிதம் கமலாலயத்தின் இலங்கைக் கிளை ஸ்தாபனத்திலிருந்தல்லவா வந்திருப்பதாகத் தெரிகிறது?

இளையதம்பி:- யாரிடமிருந்து வந்தாலும் விஷயம் ஒன்றுதானே? சென்னை காரியாலயத்தார் வழக்கெடுத்து நடத்தும்படி இங்குள்ள தங்களுடைய கிளை ஸ்தாபனத்துக்கு உத்தரவிட்டிருப்பார்கள். அதன்பேரில் இவர்கள் வழக்கறிஞர் மூலமாக நோட்டீஸ் கொடுத்திருக்கிறார்கள். இப்படி நோட்டீஸ் வரப்போகிறதென்பதுகூட நம் மனேஜருக்கு நான்கைந்து நாட்கள் முன்பே தெரியுமாம். அதையும் நமக்குச் சொல்லாமலிருந்திருக்கிறான். இதை நினைத்தால்தான் அவனை என்னசெய்வதென்றே தெரியவில்லை.

பிரேமா:- நான்கைந்து நாட்களுக்குமுன்பே மானேஜருக்கு எப்படித் தெரிந்திருக்கமுடியும் அப்பா! தெரிந்திருந்திருந்தால் இவ்வளவு பெரிய விஷயத்தை காரியம் மிஞ்சிய பிறகும் நம்மிடம் மானேஜர் சொல்லாமலிருந்திருப்பாரா?

இளையதம்பி:- வெளுத்ததெல்லாம் பால் என்று நம்பும் வெகுளி நீ! உனக்கு ஒன்றும் தெரியாது. ஒருநாள் நம் மனேஜர் கடைவீதிக்குச் சென்றிருந்தபொழுது கமலாலயத்தார் சென்னையிலிருந்து இப்படி ஒரு கடிதம் வந்திருப்பதாயும், தாங்கள் நஷ்டஈடு வழக்குத் தொடரப்போவதாயும் சொன்னார்களாம். அப்பொழுதாவது இதை உடனே நம்மிடம் சொல்லியிருக்கவேண்டுமில்லையா?

பிரேமா:- அப்பா, சாந்தாவின் வனஜா புத்தகத்தை நானும் படித்திருக்கிறேன். அதுவும் குந்தளப்பிரேமாவும் ஒரே கதைதானென்பது உண்மைதான். அதில் ஆட்சேபணையில்லை. ஆனால் ஒன்றுமட்டும் எனக்கு நிச்சயமாகத் தெரியும். வனஜாவைப் பார்த்து ரமணி காப்பியடிக்கவில்லை! இதை நீங்கள் நம்பலாம்.

இளையதம்பி:- அதெப்படி? நஷ்டஈடு கடிதமனுப்பிய வர்களும் நூற்றுக்கணக்கான புகார் கடிதங்கள் எழுதிய வர்களும் முட்டாள்களா?

பிரேமா:- பதட்டமில்லாமல் கேளுங்கள் அப்பா! ரமணி இலங்கைக்கு வந்தபிறகுதான் வனஜா புத்தகம் இந்தியாவில் பிரசுரமாகியிருக்கிறது நவலங்காவில் குந்தளப்பிரேமா பிர சுரமாகத் தொடங்கிய ஒரு வாரத்துக்குப் பின்னரே வனஜா இந்தியாவில் பிரசுரமானதற்கு அப் புத்தகத்திலிருக்கும் முன் னுரையின் தேதியே சரியான ருசு. தவிர சில தினங்களுக்கு முன்புதான் அந்தப் புத்தகம் இலங்கைக்கு வந்திருக்கிறது. இதில் ஒரு பெரிய மர்மம் இருக்கிறது, அப்பா! அது ரமணி ஒருவருக்குத்தான் தெரியும்.

இளையதம்பி:- ஒரு ரகசியமும் இல்லை. இந்தியாவில் புத்தகம் மார்க்கெட்டுக்கு வருவதற்குமுன்பே ரமணிக்கு ஒரு பிரதி கிடைத்திருக்கவேண்டும். அதை வைத்துக் கொண்டு இந்த முட்டாள் காப்பியடித்திருக்கிறான். சுயமாக எழுதும் யோக்கியதையற்றவனை ஆசிரியனாக வைத்துக் கொண்டு பத்திரிகை நடத்துகிறாயே உனக்கு வெட்கமில் லையா என்று ஒருவன் கேட்டு கடிதம் எழுதியிருக்கிறான். அவனுக்கு என்ன பதில் சொல்ல? உன் பேச்சைக்கேட்டு நாதியற்றுத் தெருவில் திரிந்துகொண்டிருந்தவனுக்கு வேலை யும் கௌரவமும் கொடுத்தது நம்முடைய கௌரவத்தையே பாழ்படுத்திவிட்டது. ஏதோ சமரசம்பேசி ஒன்றுக்குப் பாதி யாகவேனும் நஷ்டஈடு கொடுத்து கோர்ட்டில் நமது கௌர வம் சந்திசிரிக்காமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

பிரேமா நேராக கமலாலயத்துக்குப்போக நினைத்து லீலாவிடம் சென்று எல்லா விஷயங்களையும் சொன்னாள். கொழும்பில் தான் இருப்பது கமலாலயத்துக்குத் தெரியக் கூடாதென்று ரமணி ஏன் சொன்னான்? தன்பெயரையே அவன் ஏன் மாற்றிவைத்துக்கொள்ளவேண்டும்? சுந்தரம் இலங்கையிலிருக்கிறானென்பதை வாய்தவறிக்கூட கமலால யத்துக்குச் சொல்லிவிடக்கூடாதென்று திரும்பத்திரும்ப

ரமணி வற்புறுத்தியதற்கும் வனஜா புத்தகத்துக்கும் ஏதாவது சம்பந்தமிருக்கவேண்டுமென்று பிரேமாவும் லீலாவும் நினைத்தார்கள். கமலாலயத்துக்குப்போய் விசாரித்தால் பல உண்மைகள் புலப்படலாமென்று அவர்களுக்குத் தோன்றியது. ஆகையால் இருவரும் கமலாலய மானேஜரைச் சந்திக்கச் சென்றனர்.



ஆனால் கமலாலய மானேஜர் இவர்களுக்கு எவ்விதத் தகவலும் கொடுப்பதாயில்லை. நவலங்கா மீது நஷ்டஈடு வழக்குத் தொடரும்படி தலைமைக் காரியாலயத்திலிருந்து தகவல்கிடைத்ததாயும் அதன்படி ஒருவழக்கறிஞர்மூலம் நோட்டீஸ் அனுப்பியதாயும் அதற்குமேல் தங்களுக்கு ஒன்றும் தெரியாதென்றும் மானேஜர் கூறினார்.

பிரேமா:- குந்தளப் பிரேமா பிரதிகளை இந்தியாவுக்கு நீங்கள்தான் வாங்கியனுப்பினீர்களா?

மானேஜர்:- நவலங்காவின் பழைய பிரதியொன்றை சென்னையில் எங்கோ பார்த்ததாயும் குந்தளப்பிரேமா கதை வெளியான பழைய பிரதிகளையெல்லாம் வாங்கியனுப்ப வேண்டுமென்றும் இனி நவலங்கா பத்திரிகையை தொடர்ச்சியாக ஒவ்வொரு இதழிலும் இரண்டு மூன்று பிரதிகளுக்குக் குறையாமல் வாங்கியனுப்பவேண்டுமென்றும் சென்னை

தலைமைக் காரியாலயத்திலிருந்து கடிதம் வந்தது. அதன்படி வாங்கியனுப்பினோம். பிறகு குந்தளப்பிரேமா கதை எழுதும் ரமணி என்பவர் யார் என்றும் அவருடைய அங்க அடையாளங்கள் என்ன என்றும் முடியுமானால் அவருடைய போட்டோ ஒன்று வாங்கியனுப்பும்படியும் எழுதியிருந்தார்கள். இவைகளை விபரமாக எழுதினோம். தங்களுடைய கல்யாணத்துக்காக போட்டோபடம் பிடிக்கவந்த போட்டோக்கிராப்பரிடம் நாங்கள் சொல்லியனுப்பினோம். அவர் உங்களைப் படம்பிடித்தபொழுது சற்று தூரத்தில் நின்ற ரமணியையும் ஒரு படம்பிடித்துக் கொடுத்தார். அதையும் சென்னைக்கு அனுப்பியபிறகு வழக்குத் தொடரும்படி கடிதம் வந்தது.

பிரேமா:- அப்படியானால் ரமணி யாரென்பது தெரிந்து தான் இந்த வழக்குத் தொடர்ந்திருக்கிறார்களென்று சொல்லுங்கள்.

மனேஜர்:- அப்படித்தான் தோன்றுகிறது.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கையில் சாந்தாவிடமிருந்து கமலாலய மானேஜருக்கு ஒரு முக்கியமான தந்தி வந்தது.

அந்தத்தந்தியில் பின்வருமாறு குறிப்பிடப்பட்டிருந்தது:-

"வழக்கறிஞர்மூலம் நோட்டீஸ் கொடுத்திருப்பீர்களென்று நம்புகிறேன். நான்கு நாட்களில் நான் கொழும்புக்குப் புறப்பட்டு வருகிறேன். சமரசம்பேச விரும்பினால் ரமணியுடன் கமலாலயத்துக்குவந்து என்னை நேரில் சந்திக்கும்படி நவலங்கா முதலாளிக்கு எழுதுங்கள்.

சாந்தா.

இந்தத் தந்தியைப் பார்த்தவுடன் பிரேமாவுக்கு ரமணியிடம் வைத்திருந்த சொற்ப நம்பிக்கையும் சிதையவாரம்பித்தது. உண்மையாகவே ரமணி காப்பியடித்திருக்காவிட்

டால் சாந்தா பணச்செலவு செய்துகொண்டு கொழும்புக்கு வருவாளா? என்று நினைத்தபொழுது ரமணியிடம் அவளுக்குச் சிறிதளவு வெறுப்புத் தட்டவும் ஆரம்பித்தது.

"சாந்தா நேரில் வருவதென்றால் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. ரமணியை வைத்துக்கொண்டு அவளுடன் நேருக்குநேராகப்பேசி கோர்ட்டுக்குப் போகாமலே இந்த விஷயத்தை ஒருவாறு முடித்துவிடலாம். எதற்கும் என் தகப்பனுருக்கு நீங்கள் ஒரு கடிதம் எழுதுங்கள்" என்று கமலாலய மனேஜரிடம் பிரேமா சொல்லிவிட்டு லீலாவுடன் கிளம்பினுள்.

இந்தத் தந்தியைப்பற்றி என்ன நினைக்கிறாய் லீலா?" என்று வரும்வழியில் கேட்டாள் பிரேமா.

லீலா:- "நினைப்பதற்கு என்ன இருக்கிறது? குந்தளப் பிரேமா கதையில் புதைந்துகிடக்கும் மர்மம் எல்லாம் வெளியாகவேண்டிய காலம் வந்துவிட்டதென்று நினைக்கிறேன்.

பிரேமா:- அப்படியென்றால் நீ சொல்வதின் அர்த்தம் புரியவில்லையே!

லீலா:- குமாரி சாந்தா புத்தக வழக்குக்காக கொழும்புக்குப் புறப்பட்டு வருவாளென்று எனக்குத் தோன்றவில்லை. நஷ்டஈடு வசூலிப்பதைத்தவிர அவளுக்கு வேறு நோக்கம் இல்லாதிருக்குமானல் அவள் நேரில் எதற்காக வரவேண்டும்? வழககறிஞர் மூலமாகவே வழக்கு நடத்தி வசூலித்துக்கொள்ளலாமில்லையா?

பிரேமா:- வழக்கு நடத்தாமல் சமரசமாகப் பணம் வசூல் செய்யவேண்டுமென்பதற்காக வருவதாய் தந்தியில் தான் குறிப்பிட்டிருக்கிறாளே! நஷ்டஈடு வசூலித்தாற்போலவும் ஊரைச் சுற்றிப்பார்த்தமாதிரியும் இருக்குமென்று நினைத்து வரக்கூடாதா?

லீலா:- நான் அப்படி நினைக்கவில்லை. சாந்தாவின் புத்தகங்களை படிப்பதில்லை; அவளுடைய பெயரை காதினுலும்

கேட்பதில்லையென்று ரமணி வைராக்கியம் செய்துகொண்டிருப்பதைப் பார்த்தால் அவருக்கும் சாந்தாவுக்கும் நிச்சயம் ஏதோ சம்பந்தமிருக்கவேண்டுமென்றே எனக்குத் தோன்றுகிறது. தவிர போட்டோவையும் அவள் தருவித்துப் பார்த்துவிட்டு வருகிருளென்பதை மறந்துவிடாதே. இவர்கள் இருவருடைய வாழ்க்கையிலும் ஏதோ பெரிய மர்மம் இருக்கிறது. அது வெளியாகவேண்டிய காலம் வந்துவிட்டது. இன்று வியாழக்கிழமையில்லையா? திங்கட்கிழமை காலை சாந்தா வந்துவிடுவாள். அதன்பிறகு எல்லாம் தானே தெரிகிறது. ஆமாம், சாந்தாவின் வழக்கறிஞர் நஷ்டஈடு கேட்டிருப்பது ரமணிக்குத் தெரியுமா? அவரிடம் இதைப் பற்றி நீ கேட்டாயோ?

பிரேமா:- இல்லை. அவருடன் இதைப்பற்றி நான் பேசவேகூடாதென்று அப்பா சொல்லியிருக்கிறார். குந்தளப்பிரேமாவைப்பற்றி புகார்செய்துவந்த கடிதங்களை ரமணிக்கு அனுப்புவதாயும் அவராக வலுவில் என்ன சொல்லுகிருரென்று பார்க்கலாமென்றும் அப்பா சொன்னார். ஆகையால் இதைப்பற்றி அவரிடம் நான் ஒன்றுமே கேட்கவில்லை.

இவர்கள் இப்படி பேசிக்கொண்டே பங்களாவுக்கு வந்துசேர்ந்தார்கள். பிரேமா சொல்லியதுபோல இளைய தம்பி சாந்தா எழுதிய வனஜா புத்தகத்தையும் குந்தளப் பிரேமாவைப்பற்றி வந்த புகார் கடிதங்களையும், நஷ்டஈடு கோரி வழக்கறிஞரிடமிருந்து வந்த கடிதத்தையும் ஒரு பெரிய கட்டாகக்கட்டி ரமணிக்கு அனுப்பிவைத்தார். முதலாளியிடமிருந்து வந்ததால் அதை ரமணி உடனே பிரித்துப்பார்த்தான்.

கடிதங்களைப் படித்தபொழுது ரமணிக்கு அவனை மீறிக் கொண்டு ஆத்திரம் வந்தது. மானேஜரை உரத்துச் சப்தமிட்டுக் கூப்பிட்டு 'இதெல்லாம் என்ன நாடகம்? என்று அதட்டிக்கேட்டான்.

மானேஜர்:- முதலாளி அனுப்பியிருக்கிருர் உங்கள் பார்வைக்கு.

ரமணி:- இவ்வளவு கடிதங்களும் ஒரேநாளிலா வந்தன? இவைகளை இதற்குமுன் எனக்கு ஏன் காட்டவில்லை?

மானேஜர்:- நீங்கள் விரும்பமாட்டீர்களென்று நினைத்து காட்டாமலிருந்துவிட்டேன். அது என் குற்றம்தான். இப்பொழுது விஷயம் மிஞ்சிவிட்டபடியினுல் அவற்றை முதலாளிக்குக் காட்டவேண்டியதாகிவிட்டது. அதுவும் நாளுகக் காட்டவில்லை. அவர் அழைத்து விசாரித்ததால் காட்டினேன். என்னிடம் கோபிப்பதில் என்ன பிரயோசனம் ஸார்! சம்பளம் கொடுக்கும் முதலாளிக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டியவன்தானே நான்?

மானேஜர் சொல்லுவதில் நியாயமிருப்பதாக ரமணிக்கும் தோன்றியது. 'உண்மை! நீங்கள் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. முதலாளிக்கு இந்தக்காரியாலயம் முழுவதும் சொந்தம். அவர் நினைத்தால் என்ன வேண்டுமானுலும் செய்யலாம். இருந்தாலும் இந்த முட்டாள்களைப்போல நமது முதலாளியும் முழு முட்டாளாக இருப்பாரென்று நான் எதிர்பார்க்கவில்லை. பொருமையினுல் யாரோ சில பயித்தியக்காரன்கள் புகார்செய்திருக்கிருர்கள். அதைப்பார்த்துப் பயந்துபோயிருக்கிருர்.

மானேஜர்:- இல்லை. நீங்கள் எல்லாக் கடிதங்களையும் படித்துப்பார்க்கவில்லையென்று நினைக்கிறேன். வனஜா புத்தகம் எழுதிய சாந்தா அம்மாள் நம்மிடமிருந்து நஷ்டஈடு கேட்டிருக்கிருள். அதைப் பார்த்தபிறகுதான் முதலாளிக்கு சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது.

ரமணி:- நஷ்டஈடு கேட்டாலென்ன? அவள் புத்தகத்தைப் பார்த்து நான் காப்பியடிக்கவில்லையென்பதை ருசுப்படுத்தினுல் போதுமில்லையா? அதற்கு இவ்வளவு பதட்டமும் ஆர்ப்பாட்டமும் எதற்காக?

மானேஜர்:- நான் சொல்லுவதைக்கேட்டு தயவுசெய்து கோபித்துக்கொள்ளக்கூடாது. நீங்கள் குந்தளப்பிரேமா கதையை எழுதும்போதெல்லாம் நான் கூடவே இருந்து பார்த்திருக்கிறேன். நீங்கள் எதையும் பார்த்து எழுதாமல் சுயமாக எழுதியதை நான் நேரிலேயே கவனித்ததால்தான் உங்கள் நாவலைப்பற்றி புகார்செய்துவந்த கடிதங்களையெல்லாம் பொறாமைபிடித்தவர்களின் காரியமென்று நினைத்து உங்களுக்குக் காட்டாமலே வைத்திருந்தேன். ஆனால், இப்பொழுது வனஜா புத்தகத்தைப் படித்தபிறகு என்னுடைய நம்பிக்கை சிதைந்துபோய்விட்டது. தயவு செய்து கோபிக்கக்கூடாது. வனஜாவைப்பார்த்து நீங்கள் காப்பியடிக்கவில்லையென்று எனக்குத் தெரியும். ஆனால், உலகம் அதை நம்பவேநம்பாது. அந்தக்கதையைப் படித்துவிட்டுத்தான் குந்தளப்பிரேமாவை நீங்கள் எழுத ஆரம்பித்திருக்கவேண்டுமென்று இப்பொழுது எனக்குத் தோன்றுகிறது.

இப்படிச்சொல்லிவிட்டு மானேஜர் சட்டென்று வெளியே போய்விட்டார். எல்லோரும் ஒருமுகமாகக் குற்றஞ்சாட்டியதினால் ரமணியின் சுயமரியாதைக்கே அதிர்ச்சியேற்பட்டுவிட்டது. ஆத்திரம் கொஞ்சம் தணிந்தபிறகு இதுவரை சந்தாவின் புத்தகங்களைப் படிப்பதில்லையென்ற வைராக்கியத்தைக் கைவிட்டு வனஜாவைக் கையிலெடுத்துப் படிக்கவாரம்பித்தான்.

வனஜாவைப் பாதி படித்தவுடனேயே ரமணியின் தலை சுற்றவாரம்பித்தது அவனுக்குத் தனது கண்களை நம்ப முடியவில்லை. ஒருமணி நேரத்தில் படித்து முடிக்கவேண்டிய புத்தகத்தை வாசிக்க மூன்றுமணிநேரம் பிடித்தது. ஒவ்வொரு கட்டங்களிலும் நிறுத்திவிட்டு அவன் யோசிக்கலானான். அதி தீவிரமான யோசனை அவனுக்கு மூளைக் குழப்பத்தையே உண்டுபண்ணிவிடும்போலிருந்தது. தன்னுடைய வாழ்க்கையில் நிகழ்ந்த ஒவ்வொரு சிறு சம்பவத்தையும் வனஜா புத்தகம் சித்தரிப்பதைப் படிக்கப்படிக்க அவனுடைய சப்த நாடிகளும் அதிர்ச்சியடைந்தன. பிள்ளைப் பிராயத்தில் குந்தளம் தனக்குக் கல்யாணம் செய்துவைக்கவேண்டுமென்று

பிடிவாதம்செய்து அழுதது; தனக்கும் குந்தளத்துக்கும் பாஸ்கரய்யர் விளையாட்டாகக் கல்யாணம் செய்துவைத்தது; அப்பொழுது முனிசாமி நாதசுர கிராமபோன் பிளேட்டு வைத்தது; இவைகளைப்பார்த்து தனது தாயார் ஆத்திரமடைந்து தன்னைப் பிரித்துக்கொண்டு சென்னைக்குப் போனது முதலான ஒவ்வொரு சம்பவமும் கல்லும்கரையும்படி உருக்கமாக வர்ணிக்கப்பட்டிருந்தது வனஜாவில்.

வனஜாவுக்கும் தான் எழுதும் குந்தளப்பிரேமாவுக்கும் ஒரே ஒரு வேற்றுமையைத்தான் ரமணி கண்டான். கதாநாயகன் கோபால் குந்தளத்தை உள்ளன்புடன் நேசித்து அவளை மணக்கமுடியாமற் போனபடியினால் வாழ்க்கையை வெறுத்து பரதேசியைப்போல அயல்நாடு போய்விடுகிறான். ஆனால் குந்தளத்துக்கு கோபாலிடம் காதலிருக்கிறதா? இதை அவள் எவ்விதத்திலும் காட்டியதாக ரமணி தனது கதையில் குறிப்பிடவில்லை. கோபாலின் காதல் ஒருதலைக் காதலாயிருக்கிறது. குந்தளத்தைக் காதலித்து அவளுடைய மனதை அறியாமலே அவன் அஞ்ஞாதவாசம் செய்யப் போய்விடுகிறான். இதுதான் ரமணி எழுதும் குந்தளப்பிரேமா கதையின் போக்கு. சாந்தா எழுதியுள்ள வனஜாவிலோ இதற்கு நேர்மாறாக வர்ணிக்கப்பட்டிருந்தது. வனஜாவின் காதலை சாந்தா வெகு உருக்கமாக வர்ணித்திருந்தாள். கிராமக் கோவிலில் கதாநாயகனின் மனதை அறியக் கடைசிமுறையாக ஒருதடவை முயற்சித்ததாயும் அம்முயற்சியும் தோல்வியடையவே தற்கொலை செய்துகொள்ளும் எண்ணத்தோடு வீட்டைவிட்டு ஓடியதாயும் தற்செயலாகக் கதாநாயகனைப் பிறகு சந்திக்க நேரிடவும் இருவருக்கும் திருமணம் நடந்ததாயும் வனஜா கதையை சாந்தா முடித்திருந்தாள். வனஜாவின் கதை ரமணிக்குப் பல சந்தேகங்களைக் கிளப்பிவிட்டன. ஒரு விஷயத்தை அவன் தீர்மானப்படுத்திக்கொண்டான். குந்தளம் சொல்லியே இக் கதையை சாந்தா எழுதியிருக்கவேண்டுமென்பதில் அவனுக்குச் சிறிதும் சந்தேகமில்லை. தன்னையும் குந்தளத்தையும்தவிர வேறு ஒருவருக்கும் தெரியமுடியாத பல சிறு சம்பவங்கள்கூட வனஜா

கதையிலிருந்தது அவனுடைய அபிப்பிராயத்தை நன்கு ஊர்ஜிதப்படுத்திவிட்டது.

"குந்தளம் சொல்லி எழுதிய கதையாயிருந்தால் இதன் படி குந்தளத்துக்கு என்னிடம் உள்ளன்பு இருந்தேதீர வேண்டும். அவள் என்னிடம் காதல் கொண்டிருப்பது உண்மையா? அந்த பாக்கியம் எனக்குக் கிடைத்திருந்துமா முட்டாள்தனமாக அதை உதறித்தள்ளிவிட்டு கோழைத்தனமாக இலங்கைக்கு ஓடிவந்துவிட்டேன்? பெண்களைத்தான் பேதையென்பார்கள்? அவர்களைவிட மோசமாக, பேடித்தனமாக அல்லவா நான் நடந்துகொண்டுவிட்டேன்? இப்பொழுது ஞாபகம் வருகின்றது. அன்று விளநகர் கிராமக் கோவிலில் அவள் சொல்லிய ஒவ்வொரு வார்த்தைகளும்! ஆனால் அன்று தன்னுடைய காதலை கடைசிமுறையாக வெளியிட்டதாயும் ஆனால் அவள் மனதை நான் ஏமாற்றமடைந்து உடையச்செய்துவிட்டதாயும் எழுதியிருப்பதைத்தான் என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. குந்தளத்தின் மனதை அறிய நான் எவ்வளவு முயற்சிகள் செய்துபார்த்தேன்? ஒன்றுக்கும் அசைந்து கொடாமல் என்னிடம் ஆசையிருப்பதை ஒருசிறிதும் காட்டிக்கொள்ளாமலிருந்துவிட்டு இப்பொழுது என் பேரிலேயே குற்றஞ் சாட்டுகிறாள்! இது என்ன நியாயம்? இதெல்லாம் எப்படியாவது போகட்டும்! அவள் மனம் இப்பொழுது தெரிந்ததே போதும். இதை எனக்கு உணர்த்திக் காட்டவே வனஜா கதையை எழுதச் சொல்லியிருப்பாளோ? ஏன் அப்படி இருக்கக்கூடாது? சாந்தாவை விசாரித்தால் எல்லாம் தெரிந்துவிடும். பட்டுப்போன மரத்தைத் துளிர்க்கவைத்த பரம்குரு அவள் எனக்கு! கடலில் சாவுக்கு மன்றாடும் மனிதனைக் கைதூக்கி உயிர்ப்பிச்சை கொடுத்த கண்கண்ட தெய்வம் சாந்தா! அவளிடம் நான் எவ்வளவு வெறுப்புக்கொண்டிருந்தேன்? என் வாழ்க்கையில் குறுக்கிட்ட எமன் என்று எவ்வளவுமுறை அவளைச் சபித்தேன்? குந்தளத்தின் மனதை நோகச்செய்த மகா பாதகி என்று எவ்வளவுமுறை வாயாரத் திட்டிக் கொட்டினேன்? சத்ருவாக ஒரு காலத்தில் தென்பட்ட

அதே சாந்தா இன்று என்வாழ்வை மலரச்செய்த புனித வதியாகிவிட்டாள். அவளை நான் கையெடுத்துக் கும்பிட்டாலும் தகும். கமலாலயத்தின் மூலமாக இன்றே அவளுக்குக் கடிதம் எழுதுகிறேன்! நான் இலங்கையிலிருப்பதை சாந்தாவின்மூலம் அறிந்தால் குந்தளம் எவ்வளவு சந்தோஷப்படுவாள்!'

இப்படி மனம்போனவாறு சிந்திக்கலானான் ரமணி. அவன் முகத்தில் ஒரு புதியகளை ஏற்பட்டது. பேயடித்தவன் போன்றிருந்தவனிடம் திடீரென்று ஒரு புதிய உற்சாகமும் ஆனந்தமும் தாண்டவமாடின. இந்தச் சந்தர்ப்பத்தில்தான் கவலை தோய்ந்த முகத்துடன் பிரேமா அறையில் நுழைந்தாள். வரும்பொழுது அவள் என்னென்னவோ நினைத்துக்கொண்டு வந்தாள். ரமணி வெட்கிக் குன்றிப்போயிருப்பானென்றும் அவனுடன் எப்படிப் பேசுவது? என்ன பேசுவது? எவ்விதம் அவனிடமிருந்து உண்மையைக் கிரகிப்பது? என்று யோசித்துக்கொண்டும் கலக்கத்துடன் அவள் வந்தாள். ஆனால் ரமணியின் முகம் என்றுமில்லாத மலர்ச்சியடைந்திருப்பதைப் பார்த்ததும் அவனுக்கு இன்னும் ஒன்றுமே தெரியாதோ என்று அவள் சந்தேகிக்கவாரம்பித்தாள்.

## 16. உண்மையைச் சொன்னுன்

ரமணியிடம் அன்று என்றுமில்லாத உற்சாகமும் ஆனந்தமும் குடிகொண்டிருந்ததையறிந்த பிரேமா ஒரு நிமிடம் திகைத்துப்போனுள்.

'அப்பா அனுப்பிய கடிதங்களெல்லாம் வந்ததா?' என்று தீனஸ்வரத்தில் பிரேமா பிறகு வினவினுள்.

ரமணி:- 'ஆம் பிரேமா! உன் தகப்பனருக்கு நான் ரொம்பக் கடமைப்பட்டிருக்கிறேன். அவருக்குமட்டுமல்ல, வனஜாவை நான் காப்பியடித்திருப்பதாகப் புகார் செய்து கடிதம் எழுதிய ஒவ்வொருவருக்கும் நான் கடமைப்பட்டிருக்கிறேன்.'

பிரேமா:- நீங்கள் சொல்லுவது ஒன்றும் புரியவில்லையே!'

ரமணி:- புரியாது பிரேமா! எல்லாம் புரியவேண்டிய காலம் வந்துவிட்டது. விரைவில் தெரிந்துகொள்ளுவாய். இவ்வளவு புகார்களும் கிளம்பியிராவிட்டால் வனஜா புத்தகத்தை நான் படித்திருக்கப்போவதில்லை. இவ்வளவுகாலமும் எனக்கே தெரியாமலிருந்த பல உண்மைகளும் தெரிந்திருக்கப்போவதில்லை. அந்தக் கதையை எழுதிய சாந்தாவை நான் கையெடுத்துக் கும்பிடவேண்டும்!

பிரேமா:- அப்படியா! நேரில் கும்பிடும் நாள் அதிக தூரத்திலில்லை. நாளை மறுதினம் சாந்தா கொழும்புக்கு வருகிருள்.

ரமணி:- யார்? சாந்தாவா? கொழும்புக்கு வருகிருளா? நாளை மறுதினம் வருகிருளா? உண்மைதானு பிரேமா?

''உண்மையேதான். இப்பொழுதாவது தெரிகிறதா அவளுடைய நஷ்டஈடு வழக்கு எவ்வளவு தூரத்துக்கு மிஞ்சிவிட்டதென்று?

ரமணி வீடு அதிர்ந்து போகும்படி கலகலவென்று நகைத்தான்.

நஷ்டஈடு வழக்குத் தொடர்ந்த வனஜா கதையின் ஆசிரியை சாந்தா கொழும்புக்கு வருகிறாளென்ற செய்தியைக் கேட்டதும் ரமணி பயந்துபோவானென்று எதிர்பார்த்தாள் பிரேமா. அதற்கு மாறாக ரமணி வீடு கிடுகிடுத்துப் போகும்படி சிரிக்கவே பிரேமாவுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. ரமணி சிரிக்க, அதைப்பார்த்து பிரேமா கற்சிலை போல் சமைந்திருக்க அந்தச் சமயத்தில் பாரிஸ்டர் இளைய தம்பியின் ஆள் ஒருவன் அங்கு வந்துசேர்ந்தான்.

பிரேமா:- 'ஏன், என்ன சமாச்சாரம்?' என்று வந்தவனைக்கேட்டாள்.

பணியாள்:- எஜமான் உங்களைக் கூட்டியரச்சொன்னாக.

ரமணி:- யாரை? என்னையா? இருக்கும். நான் எதிர்பார்த்ததுதான்.

பணியாள்:- இல்லீங்க, சின்ன அம்மாளை.

ரமணி:- சரி, என்னிடம் கேட்பதை உன்னிடம் கேட்கப்போகிறார் போலிருக்கிறது. எப்படியானாலென்ன, விஷயம் ஒன்றுதானே.

பிரேமா:- "சரி நீ போ! இதோ வந்துவிட்டேனென்று சொல்லு" என்று சொல்லிப் பணியாளைப் போகச்சொல்லிவிட்டு ரமணியைப் பார்த்து 'உங்கள் போக்கு எனக்குப் பெரிய புதிர்மாதிரியிருக்கிறது. இப்பொழுதாவது சொல்லக்கூடாதா இந்தக் கூத்துகளெல்லாம் என்ன என்று? அப்பா ஒருபக்கம் கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறார். இந்தக் கேஸ் கோர்ட்டுக்குப்போனால் வெளியில் தலைகாட்ட முடியாமற் போய்விடுமே என்று எங்களுக்கு வர்ணிக்கமுடியாத வேதனையாயிருக்கிறது. நீங்களானால் சிரிக்கிறீர்கள.

ரமணி:- அப்படியானால் வனஜாவை நான் காப்பியடித்திருப்பேனோ என்று நீயும் என்னை சந்தேகிக்கிறாயா?

பிரேமா:- என்மனம் அப்படி நினைக்க மறுக்கிறது. ஆனால் வனஜாவைப் படித்துப் பார்த்தால் என் அறிவே என்னை ஏமாற்றுவதுபோலிருக்கிறது.

ரமணி:- பிரேமா உன்னுடைய அன்பும் விசுவாசமும் பரிசுத்தமானது. போன ஜன்மத்தில் நீ எனக்கு உடன் பிறந்த சகோதரியாக இருந்திருக்கவேண்டும். அந்தப் பூர்வ ஜன்மப் பாசம்தான் இன்னமும் உனக்கு என்னிடம் அலாதியான அன்பு சுரக்கச்செய்கிறது. இனியும் உனக்கோ அல்லது உன் தகப்பனுருக்கோ நான் வேதனை கொடுக்கமாட்டேன். உன்னிடம் உண்மையைச் சொல்லிவிடுகிறேன். வனஜாவைப் பார்த்து நான் காப்பியடிக்கவில்லை. உண்மையில் குந்தளப்பிரேமா என்னுடைய சுயசரித்திரம். அதில் எழுதியுள்ள ஒவ்வொரு வார்த்தையும் எனது வாழ்க்கையில் நிகழ்ந்த சம்பவங்கள். அவை சிறிதும் மிகைப்படுத்தியவைகளல்ல. உண்மைச் சம்பவங்களை கூடியமட்டில் மறைக்காமல் அப்படியே எழுதமுயற்சித்திருக்கிறேன். இன்னொரு விஷயமும் இப்பொழுதே சொல்லிவிடுகிறேன். குந்தளப்பிரேமாவின் முற்பகுதியை இரண்டு வருடங்களுக்கு முன்பே நான் எழுதிவிட்டேன். சென்னையில் படித்துக் கொண்டிருந்தபொழுது இதன் முற்பகுதியை நான் எழுதி ஒரு சமயம் கமலாலயத்திலேயே பிரசுரிக்க எடுத்துச்சென்றேன். பிறகு திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. புத்தகம் அச்சில்வந்து அதைக் குந்தளம் படிக்கநேரிட்டால் ஒரு சமயம் அவள் மனம் நோகுமோ என்று எண்ணி அச்சிடும் யோசனையைக் கைவிட்டேன். ஆனால் அதை என்னிடம் அனுதாபமுடையவர்களும் சென்னையில் உயர்ந்த பதவிகளை வகிப்பவர்களுமான இரண்டுமூன்று நண்பர்களிடம் அப்பொழுதே குந்தளப்பிரேமாவின் கைப்பிரதிகளைக் காட்டியிருக்கிறேன். அவர்களில் இருவர் இப்பொழுது ஜில்லா நீதிபதிகளாயிருக்கிறார்கள். ஆகையால் சாந்தா உண்மையாகவே வழக்குப்போடுவாளாயின் குந்தளப்பிரேமா எனது சுய முயற்சியென்பதை சுலபமாக நான் ருசுப்படுத்த முடியுமென்பதோடு பதிலுக்கும் அவள்மீது நஷ்டஈடு வழக்

குத் தொடர்ந்து பணம் வசூலிக்கவும் முடியும். இதைப்பற்றி நீ கொஞ்சமும் கவலைப்படவேண்டாம். ஆனால் நிச்சயம் இந்த விஷயம் அவ்வளவு தூரத்துக்குப்போகாது. சாந்தா கொழும்புக்கு வருவதின் நோக்கமே வழக்குத் தொடருவதற்காகவோ அல்லது நம்மிடமிருந்து நஷ்டஈடு வசூலிப்பதற்காகவோ இரண்டுக்குமல்ல!

பிரேமா:- ஏன் அப்படி நினைக்கிறீர்கள்?

ரமணி:- நினைக்க நியாயமான காரணங்கள் இருக்கின்றன, பிரேமா! வனஜாவில் அவள் எழுதியுள்ள விஷயங்களை குந்தளத்தினிடமிருந்து கேட்டறிந்தே எழுதியிருக்க வேண்டும். இதில் சந்தேகத்துக்கே இடம் கிடையாது. குந்தளத்தின் தூண்டுதல் பேரிலேயே வனஜாவை அவள் எழுதியிருப்பாளென்பது என் அபிப்பிராயம். குந்தளப்பிரேமா தொடர் நாவலை சாந்தாவோ அல்லது குந்தளமோ படித்திருக்கவேண்டும். அதன் ஆசிரியரை நேரில் பார்க்கவே சாந்தாவை குந்தளம் அனுப்பியிருப்பாளென்று நினைக்கிறேன். எப்படியும் சாந்தாவின்மூலம் குந்தளத்தைப்பற்றிய சகல தகவல்களையும் நான் தெரிந்துகொள்ளலாமென்று நம்புகிறேன்.

பிரேமா:- கடவுள் கிருபையினால் குந்தளத்துக்கு இன்னும் திருமணம் நடக்காமலிருந்து உங்களை மணந்துகொள்ள அவள் விரும்புவதாகவுமிருந்தால் இந்தத் துறவறத்தைக் கைவிட்டுவிடுவீர்களா?

ரமணி:- அவ்வளவு பாக்கியம் எனக்குக் கிடையாது பிரேமா. வீண் கனவுகண்டு எவ்வளவோ ஏமாற்றங்களை அனுபவித்தாகிவிட்டது. இனியுமா அப்படி ஏமார்ந்து அல்லற்படவேண்டுமென்கிறாய்? போதும் பிரேமா, போதும்!

பிரேமா:- அப்படிச் சொல்லாதீர்கள் மிஸ்டர் ரமணி! இரவைத்தொடர்ந்து பகல் வருவதுபோல கஷ்டத்தைத் தொடர்ந்து சுகமும் ஏற்பட்டே தீரவேண்டும். இதுதான் இயற்கையின் நியதி. கடவுள் ஆசீர்வாதம் உங்களுக்குப்

பக்கபலமாயிருக்கும். நீங்களும் குந்தளமும் தம்பதிகளாகி சந்தோஷமாக இருக்கும் நன்னாளை நானும் பார்க்கத்தான் போகிறேன்.

இப்படிச் சொல்லிவிட்டு மன ஆறுதலுடன் பிரேமா அச்சாபீஸிலிருந்து வெளிப்பட்டாள். இதயத்திலிருந்து ஏதோ ஒரு பெரிய சுமையைக் கீழே இறக்கிவைத்துவிட்டதைப்போன்ற உணர்ச்சி அவளிடம் ஏற்பட்டது. அதே சமயம் அடுத்தடுத்து வெளியான பரபரப்பை உண்டுபண்ணக்கூடிய விபரங்கள் அவளுக்கு ஒரே திகைப்பாயிருந்தன. அவற்றை லீலாவுக்கும் சொல்லி கலகலவென்று பேசித் தீர்த்தாலொழிய நெஞ்சு வெடித்துவிடும்போலிருந்தது.

நேராக லீலாவின் வீட்டைநோக்கி காரை விடச் சொன்னாள். வீட்டில் விசாரித்த பொழுது லீலாவும் நடராஜனும் தன்னுடைய வீட்டுக்குத்தான் போயிருக்கிறார்களென்று கேள்விப்பட்டு அவர்களிடமும் தகப்பனாரிடமும் ஏக காலத்தில் எல்லா விபரங்களையும் சொல்லித் தீர்க்கவேண்டுமென்ற ஆவலுடன் காரில் வேகமாக வீட்டை நோக்கித் திரும்பினாள்.

வீட்டில் நுழைந்ததும் நுழையாததுமாக 'அந்தப் பயல் ரமணியைப் பார்க்கப் போயிருந்தாயாமே! அங்கு எதற்காகப் போனாய்? இன்னமும் அவன் முகத்தில் விழிக்கத்தோன்றுகிறதே உனக்கு?' என்று சிறிது கோபமாகச் சொன்னார் பாரிஸ்டர் இளையதம்பி.

பிரேமாவிடம் இளையதம்பி இப்படி ஒரு நாளும் பேசியதில்லையாதலால் அவருடைய தொனியைக்கேட்டு நடராஜனும் லீலாவும்கூடச் சிறிது கவலைப்பட்டார்கள். ஆனால் பிரேமாவின் முகத்தில் கவலையோ வருத்தமோ சிறிதும் இல்லாதது அவர்களுக்கு ஆச்சரியமாயிருந்தது! கொஞ்சமும் பதட்டமில்லாமல் நிதானமாக ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு 'அப்பா! நீங்கள் நினைப்பதைப்போல ரமணி அவ்வளவு கெட்ட மனிதரல்லை. அனாவசியமாக ஒருவரை இவ்வளவு கேவலப்படுத்திப் பேசாதீர்கள். உண்மை தெரிந்தால்

பிறகு நீங்களே ரமணியை இப்படி அவமதித்ததற்கு வருத் தப்படுவீர்கள்' என்றாள் பிரேமா.

இளையதம்பி:- இன்னும் என்ன உண்மை தெரிய வேண்டுமென்கிறாய்? நீ ஒரு வெள்ளை மனது படைத்தவள். யாரையும் சுலபமாக நம்பி ஏமாந்துவிடுகிறாய்.

பிரேமா:- இல்லை அப்பா! ரமணியின் வாழ்க்கையில் ஏதோ ஒரு பெரிய மர்மம் புதைந்துகிடப்பதாக அடிக்கடி உங்களிடம் நான் சொல்லியிருப்பது ஞாபகமிருக்கும். அவை இப்பொழுது வெளியாகும் காலம் வந்துவிட்டது. இதன் பலனாக அநேகமாக அவருக்குக் கல்யாணமும் நடக் கலாம் அப்பா!

'கல்யாணமா? ரமணிக்கா கல்யாணம்?' என்று லீலாவும் நடராஜனும் ஏககாலத்தில் ஆச்சரியத்தோடு கேட்டார்கள்.

'ஆமாம்! அது ஒன்றுதான் பாக்கி! இன்னும் ஏதாவது ஒரு புதிய கரடியை அவிழ்த்துவிட்டிருப்பான். அதைக் கேட்டுக்கொண்டுவந்து உளறுகிறாள்!' என்று அலட்சிய மாகச் சொன்னார் இளையதம்பி.

இதன்பின் ரமணியுடன் தான் பேசிக்கொண்டிருந்த விபரங்களையெல்லாம் பிரேமா ஆதியோடந்தமாக எடுத்துச் சொன்னாள். இந்த விபரங்களைக்கேட்டதும் லீலாவும் நடராஜனும் திகைத்துப்போய்விட்டார்கள். பாரிஸ்டர் இளையதம்பிக்குக்கூட சிறிது நம்பிக்கையேற்படுவதைப்போ லிருந்தது. ரமணி எப்படிப்போனாலும் புத்தகத்தை 'அவன் காப்பியடிக்கவில்லையென்பதை சுலபமாக ருசுப்படுத்த முடியு மென்றும் அதற்குப் பல பிரபலஸ்தர்களின் சாட்சியங்கள் இருக்கின்றனவென்றும் ரமணி சொல்லியதாக பிரேமா தெரிவித்தது இளையதம்பியின் கோபத்தையெல்லாம் ஒழித் துக்கட்டிவிட்டது. ரமணியின்மீது கொண்டிருந்த அவ் வளவு ஆத்திரமும் இப்பொழுது சாந்தாவின்மீதுதிரும்பியது. 'ரமணி சொல்லியதுமட்டும் உண்மையாயிருந்தால் எவ்வளவு ஆயிரம் செல்வானாலும் அந்த சாந்தாவை நான் இலேசில்

விடுகிறேனா பார்! பதிலுக்கு அவள்பேரில் கேஸ்போட்டு மானநஷ்டம் வசூலிக்காவிட்டால் நான் பாரிஸ்டர் இளைய தம்பியில்லை!' என்று வர்மம் பேசினார் அவர்.

பிரேமா:- வழக்குக்கும் எதிர் வழக்குக்கும் இடமே யிருக்காது அப்பா. ஏன் இவ்வளவு பயப்படுகிறீர்கள்?

இளையதம்பி:- என்னவோ பார்க்கலாம். இன்னும் நான்கு தினங்கள்தானே இருக்கிறது சாந்தா கொழும்புக்கு வர! அதன்பின் எல்லாம் வெட்டவெளிச்சமாகிவிடுகிறது.

இரண்டு தினங்களுக்குப்பின் இலங்கைப்பத்திரிகைகளெல் லாம்தமிழ்நாட்டின் தனிப்பெரும் இலக்கியமேதையானசாந்தா இலங்கைக்கு விஜயம்செய்வதாயும் கமலாலயத்தின் புதிய கட் டிடமொன்றைத் திறந்துவைப்பதற்காகவே அவள் இலங் கைக்கு வருகிறாளென்றும் ஒரு செய்தியைப் பிரபல்யமாகப் பிரசுரித்திருந்தன. நஷ்டஈடு வழக்கைப்பற்றி பத்திரிகை களில் ஒரு பிரஸ்தாபத்தையும் காணோம். கமலாலயத்தினர் ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டியிருப்பது உண்மைதானென் றாலும் அதை சாந்தா திறந்துவைக்கப்போகிறாளென்பது பத்திரிகைச் செய்தியைப் பார்த்தபிறகுதான் பிரேமாவின் குடும்பத்துக்கும் லீலாவின் குடும்பத்துக்கும் தெரியலா யிற்று. அதுவரை நஷ்டஈடு வழக்கு ஒன்றை மட்டும் உத் தேசித்தே சாந்தா இலங்கைக்கு வருவதாக அவர்கள் நினைத் துக்கொண்டிருந்தார்கள்.

சென்னை கமலாலயம் நேரடியாகவே இலங்கைப் பத்திரி கைகளுக்கு சாந்தாவைப்பற்றிய பல ரசமான விபரங்களை அனுப்பிவைத்திருந்தது. அவளுடைய இலக்கிய சேவை யையும் அவள் நாவல்களின் கற்பனைத் திறனையும் சொல்நயத் தையும் பாராட்டி பல பத்திகள் பத்திரிகைகளிலே பிரசுரிக் கப்பட்டிருந்தன. ஆனால் ஒன்றிலாவது சாந்தாவின் புகைப் படம் பிரசுரிக்கப்படக் காணோம். இதன் காரணத்தை ஒரு பத்திரிகை மட்டும் குறிப்பிட்டிருந்தது.

"சாந்தா எவ்வளவோ பிரசித்திபெற்ற ஆசிரியையா யிருந்தும் அவரை நேரில் பார்த்தவர்கள் கமலாலய பிரசுர

கர்த்தா ஒருவரைத் தவிர வேறு ஒருவருமில்லையென்றால் எல்லோரும் ஆச்சரியப்படுவார்கள். இவ்வளவு கீர்த்தி வாய்ந்த ஒரு ஆசிரியை ஒருவர் கண்ணிலும்படாமல், தான் யாரென்பதையும் காட்டிக்கொள்ளாமல் சமூகத்திலிருந்து அடியோடு ஒதுங்கி அடையாளம் தெரியாமல் வாழ்க்கை நடத்துவதென்பது அதிசயத்திலும் அதிசயமானது. இதை யாரும் சுலபமாக நம்பமுடியாத அதிசயமென்று வர்ணித்தாலும் மிகையாகாது இந்த சாந்தாவுக்கு புகைப்படம் கிடையாதாம். அவர் இதுவரை தம்மைப் புகைப்படம் எடுத்துக் கொண்டதேயில்லையாம். 'நான்தான் அந்த ஆசிரியை சாந்தா' என்று சொல்லிக்கொண்டு பகிரங்கமாக அவர் வெளியில் வருவது இதுதான் முதன் முறையென்றும் இவ்விதம் பகிரங்கமாகத் தம்மை வெளிப்படுத்திக்கொண்டு அவர் இலங்கை வருவது தெரிந்தால் அவர் யாரென்பதை நேரில் பார்த்துத் தெரிந்துகொள்ள அவரது பல்லாயிரக்கணக்கான அபிமானிகளும் இலங்கைக்குப் புறப்பட்டுவருவார்களென்று அஞ்சி சாந்தா இலங்கைக்குப் புறப்படுவது பரம ரகசியமாக வைக்கப்பட்டுள்ளதென்றும் இந்த விஜயத்தைப்பற்றி இந்தியப் பத்திரிகைகளில் ஒரு வரிதானும் பிரசுரிக்கப்படவில்லையென்றும் கமலாலயத்தார் அறிவிக்கின்றனர்.''

இவ்வாறு ஒரே ஒரு பத்திரிகைமட்டும் பிரசுரித்திருந்தது.

இந்தப் பத்திரிகைச் செய்திகளை லீலாவும் பிரேமாவும் எவ்வளவு ஆவலோடு வாசித்தார்களோ அதே போன்ற ஆவலுடன் ரமணியும் திரும்பத்திரும்பப் பலமுறை படித்தானென்பதைச் சொல்லத்தேவையில்லை.

# 17. ஆசிரியை சாந்தா

மறுநாள் காலை பிரபல கதாசிரியை சாந்தா கொழும்பு கோட்டை ஸ்டேஷனில் வந்திறங்கினாள்.

அன்று விடியற்காலையே பிரேமா படுக்கையைவிட்டு எழுந்துவிட்டாள். சாந்தாவைப்பற்றி பத்திரிகைகள் வானளாவிப் புகழ்ந்திருந்ததை வாசித்ததுமுதல் சாந்தாவை நேரில் பார்க்கவேண்டுமென்ற ஆவல் அவளுக்கும் லீலாவுக்கும் துடித்துக்கொண்டிருந்தது. முதல்நாள் இரவு இருவருமே சரியாகத் தூங்கவில்லை. எப்பொழுது பொழுது விடியப்போகிறதென்று அவர்கள் காத்திருந்தார்கள்.

அன்று ரயில்வே ஸ்டேஷனில் ஏராளமான ஜனங்கள் திரண்டு நின்றனர். பல்வேறு சங்கங்களையும் சேர்ந்த தலைவர்களும் நிர்வாக உத்தியோகஸ்தர்களும் மலர்மாலைகள் சகிதம் கோட்டை பிளாட்பாரத்தில் நின்ற காட்சி தூரத்திலிருந்து பார்ப்பவர்களுக்கு புஷ்பங்களினால் பிளாட்பாரத்தை அலங்கரித்துவைத்திருப்பதுபோலத் தோன்றியது. இலங்கையின் சரித்திரத்தில் ஞாபகத்துக்கு எட்டியமட்டில் ஒரு எழுத்தாளரை வரவேற்க இவ்வளவு ஜனத்திரள் வேறு எப்பொழுதுமே கூடியிருந்ததில்லை. இந்தக் கூட்டம் போலிசாருக்கும் சரியான வேலையைக் கொடுத்ததெனலாம். ஒரு தமிழ்க் கதாசிரியைக்கு ஜனங்கள் இவ்வளவு உற்சாகமான வரவேற்பளிப்பார்களென்று போலிசார் எதிர்பார்க்கவில்லை! திடீரென்று விடியற்காலை ஜனங்கள் சாரி சாரியாக கோட்டை ஸ்டேஷனுக்குத் திரண்டுபோவதைக் கண்டபிறகுதான் போலிஸ் இலாகா தலைவர் விழித்துக்கொண்டார். அவர் மட்டுமென்ன? இலங்கையிலுள்ள ஆங்கில சிங்களப் பத்திரிகைகளும் சாந்தாவின் விஜயத்தை முதலில் அலட்சியம்செய்தன. தமிழ் ஆசிரியை என்பதற்காக தமிழ்ப் பத்திரிகைகள் சாந்தாவின் விஜயத்தைப் பிரமாதப்படுத்துவதாக அவை முதலில் நினைத்தன. ஆனால் அந்த ஆசிரியையிடம் மகா

ஜனங்கள் வைத்திருந்த அபிமானத்தைக் கண்டதும் செய்தி திரட்ட "நான் முந்தி நீ முந்தி" என்று போட்டியிட்டுக் கொண்டு ஆங்கில சிங்களப் பத்திரிகைகளின் நிருபர்களும் கோட்டை ஸ்டேஷனில் வட்டமிட ஆரம்பித்தனர்.

விருந்தினர்களை வரவேற்று உபசரிப்பதில் தனக்கு நிகர் இல்லையென்று பெயரெடுத்தது இலங்கை. அதிலும் பொது ஜனங்களின் பேரபிமானத்தைப்பெற்ற ஒருவர் வருவதென்றால் கேட்கவேண்டுமா? ரயில்வே அதிகாரிகளும் போலிசாரும் சாந்தாவின் வண்டி வந்தவுடன் வசதியாக சாந்தா கீழே இறங்கி நண்பர்களுடன் உரையாட சிறந்த முறையில் ஏற்பாடுகள் செய்திருந்தனர். கமலாலயத்தினர் தெரிவித்ததற்கிணங்க புகைப்படமெடுக்கக்கூடாதென்று பத்திரிகைக்காரர்களுக்கு போலிசார் தெரிவித்தது அவர்களுக்குப் பெரிய ஏமாற்றமாயிருந்தது. லீலாவும் பிரேமாவும் வெகு நேரத்துக்குமுன்பே ஸ்டேஷனுக்கு வந்துவிட்டபடியினால் அவர்களுக்கு பிளாட்பாரத்தில் வசதியான இடம் கிடைத்தது.

சரியாக 7-30 மணிக்கு இந்தியா கோச்சு கோட்டை ஸ்டேஷனில் வந்து நின்றதும் ஸ்டேஷனில் காத்திருந்த ஜனக் கூட்டத்தைப் பார்த்து ரயிலில் பிரயாணம்செய்து வந்தவர்கள் திகைத்துப்போய்விட்டார்கள். ஏனெனில் இவ்வளவு ஆடம்பரமாக வரவேற்கப்படக்கூடிய ஒருவர் தங்களுடன் ரயில்வண்டியில் சகாப் பிரயாணியாக வருகிறாரென்பது அவர்களுக்கு அந்த நிமிடம்வரையில் தெரியாது. மண்டபத்திலும் தலைமன்னாரிலும் ஏறியிறங்கியபொழுது கூட அசாதாரணமான மதிப்பிற்குரிய எவரையும் பிரயாணிகள் கவனிக்கவில்லை. ஆகையால் மலர்மாலைகள் சகிதம் பல்லாயிரக்கணக்கானவர்கள் பிளாட்பாரத்தில் நிற்பதைக் கண்டு திகைத்துப்போனதில் ஆச்சரியமொன்றுமில்லையல்லவா?

வண்டி ஸ்டேஷனில் நின்ற சில வினாடிகளுக்கெல்லாம் சென்னை கமலாலயத்தின் முதலாளி கேசவனும் அவன் மனைவி வஸுமதியும் முதலில் இறங்கினார்கள். வஸுமதி

யைக் கண்டதும் அவள்தான் சாந்தாவாயிருக்கவேண்டு மென்று நினைத்து 'ஆசிரியை சாந்தாவுக்கு ஜே!' என்ற கோஷம் காது செவிடுபடும்படியாகக்கிளம்பியது. பலர் அவசரம் அவசரமாக கொண்டுவந்திருந்த மாலைகளை வஸுமதிக்குப் போட நெருங்கினார்கள். தக்க தருணத்தில் கேசவன் குறுக்கிட்டு 'இவள் சாந்தா இல்லை! கொஞ்சம் பொறுங்கள்! அதோ இறங்குகிறாள் கதாசிரியை சாந்தா!' என்றார்.

சுமார் 22 வயதுவரை மதிப்பிடக்கூடிய ஒரு யுவதி வண்டியிலிருந்து இறங்கினாள். அவள் முகத்தை மற்றவர்கள் பார்த்துப் பரிச்சயம் செய்துகொள்ளுவதற்குள் அந்த முகத்தை மறைக்கும்படி மளமளவென்று பூமாலைகள் அவள் தோட்கள்மீது குவிந்தன. சில நிமிடநேரம் அங்கு தாமதித்தாலும் கூட்டத்தைச் சமாளிக்கமுடியாதுபோன்ற நிலைமை யேற்பட்டுவிட்டது. போலிசாரின் உதவியுடன் சாந்தாவும் அவளுடன் வந்தவர்களும் மெதுவாக ஸ்டேஷனுக்கு வெளியில் வந்தனர்.

பொதுஜனங்கள் காட்டிய பேராபிமானம் சாந்தாவின் மனதை உருக்கிவிட்டது. அவள் கண்களிலிருந்து ஓரிரண்டு துளி ஆனந்த பாஷ்பம் சொரிந்ததை அருகில் இருந்தவர்கள்மட்டுமே கவனித்திருக்கமுடியும். ஜே! ஜே" என்று ஜனங்கள் இடைவிடாமல் கோஷித்தனர். அவர்களுடைய ஆவலைப் பூர்த்திசெய்விக்காமற்போவது சாந்தாவுக்கு ஏதோ ஒரு பெரிய குற்றம் செய்வதைப்போலிருந்தது. சரேலென்று அவள் காரின் மிதிபலகைமீது ஏறி நின்றுகொண்டாள். எல்லோருக்கும் தன்னை நன்கு தெரியும்படி சிலநிமிட நேரம் கரம்குவித்துக்கொண்டு நின்று தனது வணக்கத்தைத் தெரிவித்துவிட்டு அவள் காரில் ஏறிக்கொண்டாள். கார் கமலாலயத்தை நோக்கிப் புறப்பட்டது.

பிரேமாவும் லீலாவும் வீடுதிரும்புகையில் வழியில் அச்சாபீஸிலே நுழைந்தார்கள். ரமணி வழக்கம்போலத் தனது அறையில் உட்கார்ந்திருந்தான். ஒருவேலையிலும் மனம் செல்லாமல் ஜன்னல் கம்பிகளைத் திரும்பித்திரும்பி எண்ணிக்

கொண்டு உட்கார்ந்திருந்த அவனைக் கண்டதும் 'நீங்கள் ஸ்டேஷனுக்கு வரவில்லையே! அடா அடா அடா! என்ன கூட்டம்! எவ்வளவு உற்சாகமான வரவேற்பு! எத்தனை பூமாலைகள்! எவ்வளவு பலமான ஜே கோஷம்! ஒரு கதாசிரியைக்கு மகாஜனங்கள் இவ்வளவு பிரமாதமான வரவேற்பு அளித்ததாகக் கதைகளில்கூட நாம் படித்ததில்லை!' என்றாள் பிரேமா.

'அப்படியா!' என்று பட்டுக்கொள்ளாமல் பதில் சொன்னான் ரமணி.

சாந்தாவின்மூலம் குந்தளத்தைப்பற்றி தனக்குக் கிடைக்கக்கூடிய தகவல்களைப்பற்றியே அவன் மனம் சிந்தனையிட்டுக்கொண்டிருந்தது.

'ஏன், என்ன யோசனைசெய்துகொண்டிருக்கிறீர்கள்? என்று லீலா குறுக்கிட்டுக் கேட்டாள்.

பிரேமா:- குந்தளத்தைப்பற்றி சாந்தா என்ன சேதி கொண்டுவந்திருப்பாளோ என்று யோசித்துக்கொண்டிருப்பார்! இயற்கைதானே.'

லீலா:- கடவுள் அருளினால் நல்லசேதியாகக் கொண்டு வந்திருக்கவேண்டும். சாந்தாவின் முகத்தைப் பார்த்தாலே தெய்வாம்சமும் அருளும் சொட்டுகிறது. கடைந்தெடுத்த தந்தப் பதுமைமாதிரி இருக்கிறாள். அவள் வாயிலிருந்து வரும் செய்தி நல்ல செய்தியாயில்லாமல் வேறுவிதமாக எப்படி இருக்கமுடியும்?

பிரேமா:- அவ்வளவு பேரும் புகழும் கியாதி இருந்தும்கூட அவளுடைய உடையின் எளிமையைப் பார்த்தாயா? பெயருக்கு ஒரு மெல்லிய தங்கச்சங்கிலிகூட கழுத்திலில்லை. காதில் ஒரு தோடோ அல்லது கையில் இரண்டு வளையல்களோதான் உண்டா? செயற்கையழகு சிறிதுமின்றி சர்வசாதாரண உடையிலேயே சோபிக்கும் சாந்தா அழகு படுத்திக்கொண்டுவிட்டால் அப்ஸரஸ்ஸும் ரம்பையும் திலோத்தமையும் அவளுக்குப் பணிப்பெண்களாகவேண்டியதுதான்.

லீலா:- பெரிய மனிதர்களென்ருல் பணம்மட்டும் இருந் தால் போதுமா? அத்துடன் குணமும் வேண்டாமா? உல கம் சாந்தாவைப் புகழுவது வீணுக்கல்ல.

பிரேமா:- நாங்கள் பேசிக்கொண்டேபோகிருேம். நீங் கள் சும்மா இருக்கிறீர்களே மிஸ்டர் ரமணி!

ரமணி:- இதில் நான் சொல்ல என்ன இருக்கிறது?

பிரேமா:- சாந்தாவை எப்பொழுது பார்ப்பதாக உத் தேசம்?

ரமணி:- நீங்கள் வர்ணிக்கும் வர்ணனைகளைப்பார்த்தால் அவளை அவ்வளவு சுலபமாகச் சந்திக்கமுடியும்போலத் தெரி யவில்லையே.

பிரேமா:- உங்களுக்கு கமலாலயத்தின் முதலாளி மிஸ் டர் கேசவனைத் தெரியுமென்று சொன்னீர்களல்லவா? அவ ரும் வந்திருக்கிருர் சாந்தாவுடன்.

ரமணி:- அப்படியா? மிஸ்டர் கேசவனும் வந்திருக்கி ருரா? அப்படியானுல் இப்பொழுதே டெலிபோனில் பேசிப் பார்க்கிறேன்.

இவ்விதம் சொல்லிவிட்டு ரமணி டெலிபோனை எடுத்து கமலாலயத்தை அழைத்தான். கமலாலய மானேஜர் முத லில் பேசினுர். கேசவன் வேண்டுமென்று ரமணி கேட்கவே கேசவன் 'யாரது?' என்று டெலிபோனில் விசாரித்தார்.

ரமணி:- நான்தான் ரமணி பேசுகிறேன். அங்கு பேசு வது கமலாலய முதலாளி மிஸ்டர் கேசவன்தானே.

கேசவன்:- ஆமாம். வணக்கம். தங்களை நேரில் பார்த் ததில்லாவிட்டாலும் கேள்விப்பட்டிருக்கிறேன். உங்களு டைய எழுத்து வல்லமையைப் பாராட்டும் பல ஆயிரம் பேர்களில் நானும் ஒருவன்.

ரமணி:- நீங்கள் கேலிசெய்கிறீர்களென்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் இப்பொழுது உங்களுடன் வாதிப் பதற்காக நான் அழைக்கவில்லை.

கேசவன்:- கேலிசெய்வதாக ஏன் நினைக்கவேண்டும்?

ரமணி:- தாங்கள் வெளியிட்ட வனஜாவை நான் காப்பி யடித்ததாகக் குற்றஞ்சாட்டிவிட்டு அதே வாயினுல் வேறு விதமாகப் பேசுவதென்ருல் அது கேலி இல்லாமல் வேறு என்னவாம்?

கேசவன்:- சொந்தமுறையில் உங்கள் எழுத்தைப் பாராட்டுகிறேன். ஆனுல் தொழில்முறையென்பது வேறு.

ரமணி:- அது இருக்கட்டும். உங்களுக்கு சுந்தரம் என்று ஒருவரைத் தெரியுமா?

கேசவன்:- எந்தச் சுந்தரத்தைச் சொல்லுகிறீர்கள்?

ரமணி:- திருச்சி பாஸ்கரய்யரின் மருமகன் சுந்தரம்; சென்னையில் படித்துக்கொண்டிருந்தபொழுது அடிக்கடி உங்களை வந்துபார்த்து உங்கள்மூலம் பல புத்தகங்களையும் போட்டிருக்கிருனே அந்தச் சுந்தரத்தை.

கேசவன்:- நன்ருகத் தெரியும். அவனுக்கென்ன மகா மேதாவி; எழுத்தில் சூரப்புலி. அவன் எழுதிய புத்தகங்களை இன்றைக்கும் எடுத்துவைத்துக்கொண்டு வாசிக்க உட்கார்ந்தால் பசி தாகம்கூடத் தெரியாது.

ரமணி:- சுந்தரத்தைப்பற்றி உங்களுடைய புகழ்ச்சியைக் கேட்பதற்காக அவனைத் தெரியுமா என்று விசாரிக்கவில்லை. ஒருசமயம் அவன் குந்தளப்பிரேமா என்று ஒருகதையைப் பிரசுரிப்பதற்காக உங்களிடம் கொண்டுவந்து காட்டவில்லையா?

கேசவன்: ஆமாம், ஞாபகமிருக்கிறது. ஆனுல் அதை நான் படிக்கவில்லை. படிப்பதற்கு அவன் அதைக் கொடுக்க மறுத்துவிட்டான். ஏன் உங்களுக்குத்தெரியுமா அவனை?

ரமணி:- நன்ருகத்தெரியும். அவன் கொடுத்த குந்தளப் பிரேமாதான் இப்பொழுது நாங்கள் பிரசுரிக்கும் குந்தளப் பிரேமா. அதையே நாங்கள் வனஜாவைப்பார்த்து காப்பி யடிப்பதாக அநியாயமாக நீங்கள் குற்றஞ்சாட்டுகிறீர்கள்.

கேசவன்:- மிஸ்டர் ரமணி! இதெல்லாம் தாங்கள் என்னிடம் சொல்லிப் பயனில்லை. இதைப்பற்றி நீங்களும் சாந்தாவும் நேரில்பேசி முடிவுசெய்துகொள்ளவேண்டிய விஷயம். முடிவுசெய்துகொள்ள முடியாமற்போனால் கோர்ட்டில் பேசித் தீர்த்துக்கொள்ளவேண்டிய விஷயம். இதில் எனக்கு சம்பந்தமில்லை?

ரமணி:- ரொம்ப நல்லது. சாந்தாவை நான் எப்பொழுது பார்க்கலாமென்பதையாவது சொல்ல முடியுமா?

கேசவன்:- எப்பொழுதா? இப்பொழுதே, இந்த நிமிடமே நீங்கள் விரும்பினால் பார்க்கலாம். தங்களைச் சந்திக்க சாந்தா ஆவலுடனிருக்கிறாள். இல்லையில்லை, கொஞ்சம் பொறுங்கள் கேட்டுச்சொல்லுகிறேன்.

சிறிது நேரம் கழித்து "மாலை 4 மணிக்கு நல்ல வேளையாம். 4 மணிக்கு வருகிறீர்களா?' என்று கேட்டார் கேசவன்.

ரமணி:- சாந்தாவைச் சந்திப்பதற்குக்கூட நல்லநேரம் கெட்டநேரம் என்று பார்க்கவேண்டுமா?

கேசவன்:- முதல் சந்திப்பு. அதிலும் வழக்குவிஷயமாகப் பேசப்போகிறீர்கள், அதனால்தான் நல்ல நேரத்தில் பேச்சை ஆரம்பிக்கலாமென்று சாந்தா அபிப்பிராயப்படுகிறாள்.

சரியென்று ரமணியும் ஒப்புக்கொண்டான்.

அன்றுமாலை நாலுமணிக்கு சாந்தாவைச்சந்திக்க வருவதாகச் சொல்லி டெலிபோனை ரமணி கீழே வைத்தவுடன் "உங்களுடன் நாங்களும் வரலாமா? எங்களுக்கும் சாந்தாவை நேரில் பார்க்கவேண்டும்போலிருக்கிறது. இன்று காலை பல ஆயிரம் ஜனங்களோடு ஒருவராக நின்று பார்த்தோம். அருகில் இருந்து ஓரிரண்டு வார்த்தை பேசிப்பார்க்க ஆசைப்படுகிறோம்' என்றாள் பிரேமா.

'கட்டாயமாக நீங்கள் இருவரும் வரத்தான்வேண்டும். நானே அழைக்கவேண்டுமென்று நினைத்திருந்தேன். அதற்குள் நீங்களே சொல்லிவிட்டீர்கள்!' என்றான் ரமணி.

'சாந்தாவைச் சந்திக்கும்பொழுது பல விஷயங்களைப் பற்றியும் பேச்சு ஏற்படலாம். ஏன் உங்களுடைய குந்தளத்தைப்பற்றியும் நீங்கள் எதிர்பார்ப்பதைப்போல சாந்தா பல விஷயங்களைச் சொல்லக்கூடும். அப்பொழுது நாங்களும் பக்கத்திலிருப்பது உங்களுக்கு விருப்பமில்லையென்றால் நாங்கள் சாந்தாவைப் பார்த்தவுடன் திரும்பிவிடுகிறோம். நீங்கள் பேசிவிட்டுப் பிறகு வாருங்கள்!' என்றாள் பிரேமா.

'இனி உங்களுக்குத் தெரியக்கூடாதது ஒன்றுமில்லை. தாராளமாக நீங்களும் பக்கத்திலேயே இருக்கலாம். சரியாக மூன்றேமுக்கால் மணிக்கு இங்கிருந்து புறப்பட்டால் சரியாயிருக்கும்!' என்றான் ரமணி.

லீலாவும் பிரேமாவும் போனபிறகு ரமணி தனிமையில் உட்கார்ந்து சிந்திக்கலானான். சாந்தாவிடமிருந்து குந்தளத்தைப்பற்றி என்னென்ன தகவல்கள் கிடைக்கும்? குந்தளத்தின் மனநிலைமையை சாந்தாமூலமாக அறியமுடியுமா? தன் தாயார் என்ன ஆனாள்? கடுமையான காசநோய்வாய்ப்பட்டிருந்த அவளுக்கு பயங்கரமாக ஏதாவது ஏற்பட்டிருக்குமோ? பாஸ்கர ஐயருக்கு மனமாறுதல் ஏற்பட்டிருப்பது சாத்தியமா? இப்படியெல்லாம் அவன் மனம் ஓய்வின்றி சிந்தனையிட்டுக்கொண்டிருந்தது. அவனையறியாமலே அன்று பொழுதுவிடிந்ததுமுதல் ஒரு தனி உற்சாகமும் குதூகலமும் அவனிடம் குடிகொண்டிருந்தது. காலையிலிருந்தே வலதுகண்ணும் துடித்துக்கொண்டிருந்தது. வலதுகண் துடித்தால் நல்ல சகுனமென்பார்களே, ஆகையால் குந்தளத்தைப்பற்றி நிச்சயம் நல்ல செய்திதான் கிடைக்கவேண்டும் என்று ரமணி தனக்குள்ளேயே தீர்மானித்துக்கொண்டான்.

லீலாவும் பிரேமாவும் சரியாக மூன்றேமுக்கால் மணிக்கு வந்துசேர்ந்தார்கள். அதே காரில் ரமணியும் ஏறிக்கொண்டான். எல்லோரும் கமலாலயத்தை நோக்கிச் சென்றனர்.

கமலாலயத்தின் வாசலில் இவர்களை எதிர்பார்த்ததைப் போல் மானேஜர் நின்றுகொண்டிருந்தார். ரமணி, பிரேமா, லீலா ஆகிய மூவரையும் அவர் ஒரு அறையில் கொண்டு போய்விட்டார். அங்கு கேசவனும் வஸுமதியும் இருந்தனர். நெடுநாள் பழகிய நண்பர்களைப்போல கேசவன் எழுந்து வந்து ரமணியை மார்புறத்தழுவி 'இவ்வளவு காலம் கழித்தாவது நீங்கள் இருக்கும் இடத்தைக்கண்டுபிடிக்கமுடிந்ததே, அதுவே பெரிய சந்தோஷம் சுந்தரம்! உட்கார்!' என்றான்.

வஸுமதி லீலாவையும் பிரேமாவையும் உபசரித்து உட்காரச்சொன்னாள்.

ரமணி:- மிஸ்டர் கேசவன்! நீங்கள் சொல்லுவதைப் பார்த்தால் நான் இலங்கையிலிருப்பதை தெரிந்துகொண்டு தான் இங்கு வந்திருக்கிறீர்கள்போலிருக்கிறதே?

கேசவன்:- ஆட்சேபணையென்ன? உங்கள் பெயரை நீங்கள் மாற்றிவைத்துக்கொண்டுவிட்டால் உலகத்தையே ஏமாற்றிவிடலாமென்று நினைத்துக்கொண்டுவிட்டீர்கள். ஆனால், போட்டோப் படமெடுக்கும் காமிராவை ஏமாற்றமுடியுமா? இதோ பாருங்கள் உங்கள் படம். சரிதானே?

கேசவன் இரண்டு புகைப்படங்களை ரமணியிடம்கொடுத்தான். 'என் படமல்லவா? இவை உங்களுக்கு எப்படிக் கிடைத்தன?' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் ரமணி. உங்கள் பத்திரிகையில் உங்களுடைய படத்தைப் பிரசுரித்தால் யாருக்காவது உருவம் தெரிந்துவிடப்போகிறதே யென்று பயந்து நீங்கள் பிரசுரிக்காவிட்டாலும் எப்படியோ எனக்குக் கிடைத்துவிட்டது பாருங்களேன். உங்கள் படத்தைத் தருவித்து மிஸ்டர் ரமணியென்ற பெயருக்குள் யார் புகுந்துகொண்டு கபடநாடகம் நடிக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டுதான் நான் கொழும்புக்கு வந்திருக்கிறேன். நான்மட்டும் வரவில்லை. கொஞ்சம் பொறுங்கள். உங்களுக்குப் பரிச்சயமான இன்னொருவரையும் அழைத்துவருகிறேன்' என்று சொல்லிவிட்டு கேசவன் எழுந்துபோனான்.

சில விநாடிகளுக்கெல்லாம் பாஸ்கரய்யர் திறந்த கரங்களுடன் அறைக்குள் ஓடிவந்து 'அப்பா சுந்தரம்! உன்னைத் தேடிப்பிடிக்க எவ்வளவு கஷ்டமாகிவிட்டதடா? சின்னஞ்சிறு வயதில் இப்படியா வீட்டையும், ஊரையும், வயது போன தாயாரையும் தவிக்கவிட்டுக் கப்பலேறிப்போவது? என்று கண்ணீர் வடிய சுந்தரத்தைத் தழுவிக்கொண்டார்.

சுந்தரத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. அவனுக்கு எல்லாம் கண்ணைக்கட்டிக் காட்டில் விட்டமாதிரியிருந்தது. மாமா பாஸ்கரய்யரை எதிர்பாராமல் திடீரென்று சந்திக்க நேரிட்டதின் அதிர்ச்சியிலிருந்து தெளிவடைய அவனுக்கு சில நிமிடங்கள் பிடித்தன. அவன் சாஷ்டாங்கமாக அய்யரை நமஸ்கரித்து 'என்னை மன்னிக்க வேண்டும் மாமா!' என்றான்.

அய்யர் அவனை எழுப்பி, 'உன் தாய் உன்னைப் பார்க்க எவ்வளவு துடித்துக்கொண்டிருக்கிறாள் தெரியுமா? ஒரு இரவு அவள் நல்ல தூக்கம் தூங்கியிருப்பாளா? பகலும் இரவும் ஓயாது இருமிக்கொண்டே கண்விழித்திருக்கும் அவளுடைய நெஞ்சை உன்னுடைய பிரிவு சிறிது சிறிதாக அறுத்துக்கொண்டிருக்கிறது. உன் முகத்தைப் பார்த்து விட்டுத்தான் நிம்மதியாகப் பிராணனைவிட வேண்டுமென்று அவளுடைய உயிரும் ஊசலாடிக்கொண்டிருக்கிறது' என்றார் அய்யர்.

சுந்தரம்:— அம்மாவுக்குத்தான் ஏதாவது ஏற்பட்டிருக்குமோ என்று பயந்துகொண்டிருந்தேன். நல்லவேளையாக கடவுள் கிருபை இன்னும் கொஞ்சம் இருக்கிறதுபோலிருக்கிறது.

கேசவன்:— தாயாரிடம் கரிசனை காட்டும் பிள்ளையின் அழகைப்பாருங்கள். இரண்டு வருஷமாக தலை தெரியாமல் தீவாந்திரத்தில் போய் உட்கார்ந்து கொண்டிருந்து விட்டு இப்பொழுது தாயார்க்கு அனுதாபப்படுகிறான்!

அய்யர்:— அவனைக் குறைசொல்லிப் பிரயோசனமில்லை மாப்பிள்ளை!

மாப்பிள்ளை என்று கேசவனை அய்யர் அழைத்தது சுந்தரத்துக்கு சுருக்கென்று முள் தைத்தமாதிரியிருந்தது. மாப்பிள்ளை யென்று அழைப்பதின் அர்த்தமென்ன? குந்தளத்தின் கணவர்தானே அய்யருக்கு மாப்பிள்ளையாக முடியும்? ஏற்கனவே கேசவனுக்குக் கல்யாணமாகிவிட்டது. அவருடைய மனைவி வஸுமதியும் இதோ இருக்கிருள். அப்படியிருக்க கேசவன் அய்யருக்கு எப்படி மாப்பிள்ளையாக முடியும்? ஒரு சமயம் வஸுமதி இருக்கும் பொழுதே அவளுடைய சம்மதத்துடன் குந்தளத்தையும் கேசவன் மணந்து கொண்டிருப்பாரோ? சிலபணக்காரர்கள் இளம் மனைவி இருக்கும்பொழுதே பிள்ளையில்லையென்று நொண்டிச்சாக்குச்சொல்லிக்கொண்டு இன்னொரு கல்யாணம் செய்துகொள்ளுவதைப் பார்த்திருக்கிரும். ஏன், நம்முடைய கதைகளிலொன்றிலேயே இப்படி எழுதியிருக்கிரும். ஒருக்கால் அதுமாதிரி குந்தளத்தையும் கேசவன் மணந்து கொண்டிருப்பாரோ? அப்படித்தானிருக்கவேண்டும். இல்லாவிட்டால் கேசவனுக்கும் அய்யருக்கும் என்ன சம்பந்தம் இருக்க முடியும்? கேசவனுடன் அய்யர் கொழும்புக்குப் புறப்பட்டுவர காரணமென்ன?

இப்படிச் சிந்திக்கலாஞன் சுந்தரம். இந்தப் பயங்கர எண்ணங்கள் அவனுக்கு சொல்லமுடியாத வேதனையை உண்டு பண்ணின. கேசவனைக் குந்தளம் மணம் செய்துகொண்டிருக்கலாம் என்று நினைத்தபொழுதே அவனுடைய நெஞ்சு ஆயிரம் சுக்கல்களாக வெடித்து விடும்போலிருந்தது. அவனுடை மனப்போக்கை அய்யர் ஒருவாறு ஊகித்துக்கொண்டார். உடனே அவர் சொன்னுர்:— 'சுந்தரம், மாப்பிள்ளை யென்று கேசவனை அழைத்தவுடன் ஏன் இப்படிப் பிரமைப் பிடித்தவன் மாதிரிப் பார்க்கிருய்? உண்மையில் கேசவன் என்னுடைய மாப்பிள்ளை தானப்பா? நம் வீட்டில் குந்தளத்துக்குத் தாய்போலிருந்து வளர்த்த மகாலட்சுமி சங்கரியைத் தெரியுமில்லையா உனக்கு! அவளுடைய பெண்தான் கேசவனை மணந்திருக்கும் வஸுமதி. என் குழந்தையோடு குழந்தையாக வளர்த்த வஸுமதியின் கணவன் எனக்கு மாப்பிள்ளை முறையாகத்தானே வேண்டும்?' என்ருர்.

சுந்தரம்:— நான் உங்களைப்பற்றி மிஸ்டர் கேசவனிடம் எவ்வளவோ முறை பேசியிருக்கிறேன். அப்பொழுதெல்லாம் அவர் உங்களைத் தெரியும் போலக் காட்டிக்கொள்ளவே யில்லை. இதுதான் போகட்டுமென்றால், நான் திருச்சிக்கு வந்திருந்த பொழுது சங்கரி மாமிக்கு இப்படி ஒரு பெண் இருப்பதாகவும் என்னிடம் யாருமே சொல்லவில்லை. இதெல் லாம் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை மாமா!

கேசவன்:— எப்படிச் சொல்லுவார்கள்? நான் கேட்டுக் கொண்டேன் மாமாவை என்னைப்பற்றி உங்களிடம் ஒன் றுமே சொல்லவேண்டாமென்று. மாமாவைப்பற்றி நீங்கள் கன்னுபின்னுவென்று என்னிடம் உளறிக்கொட்டியபிறகு எனக்கும் மாமாவுக்கும் சம்பந்த மிருப்பது தெரிந்தால் உங்க ளுக்கு மன நிம்மதியிருக்குமா? அதற்காகத்தான் சொல்ல வேண்டாமென்றேன்.

சுந்தரம்:— இப்பொழுதுதான் தெரிகிறது. இவ்வளவு நாடகத்துக்கும் கபட சூத்திரதாரி நீங்கள்தானென்று!

வஸுமதி:— இத்தனை கதை பேசுகிறவர் அக்கா குந்த ளத்தைப்பற்றி ஒரு வார்த்தையாவது விசாரிக்கிறாரா பார்த் தீர்களா?

இவ்வளவு நேரமும் மௌனமாயிருந்த வஸுமதி நாசூக் காக ஒரு கேள்வி கேட்டது சுந்தரத்தை வெட்கித் தலைகுனி யச் செய்தது.

சுந்தரம்:- இல்லை! மாமா........ என்று ஏதோ நொண்டிச் சாக்குச்சொல்ல வாயெடுத்தான். 'அவள் கிடக்கிறாள், சுந்தரம்! சிறுவயதிலிருந்தே யாரையாவது கிண்டல் கேலி செய்துகொண்டிருப்பதென்றால் வஸுவிற்கு ரொம்பப்பிரி யம்! குந்தளம் சௌக்கியமாயிருக்கிறாள். உன்னை ரொம்ப விசாரித்ததாகச் சொல்லச்சொன்னாளப்பா!' என்று பாஸ்க ரய்யர் இடைமறித்துச் சொன்னார்.

சுந்தரம்:- மாமாவை எதிர்பாராமல் பார்த்த அதிசயத் தில் என்னுடன் வந்திருப்பவர்களை அறிமுகம் செய்துவைக்க

மறந்துவிட்டேனே! இதோ, இவள்தான் பிரேமா! நவலங்கா வின் சொந்தக்காரி! பாரிஸ்டர் இளையதம்பியின் பெண்! அவளுடைய சிநேகிதை லீலா மற்றவள். இலங்கைக்கு வந்ததும் என்னை சொந்தத் தகப்பனர்போல ஆதரித்தவரின் பெண். லீலாவுக்கு ஏற்கனவே கல்யாணமாகிவிட்டது. பிரேமாவுக்கு அடுத்தவாரம் கல்யாணம்!'

கேசவன்:- இந்த விவரங்களெல்லாம் முன்னரே உங்களுடைய குந்தளப்பிரேமாவை வாசித்ததிலிருந்து எங்களுக்குத் தெரியும். இலங்கைக்கு வந்த கோபாலின் இரு சினேகிதைகள் இவர்கள்தான்! அவர்களையும் சந்திக்க நேரிட்டதற்கு ரொம்பச் சந்தோஷம்.

வஸு:- நாம் பிரேமாவின் கல்யாணத்துக்கு இருந்துவிட்டுத்தான் இந்தியா திரும்பப்போகிறோம். சரிதானே?' என்று கேசவனைப் பார்த்துக் கேட்டாள்.

கேசவன்:- உங்கள் பெண்ணின் சமர்த்தைப் பார்த்தீர்களா மாமா! பிரேமாவைப் பார்த்து அரைமணியாகவில்லை, அதற்குள் எவ்வளவு சிநேகமாகிவிட்டார்கள் இருவரும்! நம், வழக்கு முடிந்து தீர்ப்புக்கூற ஒரு மாதமாவது ஆகாதா வஸு! அதுவும் இலங்கைக் கோர்ட்டுகள் எப்படியோ! வழக்குமுடிந்து நஷ்டஈடு தொகையை வசூலிக்காமல் சாந்தா கிளம்பப்போவதில்லை. அவளை இலங்கையில் தனியாக விட்டு நாமும் கிளம்ப முடியப்போவதில்லை.

சாந்தாவின் பெயரை கேசவன் குறிப்பிட்டபொழுது தான் அங்கு வந்த உண்மையான காரணம் சுந்தரத்தின் நினைவுக்கு வந்தது. அதுவரை ஏதோ ஒரு புதிய உலகத்தில் சஞ்சரிப்பதைப்போல அவன் நினைத்துப் பேசிக்கொண்டிருந்தான். பிரேமாவுக்கும் லீலாவுக்கும்கூட தாங்கள் சாந்தாவைப் பார்க்கவே அங்கு வந்திருக்கிறோமென்ற ஞாபகமில்லை. சுந்தரத்தின் வரலாறுகள் அவர்களுடைய மனதை அவ்வளவுதூரம் கவர்ந்திருந்தன.

சுந்தரம்:- இத்தனை நாடகத்துக்கும் சூத்திரதாரியான நீங்கள்தான் இவ்வழக்குக்கும் சூத்திரதாரியாயிருக்கவேண்

டும். நெஞ்சு அறியப் பொய் வழக்குத் தொடரச் சொல்வி யிருக்கிறீர்களே, இது நியாயமா மிஸ்டர் கேசவன்? சாந்தா வைக்கொண்டு வனஜா கதையை நீங்கள்தான் எழுதச்சொல் லியிருக்கவேண்டுமென்பது இப்பொழுதுதான் தெரிகிறது.

கேசவன்:- இல்லே. நீங்கள் சொல்லுவதும் நினைப்பதும் தவறு! இப்பொழுது மாமாவுடைய அனுமதியுடனேயே வழக்குத் தொடர்ந்து நஷ்டஈடுவசூலிக்க சாந்தா வந்திருக் கிருள். இதில் உங்களுக்கென்ன நஷ்டம்? நஷ்டஈடு கொடுக் கப்போவது பத்திரிகையின் முதலாளிதானே?

சுந்தரம்:- அஃது வேறு விஷயம்! சாந்தா எழுதிய வன ஜாவை இந்த வாரம்தான் படித்தேன். உங்களுடைய நஷ்ட ஈடுநோட்டீஸ் வந்தபிறகுதான் அதை வாசித்துப்பார்த்தேன். அதுவும் என்னுடைய குந்தளப் பிரேமாவும் ஒரே கதை யென்றுலும் சத்தியமாக என் கதை காப்பியடித்த கதை யில்லே.

கேசவன்:- இந்த விஷயம் எனக்குத் தெரியாது மிஸ்டர் சுந்தரம். இதில் சமரசமாகப் போவதுதான் நல்லதென்று எனக்குத் தோன்றுகிறது. ஏதோ, ரூ. 50000 இல்லாவிட் டாலும் ரூ. 25000 ஆவது கொடுக்கத் தயாராயிருந்தால் தான் ராஜிசெய்துகொள்ள சாந்தா உடன்படுவாள். எதற்கும் நீங்களே அவளுடன் நேரில் பேசிப்பாருங்கள். அதோ அந்த அறையிலிருக்கிருள் சாந்தா!........ ஏன், தயங்குகிறீர்கள், போய்ப் பேசிப்பாருங்களேன்.

சுந்தரம்:- சரி, பார்க்கிறேன். பிரேமா, லீலா, வாருங் கள்; சாந்தாவுடனேயே பேசுவோம்.

கேசவன்:- அவர்கள் எதற்கு?

சுந்தரம்:- சாந்தாவைப் பார்க்கவே அவர்கள் ஆவ லோடு வந்திருக்கிருர்கள்.

கேசவன்:- சாந்தா எங்கே ஓடிப்போகிறுள். இங்குதானே இருக்கப்போகிருள்? அவர்கள் பிறகு பார்க்கட்டும். முதலில் நீங்கள் வழக்கு விஷயத்தைப் பேசி முடித்துக்கொள்ளுங்கள். அதைப் பற்றிப் பேசும்பொழுது மற்றவர்கள் பக்கத்திலிருப்பது அவ்வளவு உசிதமில்லை. அதை சாந்தா விரும்பவும்மாட்டாள்.

சரியென்று சொல்லி சுந்தரம் மட்டும் எழுந்து அடுத்த அறைக்குள் நுழைந்தான். அங்கு பார்த்த காட்சி அவனை அப்படியே கல்லாகச் சமைந்துபோகச் செய்தது.

## 18. உடைந்த உள்ளங்கள் ஒன்று சேர்ந்தன

அறையில் நுழைந்த சுந்தரம் அங்கு சாந்தாவுக்குப் பதில் குந்தளம் நிற்பதைக்கண்டு திகைத்துப்போய்விட்டான். சில நிமிடநேரம் அவனுக்கு தலே கிறுகிறுவென்று சுற்றுவதைப்போலிருந்தது. அடுத்தடுத்து ஏற்பட்ட அதிர்ச்சிகள் அவனுடைய நாவை அடைத்துவிட்டன. கண்களை ஒருமுறை கசக்கிக்கொண்டு பார்த்தான். தூய வெண்ணிறப் பட்டாடை உடுத்து அதே குந்தளம்தான் அங்கு நின்றுகொண்டிருந்தாள் தலே கவிழ்ந்தவண்ணம்.

"குந்தளம்! நான் காண்பது கனவு அல்லவே!" என்று மெதுவாகக் கேட்டான் சுந்தரம் அதிர்ச்சியிலிருந்து முற்றும் விடுபடாமல்.

"இல்லே அத்தான்! குந்தளம்தான்! உங்களுடைய மாமன் பெண் குந்தளம்தான். கனவில்லே அத்தான். கனக் கண்டுகொண்டிருந்த எல்லோரும் இப்பொழுது கண்விழித்துக்கொண்டுவிட்டோம்!" என்ருள் அவள்.

குந்தளம் அப்பொழுதுதான் தலேநிமிர்ந்து சுந்தரத்தின் முகத்தைப்பார்த்தாள். அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர்த் திவலேகள் கண்ணுடிக் கன்னங்களின் வழியாக வழிந்து முகவாய்க்கட்டை நுனியில் நின்று நர்த்தனம்செய்தன. "என்னேப் பார்ப்பதற்கு நீங்கள் சந்தோஷப்படவில்லேயா, அத்தான்?" என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு கேட்டாள் குந்தளம்.

"இதற்கு இரண்டு வருடகாலம் தவம் செய்துகொண்டிருந்தேன் குந்தளம். ஒன்று கேட்கிறேன். வனஜா கதை உன் சம்மதத்துடன் எழுதப்பட்டதா? அதன் முடிவும் நீ சொல்லியபடிதான் சாந்தா எழுதினளா?" என்று ஆவலுடன் கேட்டான் சுந்தரம்.

குந்தளம்:- "ஆமாம், அத்தான். வனஜா கடைசியில் தன்னுடைய காதலனையே கல்யாணம்செய்து கொள்ளுவதைத்தானே நீங்கள் கேட்கிறீர்கள்? அந்த முடிவை நான் மட்டுமல்ல, அப்பாவும் அத்தையும்கூட ஆமோதித்திருக்கிறார்கள். அவர்களுடைய பரிபூரண சம்மதத்துடனேயே வனஜாவை சாந்தா இவ்விதம் முடித்தாள்.

சுந்தரம்:- அப்படியா! உண்மையில் தெய்வத்துக்கு ஈவிரக்கமிருக்கிறது! நன்றிகெட்ட கற்சிலையென்று கடவுளை நான் சபித்ததெல்லாம் அநியாயம். கடவுள் ஒருவர் இருக்கத்தான் செய்கிறார். இல்லாவிட்டால் இவ்வளவு பெரிய அதிசயங்கள் நடக்கவே நடக்காது.

குந்தளம்:- உங்களுடைய குந்தளப்பிரேமா கதையில் ஒரு அத்தியாயத்தை தற்செயலாக வஸந்தா வாசித்தாள். நவலங்காவில் கமலாலயம் தங்களுடைய புத்தகம் ஒன்றுக்கு விளம்பரம் கொடுத்திருந்தார்களாம். அந்தப் பத்திரிகையின் பிரதி வந்ததும் அதில் குந்தளப்பிரேமா கதையிருப்பதை வஸந்தா பார்த்தாள். கதையின் தலைப்பில் என் பெயர் சம்பந்தப்பட்டிருப்பதைக் கண்டதும் அவளுக்கு சந்தேகம் தட்டியது. உடனே கொழும்பு கிளை ஸ்தாபனத்துக்கு எழுதி நவலங்காவின் பழைய பிரதிகளையெல்லாம் தருவித்து வாசித்தாள். அவளுடைய சந்தேகம் தீர்ந்துவிட்டது. உடனே திருச்சிக்குப் புறப்பட்டுவந்து என்னிடம் சொன்னாள். குந்தளப்பிரேமாவை நானும் படித்தபின் நீங்கள் கொழும்பில் மாறுபெயருடனிருப்பது சந்தேகத்துக்கு இடமில்லாதபடி தெரிந்துவிட்டது. உங்கள் போட்டோவை வஸந்தாவின் கணவர் தருவித்தார். பாக்கி ஏற்பாடெல்லாம் சங்கரிமாமியையும் வஸந்தாவையும் சேர்ந்தது. அப்பாவையும் அத்தையையும் சரிப்படுத்தியது சங்கரிமாமிதான். அத்தைக்கும் கொழும்புக்கு வரவேண்டுமென்ற ஆசை. ஆனால் இந்தத் தள்ளாத வயதில், அதுவும் உடம்பு சரியில்லாத நிலைமையில் இங்கு வரக்கூடாதென்றும் உங்களைக் கையோடு அழைத்துவந்து விடுவதாயும் சமாதானம்சொல்லிவிட்டு வந்திருக்கிறோம்.

சுந்தரம்:- என்னை இந்தியாவுக்கு அழைத்துப்போகவா வந்திருக்கிறீர்கள்?

குந்தளம்:- அத்தானுக்கு இனிமேல் துறவறம் வேண்டாம். கிரகஸ்தாச்ரமம் இல்லாமல் துறவறம் பலன்கொடுக்காது. சாந்தாவின் கதை இலக்கியத்தில் முடிந்தாலும் நிஜ வாழ்க்கையில் இன்னும் முடியவில்லை அத்தான். அந்தக் கதையை நிஜமாக்கி உங்கள் குந்தளப்பிரேமாவையும் முடிக்க வேண்டாமா?

சுந்தரம்:- என்னைப்போல பாக்கியசாலி இந்த உலகத்தில் இல்லை குந்தளம். உன் தெய்வீகமான அன்புக்கு நான் என்ன சொல்லுவேன்!

குந்தளம்:- நீங்கள் ஒன்றும் சொல்லவேண்டாம். பேசாமல் புறப்பட்டு எங்களுடன் இந்தியாவுக்கு வந்தால் போதும்.

சுந்தரம்:- இந்த வழக்கு விஷயம் ஒருவிதமாக முடிய வேண்டும். அந்த சாந்தா எங்கே? இங்கே இருப்பதாகச் சொன்னார்களே! நீ மட்டும் அவளிடமிருந்து ஒரு கடிதம் வாங்கிக் கொடுத்துவிடு. உடனே நான் புறப்பட்டுவிடுகிறேன்.

குந்தளம்:- ஆமாம், அவளை மறந்துவிட்டோமே. கூப்பிடட்டுமா? என்னமாதிரி கடிதம் அவளிடமிருந்து வேண்டும் அத்தானுக்கு!

சுந்தரம்:- குந்தளப்பிரேமா அவளுடைய வனஜாவைப் பார்த்து காப்பியடித்ததில்லையென்று அவள் கைபட ஒரு கடிதம் வாங்கிக் கொடுத்தால் அதை நவலங்காவில் பிரசுரித்து என்மீதுள்ள அபாண்டமான பழியைப் போக்கிக் கொண்டு புறப்பட்டுவிடுகிறேன்.

குந்தளம்:- ஒரு கடிதம் என்ன! கூடைகூடையாக எழுதிக்கொடுக்கிறேன். கடிதம் எதற்கு அத்தானுக்கு! குந்தளப்பிரேமாவின் கடைசி அத்தியாயத்தை நானே எழுதி முடித்துவிடுகிறேனே!

சுந்தரம்:- நீயே எழுதித் தருகிறாயா? அப்படியானால் அந்த சாந்தா நீதானா? என்று திகைப்புடன் கேட்டான்.

குந்தளம்:- நான்தான் சாந்தா; சாந்தாதான் நான்! ஒரு சமயம் என்னைக் கதை எழுதும்படி நீங்கள் சொல்லவில்லையா? நான் எழுதிக்கொடுத்தால் கமலாலயத்தில் சொல்லி அதைப் புத்தகமாகப் பிரசுரிக்கச் சொல்லுகிறேனென்று என்னுடைய புத்தகசாலையில் நின்றுகொண்டு ஒருநாள் சொன்னீர்களே, அதை மறந்துவிட்டீர்களா? அப்பொழுது நான் இரவுபகலாக ஏதோ எழுதிக்கொண்டேயிருப்பதாக முனிசாமிகூட உங்களிடம் சொல்லவில்லையா?

சுந்தரம்:- ஆம், இப்பொழுது ஞாபகம் வருகிறது.

குந்தளம்:- வஸுமதியும் நானும் சேர்ந்து படித்தவர்கள். சிறு பிராயத்திலிருந்தே கதைகள் படிப்பதிலும் எழுதுவதிலும் எனக்குப் பற்றுதலுண்டு. நீங்கள் தனிமையில் படித்துக்கொண்டிருந்தபொழுது வஸு என்னை ஏதாவது கதை எழுதிக்கொடுக்கும்படி ஓயாமல் தொந்தரவு செய்துகொண்டிருந்தாள். என்னுடைய பெயர் கண்டிப்பாக எக்காரணத்தை முன்னிட்டும் யாருக்கும் தெரியக்கூடாதென்று சத்தியம் வாங்கிக்கொண்டு சாந்தா என்ற பெயரில் நான் ஒரு புத்தகம் எழுதினேன். அந்தப் புத்தகத்துக்குக் கிடைத்த வரவேற்பு என்னை உற்சாகப்படுத்தியது. சாந்தாவின் புத்தகத்தை உலகமே புகழுவதைப் பார்த்து நீங்கள் பொறுமைப்படுவதாக வஸு எனக்கு எழுதினாள். அது மேலும் மேலும் புத்தகங்கள் எழுதி வெளியிடவேண்டுமென்ற என் ஆவலைத் தூண்டியது. இந்து சமூகத்தின் சீர்கேடான நிலைமையையும் சமூகத்தில் நடக்கும் அக்கிரமங்களையும் கதைரூபமாக அம்பலப்படுத்தவேண்டுமென்ற ஆசையும் ஏற்பட்டது. இதற்கு புனைப்பெயர் ரொம்ப உபயோகமாயிருந்தது. வனஜாவை எழுதியது நான்தான் என்பது தெரியாமலே அதை நான் படிக்கக்கூடாதென்று அப்பா என்னிடம் கேட்டுக்கொண்டார்! அதிலிருந்து இரண்டு பக்கங்களை சங்கரிமாமி கிழித்துக்கொண்டுவந்து என்னிடம்

காட்டி விதவா விவாகத்தின் நியாயத்தைப்பற்றி என்னுடன் விவாதித்தாள். நீங்கள் கொழும்பிலிருப்பது நிச்சயமாகத் தெரிந்து அப்பாவும் அத்தையும் என் இஷ்டப்படி நடக்கத் தயாராகும்படி சங்கரிமாமி செய்தபிறகுதான் சாந்தா நான் தானென்பது அப்பாவுக்குத் தெரியும். வனஜாவின் கதை முடிவை அப்பாவும் அத்தையும் இப்பொழுது பூரணமாக ஆமோதிக்கிறார்கள் அத்தான்.

சுந்தரம்:- என்னால் நம்பவேமுடியவில்லை, குந்தளம்! இன்று பொழுதுவிடிந்ததுமுதல் ஒவ்வொன்றும் அதிசயமாக ஏற்பட்டு என்னை திக்குமுக்காடச்செய்கின்றன.

குந்தளம்:- உண்மையைத் தெரிந்துகொள்ள அத்தானுக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டது. ஆனால் அதை நீங்கள் கைநழுவவிட்டீர்கள். கிராமக் கோவிலில் நடந்ததை சற்று நினைவுபடுத்திப்பாருங்கள். உங்கள் நெஞ்சில் சாந்தா இருக்கிறாளென்று நான் சொன்னபொழுது நான் நினைப்பது தவறு. என்னைத் தெய்வம் கைவிட்டுவிடும் என்று நீங்கள் சொல்லவில்லையா? அந்தத் தெய்வம் என்னைக் கைவிடாமல் கைகொடுத்துக் காப்பாற்றிவிட்டது, அத்தான்!

இப்படி குந்தளம் சொல்லிக்கொண்டிருக்கையில் இருவரும் சிறு குழந்தைகளாயிருக்கையில் அவர்களுக்கு வேடிக்கைக் கல்யாணம் செய்துவைப்பதற்கு உபயோகித்த அதே மேளவாத்திய கிராமபோன் பிளேட் இயங்கும் சப்தம் கேட்டது.

"மேளம் ரெடி! எல்லோரும் வரலாம்!" என்று சொல்லி பொக்கைப் பற்களைக்காட்டி சிரித்துக்கொண்டே பக்கத்து அறையொன்றிலிருந்து முனிசாமி வந்தான். குந்தளத்துக்கும் சுந்தரத்துக்கும் நடந்த சம்பாஷணையை கதவு மறைவிலிருந்து முழுவதும் கேட்ட பிரேமா, லீலா, வஸுமதி முதலியோர்களும் கலகலவென்று சிரித்துக்கொண்டு உள்ளே நுழைந்தார்கள்.

"நேரமாச்சு! முகூர்த்த நேரம் தவறிவிடப்போகிறது! மாலை மாற்றியாகட்டும்!" என்று சொல்லி இரண்டு மாலைகளை நீட்டினான் முனிசாமி.

"இந்தப் பொல்லாத பெண்தானா ஆசிரியர் ரமணியை இந்தப்பாடுபடுத்தினவள்! அதற்குச் சரியான தண்டனை இதுதான்! மாலையைப்போட்டுக் கட்டுங்கள் மிஸ்டர் ரமணி!" என்று சொல்லி முனிசாமியிடமிருந்து ஒரு மாலையை பிரேமா வாங்கி சுந்தரத்திடம் கொடுத்தாள். இன்னொரு மாலையை வஸுமதி வாங்கி, "இந்தப் போக்கிரி அத்தானுக்கு எத்தனை ஏங்கினாய்? எத்தனை புத்தகம் எழுதினாய்? கண்ணாபின்னா என்று எனக்கும் எத்தனை கடிதம் எழுதினாய்? இப்பொழுது சொல்லு அரைலட்ச ரூபாய் நஷ்டஈடு வேண்டுமா? அல்லது அத்தான் வேண்டுமா என்று?" எனக் கேட்டுக்கொண்டே மாலையை குந்தளத்திடம் கொடுத்தாள்.

"ஏன் நேரமாகல்லை! மாலை மாற்றியாகட்டும்! நல்ல நேரம் இது!" என்று சொல்லிக்கொண்டு பாஸ்கரய்யரும் கேசவனும் உள்ளே பிரவேசித்தனர்.

**முற்றிற்று**